ஸ்ரீ

# முகவுரை. 5310

சோழர்குலத்துதித்த திருத்தக்கதேவரென
வஞ் சயினமுனிவர் மதுரையிலே சங்கப்பலகை
பெற்றுச் சங்கப்புலவரோடு தமிழாராய்ந்துகொண்
ருக்கையில் அச்சங்கப்புலவர் திருத்தக்கதேவரை
நோக்கி நுஞ்சமயத்தார் பாடவல்லருந் துற
வினைப்பாடத் தெரிந்துகொண்டாரேயன்றி கா
மவின்பத்தைப்பாடத் தெரிந்துகொண்டாரல்லர்
பாரு மென்றார். என்றார்க்குத் தேவர் எமம
ர் காமவின்பத்தைப்பாடத் தெரியாதவரல்லர்; அ
னைவெறுத்துப் பாடாராயினரென்றார். என்றா
ர்க்குச் சங்கப்புலவர் ஆனால் இன்பச்சுவையை முழு
தும் அமைத்துத் தேவரே ஓர் நூற்செய்கவென்றார்.
தேவர் தமக்குச் சங்கப்புலவர் கூறியதைத் தம்மா
சிரியர்க்குக் கூறினார்; கூறினார்க்கு ஆசிரியர் காவி
ய இனிதுமுடிதற்பொருட்டு அருகனைப் பிரார்
த்தித்துச் *"செம்பொன் வரைமேல்" என்னுஞ் செய்
யுட்பாடிக் கொடுத்து இதனைக் கடவுள்வாழ்த்தா
க்கொண்டு சங்கப்புலவர் புகன்றவாறு இன்பச்சு
வைப் பெரிதும் அமைத்துச் சீவகன் கதையை

## கடவுள் வாழ்த்து.

*செம்பொன் வரைமேற் பசும்பொ னெழுத்திட் டதே
லம்பொற் பிதிர்வின் மறுவா யிரத்தெட் டணிந்து பா
வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி விண்ணோ
ரம்பொன் முடிமே லடித்தா மரைசென்னி வைப்பாம்.

யொரு பெருங்காப்பியமாகச் செய்க வென்றார். தேவர் *"மூவா முதலா" என்னுங்கவியைப்பாட ஆசிரியர் கேட்டு இக்கவி யான் பாடியதினு நன்றாயிருத்தலால் இதனை முன் வைக்க என்றார். தேவர் தாம் பாடிய சித்த சரணத்தை முன்வைத்து ஆசிரியர் பாடிய அருக சரணத்தைப் பின்வைத்து எட்டுத் தினத்தில் இரண்டாயிரத்தெழுநூறு பாட்டுக்களைப் பாடினார். எவ்வாறென வெனின், தோன்றுந்தோற்றத்துறைபல முடிக்கவல்ல தேவர் சங்கப்புலவர் கூறியதைக் காரணமாகக்கொண்டு புத்தகத்தை யெடுப்போர் கையிலும் படிப்போர் நாவிலுங் காமச்சுவையே யூறும்படியுங் காமம் தீதென்று அதனை வெறுத்துக் கூறுமிடத்தும் அதனில் விருப்பமே விளையும்படியும் பாடினார்.

† மகளிர், காமக் குறிப்புக்களைக் கருவியாகக் கொண்டு காமவின்பத்தை அள்ளி யுண்ணும்படி பழிப்பித்துச் சீவகனைப் பார்த்தாரென்றும் அவனை நெகிழாத துறவின் கண்மேலே வைரமனத்தனென்றும் பாடுகின்றனர். அவர் பழிப்பித்ததாய் இவர் பாடியது பொய். அவன் வயிரமனத்தனாயினனென்று கூறுதலானும் இவர் காமச்சுவை

* மூவா முதலா வுலகமொரு மூன்றுமேத்தத்
தாவாதவின்பந் தலையாயது தன்னினெய்தி
யோவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதிதேவனவன் சேவடிசேர்து மன்றே.

† இப்பொருளை முத்தியிலம்பகம் ௨௯௪-ஆவது பாட்டிற் காண்க.

லே தவறிக கூறிய சிலவற்றுள் † நச்சினார்க்கினியர் குலவன் முடிசூடிய தோன்றெழிந்த பிறவற்றைப் போற்றி விடைகூறிச் சிந்தாமணிக் குரை யெழுதினார்.

அவர் தாமஎன் செய்வர்; சீவகன், சிறைப்படுதற்கன்றிக் கட்டுப்படுதற்கு முற்பிறப்பிற் றீவினையின்மையின், தேவரும் கந்தியாரும் சீவகன் கட்டுப் பட்டானென்று பாடிய பாட்டுக்களெல்லாவற்றிற்கும் அச்சீவகன் சிறைப்பட்டானே யன்றிக் கட்டுப்படவில்லையென்று பொருள் கூறினர். குணமாலையாரிலம்பகம், உ௩௯, உ௪௧, உ௪உ, உ௫உ, உ௫௫, உ௬௩, உ௬௯; உ௬௬, முத்தியிலம்பகம், உ௫௫, உ௭௭, உ௯உ, இப்பாட்டுக்களினுரையிற் காண்க. அவற்றுள், உ௫உ-ஆவது பாட்டுக் கண்ணுற்கண்டார் கூற்று; அதற்குக் கூக்கவிடையே கூறினர். கேமசரியாரிலம்பகம், ௬௯-ஆவது பாட்டுரையில், தோரை -முங்கிலரிசி யென்றார் ஆசிரியர்; இலம்பகம், ௧௧-ஆவது பாட்டில், "போகுபர் நீள்கழை, நெல்லு நீர் விளைகேழுக் தோரையும், என்று பாடியதற்குத் தோரை-ஒருநெல் என்றார். கனகமாலையாரிலம்பகம், ௧௪௮-ஆவது பாட்டில், தத்தை கூற்றைத் தேவர் கூற்றாக்கினர்; தேவர் கூற்றைத் தத்தை கூற்றாக்கினார்; பின்பு அவள் கூற்றுமாம என்றார்.

இவைபோல்வன இன்னுஞ்சிலவுள; அவை நிற்க. பாட்டையுமஉரையையும படித்துப்பொருளுணர்வோர் இக்காலத்திற் சிலரே யாதலானும்சிந்தாமணியுரையும் நச்சினார்க்கினியர் கூறியவாறே உய்த்துணரவல்ல சிலர்க்கன்றிப் பலர்க்கும் பயன்படா

---

† இது இதிற பதிறுன்காமையமாயுள்ளது.

மையானும் இக்காலத்திற் பலரும் உரையையே விரும்புதலானுஞ் சீவகன் சரித்தத்தை யென்னுலியன்றவாறு உரையா யெழுதி யச்சிட்டேன்; சரித்தத்தை யான் ஒரு சிறிதுஞ் சுருக்கவுமில்லை, பெருக்கவுமில்லை வேறு படுக்கவுமில்லை, ஆனால், தொடர் நிலைச் செய்யுளில் மகளிர் வருணனையும் பிறவருணனையும் மிகமலிந்திருத்தலால அவற்றுள் மிகவு நல்லனவற்றை யெடுத்துக்கொண்டு மிகுந்தவற்றை நீக்கி யென்னுடைய சிற்றறிவிற் கெட்டிய மட்டில நூலாசிரியர் கருத்தையு முரையாசிரியர் கருத்தையும் ஒருவாறுணர்ந்து உரையாசிரியர் கூறிய விசேடவுரைகளையு முரையிலமைத்துச் சிறியேனுலியன்றமட்டிற்றொடர்நிலைச் செய்யுட்கிணங்க வொருவாறுசெய்யப்பட்டிருத்தலால் நச்சினார்க்கினியர் அத்தொடர்நிலைச் செய்யுளிற் கூறிய இலக்கணமும் மேற்கோளும் இதற்கு மொக்கு மென்று கருதியும் இக்காலத்தில் இலக்கிய முணர்ந்தோரும் அவருள் இலக்கண முணர்ந்தோரும் அவருள் இலக்கணத்தை எடுத்தாளுந் திறனுடையோரும் சிலரே யாதலால் இலக்கியத்தோடு சிறிது இலக்கணத்தையுஞ் சேர்த்துக் கற்க விரும்புவோர்க்குச் சிறிது பயன் படுமென்றெண்ணியும் அவ்விலக்கணச் சூத்திரங் களையும் மேற் கோள்களையும் ஆங்காங்குப் பதித்தி ருக்கின்றேன்.

நச்சினார்க்கினியர் தொடர்நிலைச் செய்யுளிற் சிலவற்றிற்குக் கூறிய விலக்கணங்களை யான் நன் குணராத குற்றத்தினாலோ அறியேன; என் மனத் திலையமே நிகழா நின்றது; எனதையங்களை யீண் டுக் கூறுகின்றேன்.

௧. நான்-திசைச் சொல்லாம். எத்திசைச் சொல்? வேறு சான்றோர் செய்யுளிற் பயின்றுள்ளதா?

௨. "இதெய்வம் நம்பியைப் பள்ளிசோத்தினபொழுதே தேவிகருதியதனை ஆசிரியனுணர்ந்து ஈண்டுக்கூறுகின்றான்," என்கின்றார். ஆசிரியனோ "அங்ஙனம் கேட்டளவிடுதற்கரிய வார்த்தையும் வனப்பும் நின்னைப் பிறப்பை அறிவித்தன" என்கின்றான். ஆதலாற் சீவகன் பிறப்பை ஆசிரியன் யாண்டுணர்ந்தானோ?

௩. அந்தணரை வீரரென்கின்றார். "அந்தணாளர்க் கரசு வரைவின்றே" என்றாராயினும் யாழ்வாசிரியிலே அந்தணரை வீரரென்றன மரபோ?

௪. வண்டிற்குச் செவியுண்டாம். உண்டோ?

௫. பெண்கள்விடா. பெண்கள் சாதிப்பன்மையாம். ஆண்டு உயர்திணைப் பெண்பன்மையன்றிச் சாதிப்பன்மையென்றல் பொருந்துமா?

௬. இது இயக்கி, இயக்கி தெய்வமாயினும் இது வென்று சுட்டலாமோ? இயக்கியென்னுஞ்சொல் லாறுபற்றி மகடூஉ வினைகொள்ளுமோ? பொருண்மைபற்றி அஃறிணை வினை கொள்ளுமோ? அன்றி இரண்டுவினையுங் கொள்ளுமோ?

எ. அம்மா—விளியாம. அம்மை—அம்மா வென்று விளியேற்குமா?

அ. நீம், நும்மென்னுஞ் சொல் நீயிரென்று முழுவதுந் திரியாது மகர நிற்பத் திரிந்து நீமென நின்றது. இனி நிமென்று ஓர் திசைச் சொலலுமாம என்கின்றார். நும், நீயிரென்றலலது நீமென்று திரியுமோ? அன்றித் திசைச் சொல்லாயின் எத்திசைச் சொல? வேறு சான்றோர் செய்யுளிற் பயின்றுள்ளதா?

௯. அழகிய இடும்பை யெனகின்றா. அழகு இடும்பைக்கு அடையோ?

க0. கடலையும வரைகளையும் நீந்தி யென்கின்றா. பொதுவினையாற் கூறாது ஒன்றற்குரிய வினையாற் கூறிய தெனனை?

கக. தமபெருமான்-ஓங்காரத்தோற்று மகரஉ வுணர்த்திற்று என்கின்றார். ஓங்காரத்தோ றறு மகரஉ வுணாத்துமேனும பெருமா னென்னுஞ் சொல் மகரஉ வுணர்த்துமா?

க௨. ஒன்று மூழ்த்தம்-ஒருமுகூர்த்தம் என்றுமாம் என்கின்றா. ஒரு முகூர்த்தம ஒன்று மூழ்த்தம என்றாகுமா?

க௩. "செய்ப வைத்தாணபிறந்தாரகளன்றே" பலாபால், ஒன்றன்பால் வினை கொள்ளுமோ?

கச. வணிகன் முடியுடை அரசனாதலுண்டோ? இல்லையென்கின்றார் நச்சினார்க்கினியர். ஆயின் தேவர் யாங்ஙனங் கூறினார்?

கரு. தேனுங் கள்ளு முண்ணாதி யென்று வேட்டுவனைத் திருத்திய சீவகன் தானும மதுவுண்டு தன தேவியர்க்குந் தேறலையும மதுவையுங் கொடுத்தான். வேட்டுவனுக்கு அறமோதிய இவனே யெங்ஙன முண்டு தேவியரையு முண்பித்தான்? அல்லது தேவர் மறந்து கூறினாரோ?

மேற் குறிக்கப்பட்டன வன்றி இன்னுஞ் சில வுள; விரிதற் கஞ்சி அவற்றை யீண்டுக் குறித்திலேன். வசனத்தி லெடுபடாத வற்றுக்கு * இக்குறி யிடப்பட்டிருக்கின்றது.

மேலேகூறப்பட்டவைகள் தொடர்நிலைச்செய்யுளில் இன்னசெய்யுளிலும் வசனத்தில் இன்னபக்கத்திலும உள்ளனவென்று முன்னர்க்குறிக்கப்பட்டவற்றாற் காண்க.

| | | |
|---|---|---|
| க. | தொடர் நிலைச்செய்யுள்காமகளிலம்பகம் பாட்டு. | உகூரு. |
| | வசனத்தில்நின் றன்னதுபக்கம | உஉ. |
| உ. | ,, * நாமகளிலம்பகம பாட்டுஙூரு. | |
| | ,,* ,, ,, | ஙூளரு. |
| ங. | ,, காந்தருவதத்தையாரிலம்பகம பாட்டு. | களஎ. |
| | வசனத்திற் பக்கம. | ருரு. |

கள் கிடந்து பேய்களாடிக் கழுகுறங்கும் மயானத்
தே தமியளாய்த் தீவினையின் வண்ணமாய் வீழ்ந்து
சீவகனைப் பெற்றுப் புலம்பினமையாலே ஒருவர்
க்கு உயர்வுந் தாழ்வும் இன்பமுந் துன்பமும் மாறி
மாறி வருமென்பதும், பொருள் செய்ய முயற்சி
வேண்டுமென்பதும், பொருளாலே எல்லாத் துப்
புரவுகளு முளவாமென்பதும், ஒரு குடியிற் பிறந்
தோன் அக்குடி வருமையுற்றுத் தளருங்காலத்துப்
பழிச்சொற் பிறவாமற் பொருட்டேடி ஆலின் வீழ்
போல அதனைத் தாங்கவேண்டுமென்பதும், தீவி
னையுடையான் கடலோடி மலையேறித் திரியினும்
அவற் கொருசிறிதும் பொருள் சேராதென்பதும்,
* நல்வினையுடையான் ஒரு முழநீளம் நடக்கமாட்
டாதவனாயினும் பொருடானே வழிகேட்டு வந்து
அவனிருக்கின்ற இடத்திலே சேருமென்பதும்,
செல்வம் ஒருவர் மாட்டும் நிலைக்கமாட்டாதென்பது
ம், சீவகன் சுதஞ்சணனை நோக்கி வீரா யானைத்
தொழுவோடு தன்னைச்சூழ்ந்த காலத்தில் அவனை
நினைப்பதாகக் கூறி அங்ஙனமே வீரர் சூழ்ந்து
சிறைசெய்தபொழுது அச்சீவகன் அச்சுதஞ்சண
னை நினைத்து அவனாலே மீண்டமையானும் மாலை
யென்பாள் யானையைக் கண்டஞ்சி ஆண்மக்களில்லை
யோவென்று கூவிய தானும் பிழைத்துக் குணமாலை
யையும் பிழைப்பித்தலானும் ஊழ் அவ்வவர்க்காத்

---

இலக்கணையாரிலம்பகம்.

* பெருமுழங்குதிரை வரைகணீந்திப் பிணியுறினும்
திருமுயங்கலில்லை யெனினில்லை பொருளீட்ட
மொருமுழமுஞ் சேறலிலரேனும் பொருணோக்கே
வருமவழிவினையுழந்து வாழ்க தவமாதோ. கஎ௬.

திற்குரிய அறிவைத் தோற்றுவிக்குமென்பதூஉம், சீவகன் கட்டியங்காரனது யானையையோட்டிப் பெண்ணுயிரைக்காத்து அக்கட்டியங்காரற்கு வடுவுண்டாகாமற்காத்ததை அவன் பெருங்குற்றமாகக் கொண்டு அச்சீவகனைச் சிறைசெய்து கொல்லவுந்துணிந்தமையாலே பகைவற்குச் செய்யுநன்மையுந் தீமையாய் முடியுமென்பதும், சீவகன் முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைப் பறவையினின்றும் பிரித்துச் *சிறைசெய்தமையாலே அவன் தன்னைப் பெற்றாரைப் பிரிந்து கட்டியங்காரனாற்சிறை செய்யப்பட்டமையின் வினை தன்பயனை யூட்டாது கழியாதென்பதும், சீவகன் சிறை செய்யப்பட்டபொழுதே சுதஞ்சணனால் மீட்கப்பட்டமையாலே ஒருவர்க்கொரு முகூர்த்தத்திலே துன்பமும் இன்பமும் உளவாகு மென்பதும், ஆம் பொருள் ஆகும்; போம் பொருள் போகுமாதலாற் பகைவனாக்கத்திற்குந் தன்னழிவிற்கும் வருந்த வொண்ணாதென்பதும் சீவகன் றமியனாய் யானைக் கோட்டுளசப்பட்டுப் பிழைத்தமையானுங் கட்டியங்காரன் தாமரைவியூகத்துளிருந்துஞ் சாதலானும் நல்வினை தீவினைகளின் செய்கை இத்தன்மைத்தென்பதும், நன்றிகெட்ட கட்டியங்காரன் றன்னையாக்கிய அரசனைக் கொன்ற பின்பும் உயிர்வாழ்ந்து அரசாண்டிருந்தமையாலே காலத்தின் மகிமை இத்தன்மைத்தென்பதும், பின்பு கட்டியங்காரன் மக்கணூற்றுவரோடு போர்க்களத்தின் மாண்டமையாலே ஒன்றற்காகும் ஊழ் ஒன்றற்காகா தென்பதும், நல்லோர்க்குஞ் சிறிது தீவினை

* சிறைசெய்தல்—ஈண்டு இயங்காமற்றடுத்தல்.

பாலே இடர் வந்தவிடத்துக் களைகண் அறக்கட
வுளே யென்பதும், நல்லோரும் முன்செய்த தீவினைப்ப
யனை நுகரவேண்டு மென்பதும், ஊனுங் கள்ளு
முண்போர்க்கு நற்கதியில்லை யென்பதும், சீவகன்
விளையாடிய ஆலமரம் புண்ணியம் அடையுமாறுகருதி
பசுக்களுக்கு நிலம் விட்டமையாலே அறஞ்செய்து
அதன்பயனை ஓரறிவுயிரும் அடையச்செய்தலுமுண்
டென்பதும், நாற்கதியின் றுன்பங்களின் தன்மைய
வென்பதும், தானமுந் தானப்பயனும் இத்தன்மை
ய வென்பதும், சீலம் இந்தன்மைத் தென்பதும்,
இவைபோன்ற பிறவுமாம்.

இன்னுங்கூறின், அரசர் ஒற்றுருகவிடும் பற
வைச் சாதிகளுமுண்டென்பதும், தலைவனுந் தலைவியுந்
துயிலக் கோடற்கிரண்டும் போகநுகர்தற்கொன்று
மாக அமளிமூன்று வேண்டுமென்பதும், எலிமயி
ராலே போர்வையும் பட்டுமுண்டென்பதும், மக
ளிர்போலத் தோன்றி ஆடவரைக்கூடி அவருயிரை
யுண்ணும் பேய்களுமுண்டென்பதும், மந்திரத்தாலே
மறையப்பெய்தலுமுண்டென்பதும், மந்திரத்தாலே ஒரு
த்தி ஒருவன் வயமாதலுமுண்டென்பதும், மக்கள் வடி
வாய்ப்பழுக்குங் கிழுத்தமென்னு மாமுண்டென்ப
தும், பலவகை மலர்களோடு பலாச்சுளையைச் சேர்
த்து மாலைகட்டுவதுமுண்டென்பதும், படிக்கும்படி
எழுத்தின் வடிவுதோன்ற மலராலே ஓலைப்பாசுர
மான மாலை கட்டுவதுமுண்டென்பதும், இளவேனிற்
காலமுதலிய காலங்களில் தங்குமிடமும் சூடும்பூ
வும் அணியுங்கலனும் உடுத்துமாடையும் உண்
ணுமூணும் வெவ்வேறென்பதும், இவைபோன்ற
பிறவும் இந்நூலாலே அறியத்தக்கனவாம்.

முகவுரை முற்றிற்று.

ஸ்ரீ

# சீவகன் சரித்திரச் சுருக்கம்.

ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரமென்னு நகரிலே அரசாண்ட சச்சந்தன் அமைச்சர் சொல்லைக் கேளாமல் தன்னரசைக் *கட்டியங்காரன் வயமாக்கி யெப்பொழுதுந் தன்னுரிமையோடு அந்தப்புரத்திலே வதிந்தான்; வதிந்தவன் ஒரு தச்சனைக் கூவிப் பறக்கும்படியான எந்திரமயிலொன்று செய்யென்று பணிப்ப அத்தச்சன் கிழிமுகசியவாறும் மயிலொன்று செய்து உயிர் மயிலொன்றையுஞ் சேர்த்து வேந்தனிடங் கொண்டுபோய் அரசே! இவற்றில் உயிருடைய மயில் யாது யான் செய்த மயில்யாது சொல்லுவென்றான், மன்னன் அறிந்து வியந்து தச்சனுக்குப் பொன்னைக் கொடுத்தனுப்பிப் பொறியை முயக்கி யெந்திரமயிலேறும்படி தேவிக்குக் கற்பித்து விளையாடினான். கட்டியங்காரன் அரசனது வெறுமையைப் பார்த்து அவனைக் கொன்று அரசைத் தனதாக்கிக்கொள்ள வெண்ணி அரசன் புறத்தைச் சிறைப்படுத்திச் சேனையோடு அரண்மனையைச் சூழ்ந்தான். மன்னவன் கேட்டுச் சந்துகொண்டிருந்து தன்னுரிமையை யெந்திரமயிலேற்றி ஆகாயவழியாய்ச் செல்லவிட்டுப் போர்புரிந்தான். செய்ந்நன்றி கொன்ற கட்டியங்காரன் தன்னை அரசாக்கிய அரசனைக் கொன்று தன் பெயரால் முரசறைவித்தான். இதென்ன பாவம்.

* கட்டியங்காரன்—அமைச்சருளொருவன்.

எந்திரமயிலேறிச் சென்ற தேவி விசயை முரசொலியைக்கேட்டு மனந்தளர்ந்து மெய்சோர்ந்து பொறியைத் திரிக்காமற் கையோய்ந்ததலாலே மயில் பறந்து செல்லாமற் சுடுகாட்டில் விழுந்தது. தேவி அந்தப்பொழுதிலே அழகுப்புதல்வனைப் பெற்று வருந்தினாள். அப்பொழுது ஒரு தெய்வம் செண்பகமாலை யென்னுங் கூனிவடிவாய் வந்து தேவிக்குச் சிலமொழிகூறி அவளைப் பக்கத்தில் அழைத்துக் கொண்டுபோய் நின்றது. அன்று மகவை யிழந்த கந்துக்கடன், பிள்ளை இங்ஙனம் பிறத்தலை முந்திய ஒரு முனிவன் கூறக் கேட்டிருந்தானாதலால் அம்முனிவன் சொல் தப்பாதென்று அன்றிரவிற் சென்று பிள்ளையை யெடுத்துப்போய்த் தன் மனைவி சுநந்தை கையிற் கொடுத்தான். அவள் வாங்கி வளர்க்க அவன் வளர்ந்து சீவகனெனப் பெயர்கொண்டு கலைகள் பயின்று வல்லனாயினான்.

கட்டியங்காரனாகிய அரசனது பசுக்களை வேடர் கவர்ந்து செல்ல அவனால் அவற்றை மீட்கமாட்டாமையாற் சீவகன் நல்லொழுக்கம் பசு துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பாரென்பாரை யான் காவேனெனின் பசுக்களைப் பறிகொடுத்துப் பாலடிசிலுண்டிருக்கின்ற கட்டியங்காரனுக் கடவே னென்று கூறிச் சென்று வேடரை வெருட்டி நிரை மீட்டான். ஆயருட்டலைவனான கோவிந்தன் மகிழ்ந்து தன் மகள் கோவிந்தையைச் சீவகற்குக் கொடுப்ப அச்சீவகன் அக்கோவிந்தையைப் பதுமுகற்கு மணம்புரிவித்தான்.

சீதத்தன் பொருள் செய்ய மரக்கலமேறிச் சென்று மீள்கையிற் கடலிற் கலங்கவிழ்ந்தது போலக் கண்டு ஒரு திட்டிலேறி ஆங்குவந்த தரனை நோக்கித் தானுற்றதைக் கூறி அவனோடு வெள்ளிமலை சென்று ஆங்கு அரசனைக் கண்டான்; அவ்வரசன் சீதத்தனோடு உறவு கொண்டாடித் தன்னுடைய மகள் காந்தருவதத்தையோடு வீணைவாசித்து வென்றவருக்கு அவளைக் கொடுக்கும்படி அவனோடனுப்பினான். சீதத்தன் அவளோடு கடற்கரைசார்ந்து கலத்தைத் தரன் காட்டக்கண்டு மகிழ்ந்து இராசமாபுரஞ் சென்று தத்தையை வரவைக் கட்டியங்காரற் குணர்த்தி இசைவல்லாரைக் கூட்டினான்; அவரெல்லாரும் வீணைவாசித்துத் தத்தைக்குத் தோற்கச் சீவகன் சென்று தத்தையது வீணையை வாங்கி நரம்பைத் தெறித்து அதிற் கிடந்த மயிரை யெடுத்துக் காட்டி வாசித்து அவளை வென்றான். கள்ளராற் புலியைக் குத்துதல் போலக் கட்டியங்காரன் அரசராற் சீவகனை வெல்லக்கருதிப் பகைவிளைத்துப் போருண்டாக்கினான். சீவகன் அரசரை வென்று தத்தையினு மினிய சொல்லுடைய தத்தையை மணந்தான்.

இராசமாபுரத்தார் நீராடுதானஞ்செய்து நீராடச்சென்றபொழுது குணமாலையுஞ் சுரமஞ்சரியும் சுண்ணங்காரணமாகத் தம்மிற் பகைத்தார். அவர் தோழிகள் அவ்விருவரது சுண்ணங்களைச் சீவகனிடங்காட்டி இவற்றில் நல்ல சுண்ணம் எதுவென்று கேட்க அவன் வண்டுகளைக்கூவி அவற்றாலே நல்ல சுண்ணத்தைத் தெரிவித்தான். ஆங்குச்சோலையில் அந்தணர்க்காக்கிய சோற்றை ஒரு

நாய் உண்ண அந்த அந்தணர் அடித்துக் கொல்லச் சீவகன அந்நாயின் காதில் மந்திரமோதி அதைத்தேவனாக்கினான். கட்டியங்காரனது யானை குணமாலையைக் கொல்லவோடுகையிற் சீவகன, கட்டியங்காரன பகைப்பனென்று கருதாது பெண்ணுயிர் சாதற் கிரங்கி அவ்யானையை யோட்டி அக்குணமாலை வேட்டவாறு அவனை வேட்டான். சீவகனுடைய காரணத்தாலே யானை முனிந்து கவளங்கொள்ளாதிருக்கக் கட்டியங்காரன் கண்டு கோபித்துத் தன் மைத்துனனாகிய மதனனையேவிச் சீவகனைச் சிறைசெய்தான். அவ்வளவிலே சீவகன் தான் மந்திரமோதியாக்கிய தேவனை நினைக்க அவன் காற்றும் மழையுமுண்டாக்கி வந்து சீவகனை யெடுத்துச் சென்றான். மதனன் சீவகனைக் காணாது வருந்திக் கட்டியங்காரனிடஞ்சேரற்கஞ்சி வழிப்போவா னொருவனைப்பிடித்து உருத்தெரியா வண்ணம் நொறுக்கிப்போய்ச்சீவகனைப்பிண்டஞ்செய்தேனென்று கூற அக்கட்டியங்காரன் மகிழ்ந்து மதனனுக்குச் சிறப்புச் செய்தான்.

சீவகன் சிறை செய்யப்பட்ட பொழுதுந்தேவனால் விடப்பட்ட பொழுதும் மனத்துள் வருத்தமும் மகிழ்வுமின்றி ஊழ்வினை யென்றே கொண்டு நீராடிச் சிறைப்பாவம் போக்கித் தேவனோடு அவன் மலையிற் சென்றிருந்தான்; இருந்தவன் அந்தேவனை நோக்கிப் புவியிலுள்ள நாடு நகரம் மலை வனம் யாறு என்பனவற்றைக் காண்பதற்கு எனக்கோரெண்ணமுண்டு, அவற்றைக் காணாதே கூவலிலுறையும் மீன்போலத் தாம் பிறந்த ஊரிலே திரிகின்றவர், வேறு நாட்டு நுகர்ச்சியைக் கைவிட்ட

ந்து மறுநாள் தோழர் முதலிய யாருமின்றித் தனி
யே நகருட் சென்று விமலையை மணந்து தோழரி
டஞ் சென்றான்.

பின்பு சீவகன் கிழவனாய்ச் சென்று ஆடவர்
பெயரைக்கேட்பினும் உயிர்விடும் விரதமுடைய
சுரமஞ்சரியை மயக்கிக் காமன் கோட்டத்தே கொ
ண்டுபோய்த் தழுவிப் பின்பு மணந்து கூடிப் பிரி
வுணர்த்திப் போந்து தோழரோடு தன்மனை சென்
று பின்னர்க் குதிரைகொள்ளும் வணிகனாய் வேட
ங்கொண்டு போனான்.

சீவகன் தோழர் சூழ விசயதேயனுஞ் சென்று
தன் மாமன் கோவிந்தராசனைக்கண்டு படை கூட்டி
இராசமாபுரம் போய்ப் பொருது செய்ந்நன்றி கெட்
ட கட்டியங்காரனை வீட்டினான்.

சீவகன் முடிசூடி அந்தணர்க்குந் தெய்வங்கட்
கும் இறையிலி கொடுத்துக் கண்கெட்டவர்க்கும்
பொருளின்றி வருந்தினார்க்கும் பரத்தையரிடத்து
வேட்கையாலே கொண்டவன் பாதுகாவாத மகளிர்
க்கும் பிறர்க்கும் வீடுகளும் பசுக்களும் நிதியமுங்
கொடுத்தான்.

பின்பு சீவகன் பல நகரங்களிற் றான்மணந்த
மகளிரைத் தருவித்துத் தன் மாமன் கோவிந்தரா
சன் மகள் இலக்கணையை மணஞ்செய்து சிங்காச
னத்திலிருந்து நந்தட்டனுக்கு அரசும் நாடும் வழி
யக் கொடுத்துத் தன்னை வருந்தி வளர்த்த சுநந்தை
க்கு நன்றாகிய தேவி யென்னும் பட்டத்தை நல்கி
நந்தட்டனை இளவரசாக்கி நபுல விபுலர்க்குக் குறு
நிலமன்னர் மகளிரை மணம் புரிவித்து நாடு கொடு

ஸ்ரீ

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல. |
|---|---|---|---|
| 10 | 3 | அமுகா | அழுதா |
| ,, | 7 | மாதரின்பக்திலும | மாதரினபதிநிலும் |
| ,, | 9 | ஒழுகுகலாலே | ஒழுகுதலாலே |
| ,, | 21 | தெயவங்கட்குக | தெய்வங்கட்குக் |
| 12 | 19 | புருவமாக்கி | புருவமாக்கிக |
| 13 | 18 | நினைத் | நினைக் |
| 14 | 7 | ஆகறும | ஆதறும் |
| 16 | 27 | கீக | நீத |
| 20 | 1 | கருகின் | கருநின் |
| ,, | 1 | வொளைறுக | வொண்ணுத |
| ,, | 3 | போகாகிரா | போகாநிரா |
| ,, | 7 | இக்துயர் | இதுயர் |
| ,, | 14 | போலக் | போலத |
| ,, | 23 | அவளிடக்நி | அவளிடத்நி |
| 27 | 26 } 27 } | அ } வன் } | அமமதலை |
| 30 | 25 | கொல்ல | கொல்லக் |
| 40 | 1 | யாதலால் | யாநலால் |
| 43 | 28 | சொலலாம | சொல்லலாம் |
| 50 | 19 | மெழுதநிணுங் | மெழுதநிணுந |
| 53 | 8 | தொடங்குக் | தொடஙகுக |
| 54 | 12 | மிடரும் | மிடறும |
| ,, | 23 | செலவு | செலவு |
| ,, | 25 | உள்ளாவம | உள்ளாளம் |
| 58 | 20 | யெழுதி | யெழுதி |
| 68 | 28 | ால | லால |
| ,, | 28 | மன்னரை | மன்னரை |
| 71 | 3 | தனமைமயைச | தனமையைச |

# ழ. திருத்தம்.

| | | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 207 | 10 | சொலல | சொலலச |
| ,, | 20 | ரியா | ரிய |
| 209 | 15 | வைதது | வைத்துத் |
| 211 | 5 | சமதி | சமதி |
| 212 | 17 | அடிகள் ! | அடிகள் |
| 218 | 20 | சொலலி | சொலலிப |
| 220 | 26 | தனமை | தன்மை |
| 222 | 4 | செய்கின்றவன் | செயகின்றவன, |
| 231 | 12 | பாரத்து | பாரததுப |
| 239 | 21 | அவன் | அவா |
| 241 | 5 | * யாமென்ற | " யாமென்ற |
| ,, | 23 | † தொலகாபபியம் | தொலகாபபியம |
| 251 | 18 | பறிகக | பறிககு |
| 268 | 28 | வகதே ! | வேகதே ! |
| 271 | 6 | மாபனே | மாலைமார்பனே |
| 275 | 5 | போக | போகப் |
| 276 | 9 | தெய | தெய |
| 277 | 8 | எழு | எழு |
| 278 | 21 | நிததிலே | நிலத்திலே |
| 279 | 23 | கழி" | கழி, [ய! |
| 282 | 16 | தோளிணாய் ! | அழகிய தோளிணா |
| ,, | 17 | நெருபபு | நெருப்பு, |
| 291 | 26 | கூட்ட | கூடடக |
| 300 | 2 | இவ } | |
| ,, | 3 | ணை } | |
| 301 | 15 | பொரி | பொரி |
| 302 | 19 | அவறறை | அவறறை |
| 303 | 6 | பரு | பருகு |
| 316 | 3 | நிதது | நிதது |
| 317 | 21 | யேணைப | யெணைப |

ஸ்ரீ

# சீவகசிந்தாமணிவசனம்.

நாமகளிலம்பகம்

## நாட்டுச்சிறப்பு.

தெங்கின்பழம் விழுந்து கமுகின் மேற்றிடப் பலாப்பழங்களைப் பிளந்து மாங்கனிகளையும் வாழைக்கனிகளையும் உதிர்க்கும் ஏமாங்கதம் என்று பெயர் கூறப்பட்டுத் தன் சிறப்பினாலே திசையெல்லாம் பரவிய நாடு ஒன்றுண்டு. அந்நாடு, மீன்கண்ணையும் வெற்றிடமின்றிய கரும்போங்கிய கழனியோடு யானையின்றல் மறையுஞ் செந்நெல் விளையுங் கழனிகளையுடைத்தாய், உழவர், பூசேவினையைத்தொழுது, உழுது சேறுசெய்த செய்யிலே விதையை விதைத்துப் பதம்பார்த்து நாறு பறித்து இத்துணை நிலத்திற்கு இத்துணை நடையென்று முன்னைநாளே சொல்லிவைக்கப்பட்டவர்களைக் கூவிச் செய்யிடைச்செலுத்தும் அவ்வுழவர் திரளையுடைத்தாய், செல்வம் பெற்ற கிழமகள்போல நெறிகதிர், வணங்காமல் நின்று கலவியுடைய மாந்தர்போல மிகவும் வளர்ந்து விளைதலையுடைத்தாய், அவ்விடப்போருடைய உலக்கை, வருக்கைப்பழங்களையுதிர்த்துப் பாடலையையும் பலாவையும் மாவையும் முறித்து அவற்றின் கனிகளையும் உதிர்த்துக் கமுகு தெங்கு இவற்றின் குலைகளைத் தரித்துத் தாழைமலையும் சண்பகமலையும் நெருக்குதலையுடைத்தாய், அடிசிற்சாலையையும் அறக்கற்றகுவிட்டமையிவிதிலத்தையும் மகளிர் கோலஞ்செய்யுமிடமு

தையும் ஆயிரக்கணக்காயுடைத்தாய், வீடுபெறத் தவஞ்செய்வார்க்கும் இல்லறம் நடத்துவார்க்கும கல்வி கற்பார்க்கும பொருளீட்டுவார்க்கும இடமாய் விளங்காநின்றது.

## நகரச்சிறப்பு.

அந்நாட்டின்கண்ணே கண்ணாகிய வலையாலே காமுகராகிய விலங்கை அகப்படுத்து, நிதியாகிய தசையைக் கைக்கொண்டு என்பைக் கைவிடும் பெண்களின் சூழ்ச்சியிலே அகப்படாத முனிவருடைய தவப்பயன்போலச் செல்வம் ஓங்கிய இராசமாபுரியெனறோ நகரமுள்ளது. அந்நகரம, நெறகாக்கின்ற சிறுமியர் தமது காதில அணிந்த குழைகொண்டு கோழியெறிதலாலே அக்குழைகள், கிடந்து சிறார் ஊரும தேரைத் தடுக்கின்ற வீதிகளைக்கொண்டதாய் அகப்பட்டவரைப் பிழையாமற் கொலலுதலாற் பரதத்தையையும காத்தலாற் கன்னியையும ஒக்கும் அகழியைக் கொண்டதாய் ஒருகால் நூறுபேரைக்கொலவதாகிய நூற்றுவரைக் கொல்லியென்னும் பொறிமுதலாய பல பொறிகளையுடைய மதிலைக்கொண்டதாய்த் தமமிடம் வந்தவனுக்கு அவன் தந்த திற்கொப்ப செமபொன் கழஞ்சு ஒன்றுதியாக ஆயிரத்தெட்டளாக விலைசொல்லித் தமது உருப்புக்களை விற்கும் பரத்தையர் சேரியைக்கொண்டதாய்ப் பொலிவியாநின்றது.

## சச்சந்தன் சரித்திரம்.

உலகம விரும்பித் தனது தாள் நிழலிலே தங்கும்படி அந்நகரியிலே வீற்றிருந்து உலகாண்டானொருமன்னன் அவன் யாவனோ எனின் தன்னையடைந்

ார்க்கு அமிர்தாவான். அடையாதார்க்கு நஞ்சா
ான். தண்ணளியால் தருமனுவான். வறுமையைப்
பாக்கிய ஈகையாலே வருணனுவான். உயிரை நீக்
தலிற் கூற்றமாவான். கலைகளுக்கு இடனுகிய
ன்மையாலே வாமனுவான். மகளிர்க்கு வருத்தம்
சய்கின்ற அழகாலே காமனுவான். பெயர் சச்சந்
ன் என்று கூறப்படுவான்.

இமயமலையிலே மரகதபபாறையிலே பதுமை
யன்னும் குளத்திலே பொற்றுமரையிலே அவதரி
த திருபபோலே விதேயதேயந்தரசன் கோயிலி
ல பிறந்து வளர்நத விசையையென்பாள அழகு
க்கரளாய மற்ற நஙகையரது நலங்களைக் கடநத
மயால் அப்பெயர் பெற்றவளாய் ஏழடி நடப்பினு
ஒரு காதமென்றஞ்சும் மெல்லியளாயிருந்தாள்.
அவ்விசையை சச்சந்தனுக்கு மாமன்மகளாதலில்
அவளை அவன் மணக்க விரும்பித் தனது கருத்தை
அவ்விசையை தந்தைக்கு அறிவித்து அவளை மணந்
ான். அங்ஙனம மணநத குன்றுபோன்ற அச்சச
ந்தனும் குன்று மறையபபடர்ந்து அதனுக்கே வே
ண்டாக்கும கொடிபோன்றஅவ்விசையையும், காம
னுக்கு இலக்காய்த தமக்கு எங்கும இணையிலலாராய
டபவாகனனும் அவன் பங்குறை செல்வியும்போல
ள்ளாராய் ஒருடம்பினராய் காமநுகர்ந்தார். இன்
னும் அவர் இயறகையன்பேயன்றிச் செயற்கையன்
பிருந்து முயக்கத்தால் மாசுணத்தையும் அன்பா
ளதாகிய மென்மையால் அன்னத்தையும் அவயவ
ச்சேர்க்கையால் ஆமானையும் ஒத்தார்.

மேலேகூறியவாறு அவ்விருவரும் சேர்ந்தபொ
துதிலே அவள் அவனை மதுவாகப் பருகினுள்.

முன்பே பலபோர்களிற் பகையை வென்றவன்; அவனுக்கு யான் செய்வன செய்தேன்; எனக்கு அவன் செய்வனசெய்க; நீ சிறிதும் பொறுமைகூறவேண்டா என்றான். நிமித்தகன் ஐயனே! திருவுளமன்றேனும் என்மொழியை அருளிக்கேண்மோ அமைச்சர் சொலவழி நடக்கும் அரசர்க்கு எக்காலத்தினும் நன்மையல்லது தீங்கு வாராது நின்போலப் பெண்போகத்தை மிகவிரும்பி இம்மையிற்பழியும் மறுமையிற்பாவமும் அடைந்தோர் மிகப்பலராவர். வேந்தே! பிரமன் திலோத்தமையைப் புணரவிரும்பி அவளைப் பெற்றமையால் விண்ணை இழந்து தவத்தால் அப்பாவத்தைப்போக்கி அவ்விண்ணை யடைந்தபின்னும் அவற்கு அது இன்னும் ஒரு புறஞ்சொல்லாய் நிற்கின்றதன்றே. கொன்றைமலரால்செய்த * அடையாளப்பூவாகின்ற மாலையையும் சூடும் பூவாகின்ற மதிக்கண்ணியையும் உடைய அரனுக்கு மலையரையன்மனைவி மேனைபெற்ற சோதையைத் தனது பாகத்தில் வைத்ததே கூறுபாடுடையதொன்றாகப் பழியாயிற்றன்றே; நீலநிறவண்ணனாகிய கண்ணன் யமுனையாற்றிலே ஆயச்சியரது ஆடையைக்கவர்ந்து பலபத்திராமன் காணிற் பழியுடையதென்று கருதி அக்கோவியர்க்குக் குருந்தொடித்தான் இது தீதன்றே; காமமிக்குநின்ற ஓராண்கழுதையைப் புத்தனார்பார்த்து அருளாலே தாம்பெண்கழுதையாய்ச் சென்று கூடி, இக்காமத்தாலே வருந்தினீரோ என்று கூற அக்கழுதை ஈமத்துமாலைபோலப் புவியில் இழிக்கப்பட்டதன்றே; காமத்தாலேபிறந்த பழியை மறைக்கலாமோ; பஞ்சவர் ஒருத்தியை மனைவியாகப்பெற்றமையின் பெற்றவடுவுரையைக் கழுவுவார் யார்; காமத்தாலுண்டாகிய பழிச்சொல் பறையறைந்தாற்

* "கண்ணியுந்தாரு மெண்ணினராண்டே" என்றார். தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௭௯.

போல யாவரும உணருமாறு உலகெங்கும் பரந்து மறுமையினரகத்தையுங் கொடுக்குமேயென்றான்.

அரசன் நிமித்தகன்வார்த்தையைக் கொள்ளாமைகண்டு அணிந்திருந்த உருத்திரதத்தன் அரசே! இந்திரனும அமைச்சர் சொலவழி நடக்கும்; நீயும அவன்போலே அறிவுடையையாயினும் இப்பொழுது இவன் மொழியைக் கொள்ளாமையாலே நீ தீங்குற்றுத் தேவிக்குத் துன்பஞ்செய்கின்ற வோரறிவுடையை ஆயினையென்றான. வேந்தன், நிலமும் திருவும நீங்குமென்று நிமித்தகன் கூறிய செல்வநிலையாமையையும் உருத்திரதத்தன கூறிய யாக்கை நிலையாமையையும உட்கொண்டு நிமித்தகனைப்பார்த்துப் புவியில தோன்றினோர்க்குக் கருப்பத்தியுங்காலத்தே போகமும வாழுநாளும அளக்கப்பட்டேயிருக்கின்றன. நீ எனக்குக் கூறவேண்டா என்றனன். நிமித்தகன், கோவே! இடித்துக்கூறல அமைச்சர்க்கு இயல்பாதலைமையின் நினக்கு உறுதிநோக்கி இத்துணையுங்கூறினேன். இனி நீ நங்கை கொங்கையை விருந்தாகக் கொண்டுவாழ்க. நீ என்னை முனியினும நின்தவறு காணுமலே துறவிடத்தே செலவேன என்று சென்றான.

அரசன போவென்று சொல்லாதிருக்கத் தானே போதல நீதி அன்மையின் துறவுகாரணமாக நிமித்தகன் செலலுதலும் வேந்தன தன கருத்தின்படியே காமவின்பம துய்த்தவருகையில அவ்வின்பத்தை அறுதலையாக்கியமூன்று கனவை ஓரிரவின் கடையாமத்தின்கடையில தேவிகண்டு கங்குற்குக் கரையுங்க

டு எழுநாள். விடியற்காலத்திற்கண்ட கனவுத் திற்பயக்குமாதலானும பிற்பயக்கும கனவாயின் னடவர் நெஞ்சில பின்னும தோன்றுமாதலானும் ஙஙனமே தேவிமனத்திற் றோன்றியபடியானும வள அச்சுறுக் கையாலே கணகழுவிககலையுடுத் வினையை வெல்லும அறவாழியையுடைய மாலடி ய *வணங்கி ஓய்விலலாத மலரையும் சாந்தையு கொண்டு எமபெருமானே இவை நினனடிக்கு பொருந்துவனவாக என்று ஏத்திவந்து தனது கணவ தானை வணங்கினள். தேவா, நோக்கத்தாலே நுக ப்போல அரசனும நோக்கத்தால் மகிழ்ந்தபின்பு தவி தான் கண்ட கனவு மூன்றையும சொல்லுகின வள், முன இனிதாய்ப பின்றீங்குவிளைத்தலில தே னனவும குலம தூய்மைதோன்றப்பாலெனவும அ ன் ஆக்கம அமுதுபோல் உயிர்களைக்காத்தலால் மிர்தெனவும் சொன்னாள். எங்ஙனம் சொன் னாளின், எம்பெருமானே ஒரு பிணடி, தனது பூங் காத்துக்கெலலாமகெட்டுப்பினபு தானும் போக முந்தது அதன்வழியிலே ஒரு முளை, அதனையொ து எட்டு மாலையையுடைய ஒருமுடிக்கு இருப்பி டைகநட்டுவைத்தாறபோலே ஓங்கிவளர்ந்தது என ச் சொன்னாள். கணமுந்துறுவினை இல்லையாகவும் க வுகளைக் கேட்டும மனஞ்சவியாத சச்சந்தன் கரு ாலின் விதியாலே பயனைத்தான் தெரிந்துபார்த்து ரடிதுளக்கித் தேவிமனந் தளர்ந்து அழுகுகெடாவ ணமை நீக்குவானாகிய அசோகு முறிந்தது கனமல

*"தெய்வமஞ்சல" என்னு மெய்பபாட்டியற்சூத்திரம், ன குலதெய்வத்தை வணங்குதற்கு விதியாமாறுணாக. தொலகாப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், உச.

மாலையையும் முடியையும் இரண்டுகனவாகவும் மு
னையை ஒன்றாகவும் இங்ஙனம் நல்லனவற்றை மூடு
த்துத் தேவியை நோக்கிக் கனவின் பயனைக்கேள் மு
டி, நின்மகனும் மாலைகள் அவன் வரைந்துகொள்ளு
ம தேவிமார் முளைநின்மகன் ஆக்கமாம் என்று தேவி
கண்டதற்கொப்பக்கனவை மூன்றாகிப் பயனும் கூறி
னன். தேவி வேந்தனைநோக்கிப் பிணைடி இற்றதனற்
பயன் என்னென்றுகேட்ப அவன் இன்னே எனக்கோ
ர் இடையூறு வந்ததுகாண் என்றான். அரசன் இடை
யூறு வந்தது என்று தெளிவுபற்றி இறந்தகாலத்தா
ற் கூறவே தேவி வேறு உரையாடாமல் புவியில் வீ
ழ்ந்தாள். துயரத்தாலே தேவி அழகு கெடுதலாலே
அரசன் *அவளை மெய்யைச்சார்த்தெடுத்துத் தன்
மார்பிலணைத்துப் பாவி என்னுவியை வருத்துதி
யோ என்று அவளை விழிக்கச்செய்து கனவை மெ
ய்யெனக்கருதும் பெண்தன்மை நினைக்கிருந்தபடி ப
வனே என்னே என்று புணர்ந்துரை பலவுரைத்துத்
துயர்தீர்த்தான். தேவி காதலனை கொண்டாட்டத்தா
லே களித்து அவனொடு பாடல்கேட்டு ஆடல் பார்
த்து மகிழ்ந்து வயிற்றுள் கருவளர்தலாலே மெய்ப்
பார்த்து வெறுத்து நலம் கெட்டாள்.

கட்டியங்காரன் வஞ்சித்து அரசை வெளவு
லாலே திருமகள், †சச்சந்தனுக்குச் சிறிதும் பரிகா
ம கூறுவாய் நீங்கினாள். அவள் நீங்கவே அரசனு
க்கு அறிவு என்னும் அமைச்சன் தோன்றி வேந்தர்,
மமுடைய கணவென்று துணிந்துவைத்த நீதியி
ல செல்லாயாய காமமென்னுங் கள்ளிலே முழுகி
அன்றோ நீ நலவினை அறுயாதலால் ஓர் எந்திரம
னைவி என்றான். அரசன் நூலையும் தொழிலையு
மமைகண்டு தொழிலாலே மயனை எனத்துணிந்

*அவளை மெய்யையென்ற இரண்டுருபும் †"ஒ
ளிது" என்றதனுன் முடியும் †தொல்காப்பியம், சொல்
காரம், வேற்றுமை மயங்கியல், ரு.

மணியாகிய அரசனுக்கு வருந்தினராயிருக்க, அவர்க ளிலுள்ளானாகிய தருமதத்தன், அரசன், தேவியையே அமுதாகக்கொண்டு அந்தப்புரம் ஒன்றுமே தனக்கு உரித்தாக, ஒழிந்தவற்றின் வேட்கையின்றியொழிந்தான். நிமித்தகன் அரசனை நோக்கி விண்ணுலகும் அமிர்தும விலைபெறுவ தொன்றாயிருக்கும் மாதரின்பத்திலும் நினது அரசினது இன்பம் பெரிது காண் என்று கூறிச் செல்வம் வேண்டுதலின்றித் துறவுபூண்டு ஒழுகுதலாலே இவ்வுலகு திருமகளோடு நின்வயமாயிற்று. இனி நினக்கோர் மனக்கவர்ச்சியின்று தன்னை ஆக்கிய அரசனைப் பின்னைக் கொலவானாயின அவன்குலமும செல்வமும அக்கணமே அழியும அரசன் வழியே ஒழுகில அவன் குலத்தையும் செல்வத்தையும் மண்மிசையினின்றும் பெயர்ப்பாரில்லை. தேவரினும் வேந்தர் பலகுணங்களால் மிக்காராயினும உலகில உள்ளார் தேவரும வேந்தரும ஒப்பர் என்று கூறுவார் அவர் அறியார் யான் மன்னருக்குள்ள விசேடங்கூறுவேன் அதனை நீ கேள். வேந்து என்னும தெய்வம அருளுமாயின் அரசாக்கும வெகுளுமாயின் அழித்துவிடும். மற்றத்தெய்வங்கட்குத் தமமை வாழ்த்தினவனை அக்கணமே அருளியாக்கவும வைதவனை அழிக்கவும கூடுமோ கூடாதுகாண் மன்னவன உறங்குவானாயினும அவனது ஒளி உலகைக் காவாநிற்கும தேவர், கண்இமைத்தல் அறியாதவராயினும் அவனை நோக்கி, உலகம செய்யும் அறங்களை அசுரர் வெளவ அதனைப் பரிகரிக்குந் திறன் இலராயினர். இழிந்தோராயினும் அவர் பின்னே நால்வரைத் திரியச்செய்தால் அவரைத் தெய்வம் என்று உலகர் கொண்டாடும். மன்னரால் வ

## மூன்றாவது,

# காந்தருவதத்தையாரிலம்பகம்.



வணிகனான யவதத்தன் வழியிலே வந்த சீத
தன் சொல்லுகின்றான். இம்மி அளவான பொ
ருளைக்கொண்டு பெரும்பொருளீட்டி யானை யேறு
வாருமுளர். ஆழ்தற்குரிய அம்மி மிதந்தது மி
தத்தற்குரிய சுரை ஆழ்ந்தது என்று சொல்லும்படி
பார்த்தோர வறுமையுற்றுத் தாழவும், தாழ்ந்
தார் செல்வமுற்று வாழவும், பார்த்தலாலே மு
யற்சி வேண்டா. வினையே அமையும் என்று கரு
முற்பிறப்பில நலவினை செய்யப்பெற்றிலேம.
என்று நொந்து முயற்சிசெய்யாது இருத்தல் அறி
வன்று. அதுவேயுமன்றி முயலும் உள்ளம் உடை
யான் முயற்சிசெய்ய, அவனது நல்வினை வந்து உ
தவின் வெள்ளம் என்னும் கணக்கையுடைய பொ
ருள் ஒருநாளிலே கைகூடும். அப்பொருளாலே
பலாத் துப்புரவுகளும் உளவாம். அங்ஙனம
வாம் ஆகின்ற முயற்சியைவிட்டு, வருவது இடை
யங்காது என்று சோம்பியிருந்தால் அவ்விருப்பு,
மகவருக்கு ஒருதலையெய்ப்பு பெற்றாற்போல
னிதாயிருக்கும். அங்ஙனம் தலையெடாதபடி
பொருளைத் தேடவேண்டும். தேடினால், பகைவ
க் கொல்லும் படை அதனையொழிய வேறில்லை
அப்பொருடான் இருந்த இடத்திலே இருந்தே
பகைவரைக் கொல்லும். அதுவன்றி அது உள

வாக இன்பத்திற்கு ஐயமில்லை யாதல்லால், அறத்தோடே எல்லாவற்றையும் உண்டாக்கும் நல்வழியில் ஈட்டிய பொருளே நன்கு மதிக்கப்படும் பொருள் தமது குலம் நைகின்ற அளவிலே தீச்சொற் பிறவாமல், ஆலின்வீழ்போல அப்பொருளைக்கொண்டு அதனைத் தாங்கல், அதனுடன் பிறந்தவருடைய கடனாகும். அங்ஙனம், தாங்காது விடுதல் பேடையரது கடனாகும். ஆதலால், யான் முயன்று பொருட்டேடி யென் குலத்தைத் தாங்குவேன் என்றான். என்று பண்டசாலை சென்று மிகுதியான பண்டங்களைக்கொண்டு நன்முகூர்த்தத்தில் கடற்றுறையேறப் போய்த் தானஞ்செய்து மரக்கலத்திற்குத் தெய்வத்தை நோக்கி, இக்கலம் தீங்கு சிறிதுமின்றி ஓடிவருவதாக என்று வேண்டினன்.

இவன் பொருட் குறைபாடுடைய நாயகன் ஆதலானும், முன்பு பல வங்கங்களும் நின்று மறு ஒருகலமே யுடையனாதலானும் அங்ஙனம் வேண்டலும், மரக்கலம் கொடிகட்டிய கூம்பிலே காற்று முழக்குமபடி மூன்றுபாய் கட்டுதலாலே கம்மியர் கொண்டாடும்படி நீரின் ஒழுங்குவழி விரைந்தோடிற்று. ஓடி, விளக்கத்தால் மின்னையும் நுடக்கத்தால் கொடியையும், மென்மையால் மலரையும், நடையால் அன்னத்தையும், சாயலால் மயிலையும், ஒப்பார் இனிதாயிருக்கின்ற துப்புரவுகளாலே மிக்க நன்மையுடைய தீபத்தைச்சார்ந்தது.

சீதத்தன், தீவினுள்ளே சென்று அரசனை முத்தாரங்கொடுத்துக் கண்டு அவன் தலையளிபெற்ற பண்டங்களைவிற்று, ஆங்கு மகளிர் ஆடலப

மறைந்தார். சீதத்தன், பாவம் வாராமற் பரிகரித்து, அறத்தின் வழி ஈட்டிய பொருளையும், தோழரையும் * முந்நீர் விழுங்க, கலங்காமலே ஒடிந்த கூம்பின் துண்டத்தைப் புணையாகத் தழுவிக்கிடந்தானை அவனைத் திரைகொழித்துக் கரையிற் சேர்த்திற்று. சீதத்தன், வினையே? நீ என்னைப் படைக்கும்பொழுதே பொருளைப பொருள் என்று கொள்ளும நீ அதனாலே வீவாய எனப் படையாய் நாவாயை யிழந்து யாருமில்லாத நடு இயாமத்தே கடலை நீந்தித் தனியே போவாய் எனப் படைத்தாய். நீ இனி எதனைசெய்யாய் என்று கூறி, சோலையோங்கிய ஒரு மணற்றிடையிலே சேர்ந்தான். சேர்நது நெய்தனிலத்திற் கானலிலே அன்னம தன்னிடமவந்த அலவனைக் காலாலே தள்ளவும், அது போகாமல மீண்டுமீண்டு வரவும், அது கொல்லாதிருக்கக் கண்டு அதைத் தனக்கு நன்னிமித்தமாகக் கருதி நாம் போம்படி இவ்விடத்து வரும கலமும் உளதோ என்று நோக்கி வருந்தி இருநதான். அச சோலையிலே வழிப்போவான்போல வந்த தரன் என்பானைத் தனது முயறசிவலியாலே கண்டு யான் அடைந்த கேடடைக் கேண்மின் கேண்மின் என்று இடைவிடாது கூறிப் பொருடேடத் தான் சென்றவாறும், தேடிப்போந்தவாறும, கலமழுந்தியவாறும், தான் ஒருவன் உயந்தவாறும மாழும இரங்கும்படி அத்தரனுக்குக் கூறி, யான் இறந்ததற்கெல்லாம் உம்மைப் பெறறேனே என்றான்.

---

* முந்நீர், நிலத்தைபபடைத்தலும் காத்தலும அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின் கடலுக்குப் பெயர்.

தரன், அவ்வுரைக்கு உவந்து பத்தனை நோக்கி, யான் விஞ்சைபலவும் வல்லேன் ஆதலால், அழுந்திய கலத்தோடு நின் தோழரையும், நிதியையும் தருவேன். இனி நெஞ்சிற் பலகாலினை யொழிக. அம்மலையைப்பார். அதிலேறிப்ப ழ துணிக என்று கூறி, அவனை மேகத்திலேற்றித் தான் கொண்டுபோந்தான். அங்ஙனம், அவ்விருவரும் சென்று மேகத்தின் துளி பக்கத்தை யனைப்ப அம்மேகத்தைப் பிளந்து விரைந்துபோய்ச் சோலையையும், அசும்பு நெருங்கிய சாரலையும் பொருந்திய அக்கிரியைச் சார்ந்தார். சார்ந்து, அதில் உலகிற் காண்டற்கு அரியனவாயக் கண்டார்கண்ணுக்கு இனியனவாய் அமிர்தமொத்துத் தூங்குவனவாகிய கனிகளையுண்டு அம்மலையிலுள்ள அதிசயங்களைப்பார்த்துக் களித்தார். பின்பு தரன், பத்தனை நோக்கி இம்மலையிலே ஓர் காவதம் கடந்தால் வெள்ளிமலைமேலே அரசன் உறைகின்றதொரு நகருண்டு. ஆங்குச் செல்வோம் எழுக என அவனும் எழுந்து அவன்பின் நடந்தான்.

நடந்து அவ்விருவரும் கண்ட வெள்ளிமலை, தன் தாழ்வரையெல்லாம் மேகங்கள் சூழ்ந்திருத்தலால், கரும்பாம்பாலே மேலே பாதிதெரியாது விழுங்கப்பட்ட சந்திரனை ஒத்துள்ளது. அந்தப்போன்ற மலைத்தலையிலேயுள்ள நகரத்தை, நிவட்டம்போலப் பொன்னாலே மதிலியற்றிப் பானுலகிலுள்ள இன்பமுடைய நகர் பொருள்களைக்கொணர்ந்து அதனுள்ளே நிறைத்துச் செய்த ரா நகரியென்று சொல்லாம். மதிலின் நிறத்தி

யரசொரகள் மதியைத் திணடுமபொழுது வெணணி
ம இருநதன எனனின மதியே நீ இன்றுளள மங்
கையர் முகத்தை ஒப்பை கலலே கலலே என்று கட
டிவெனபோயிருநதன. மேகலை. கிணகிணி, வீணை,
குழல், முழா, என்றும இவற்றின ஒலி, நகரதான
இவவுலகில எனனினும அழகுடையார யார என
று கூறுந்தன்மைபோன்றது. மணிகள பதித்தமா
டங்கள, உயாந்திருந்தலால், ஞாயிறு தாழ்ந்து
சுடுதலாலே பொனனுருகிக கொடடுவ போநதன
போன்றன. அந்நகரம, அமராபதி தெயவங்கள
சோடே வந்து அமமலைமேலே தங்கிய தனமையை
யொத்திருந்தது. சீதத்தன், தான் புகுந்தது விசை
யாரசேர என்று கருதுமபடியான பொன்மைக
லே புகுந்து தன் மனையிலே இருந்தான. அ
நதான சீதத்தனை நோக்கி, மன்னரெலலாம அரவ
க அவாகடகுக் கருடனுகிய கலுழவேகன் யெ
னும அரசனது தேவிதாரணி யென்பாள், காந்
வதத்தை என்றொ பெண்ணைப் பெற்றுள். அர
ன், நிமித்தகனைககூவித் தத்தைக்குச சாதகம செ
யக என்றதும, அநநிமித்தகன், சாதகமசெய்து
அவளுக்கு நன்மையெலலாம மண்மேலே இரா
மாபுரத்தேவரும என்ருன். தத்தை, பிறநதபொ
ழுதே அரசா பலரும, இமமலைக்கணணே வந்து,
ருங்கலஙகளை அரசனுக்குக கொடுததுப பெணணை
கககொடுபபான் என்னும ஆசையிலே நிறப, நிமி
த்தகன், தான் கூறிய மொழியைத தெளிநது அர
ன், பெணணை அஙகே கொடுககும என்று நிர
மன்னன் இடமும வலமும பாயகின்ற ககதி வி

யகொண்ட குதிரையின் மனத்திற் குறிப்போலே னது காதலையுடைய இரண்டு இடத்திற்கும் ஏறக்கூறித் தனது எண்ணத்தை மறைத்து வைத்திருகின்றான். அவன், கருதியது நிமித்தகன் கூறியதேயோ அன்றி, அரசர் கருதியதேயோ இரண்டும் அறிய முடியவில்லை. நீ வந்தபடியால் அவன் கருதியதை இப்பொழுது அறியக்கூடுமே யென்று கூறிச் சீதத்தனைக்கொண்டு கோயிலுக்கு ஏகினான்.

சீதத்தன், தன் வரவை வேந்தனுக்கு அறிவித்து அநுமதிபெற்றுச் சென்று, அரசன் பாதத்தை வணங்கி அவன் உபசாரம் கூறியிருக்க அமர்ந்திருந்தான். பின்பு அரசன், சீதத்தனுக்கு, தந்தை, தாய், தாரம், மக்கள், சுற்றம், இவர்களே யில்லி, மயிருவேறுக்கும் கேண்மை இன்று உளதாயது எமர் எழுவர், நுமர் எழுவர், அவ்வழி ஏழு முறைமையும் போல நிறைவு ஏற்றம் இன்றி நின்றது. அன்றியும் சமயமும் ஒன்றே ஆதலின், யான் அரசன் நீ வணிகன் என்று இரண்டு சாதியில்லை இது நம்மனைகாண் என்றான். சீதத்தன் மகிழ்ந்து, மனையை நோக்கி, யான் கேட்டிருப்ப, எந்தை, நந்த, தான் முன்பு இட்டிருந்தபடி நமரங்காள் வடதண்டமலையில் தென்சேடிக்கூற்றில் காந்தார நாட்டில் விச்சாதரலோகமா நகரியினின்றும் நீங்கு கருடவேகன் என்னும் வேந்தன், நமது குடித்தெய்வம் காணும் நீவிர் அறிந்து இருமின் என்று சொன்னான். ஆதலால், எங்குலம் உன்னடியைப் பணிப்பதன்று என்றான். வேந்தன் அது கேட்டு, சீதத்தனது கரத்தைப் பிடித்துச் சென்று தனது

தேவியைக் காட்டினான். அவளும் மனமபொரு
ந்திடபசரிக்க, ஸ்ரீதத்தன், தத்தையைப்பார்த்துக் கெ
டியோ மின்னோ மணியாற் செய்த பாவையோ
என்று ஐயுற்று நின்றான். மன்னவன், ஸ்ரீதத்தனு
க்கு காந்தருவதத்தையைக் காட்டி. நின்மகளாகி
இவளை நினது நகர்க்குக் கொண்டுபோய் அந்தண
அரசர், வணிகர் என்னும் மூன்றுகுலத்தாரில் இவளை
இசையாற்பொருது வெல்வான். யாவனாயினும
அவனுக்குக் கொடுப்பாயென்றான். ஸ்ரீதத்தன்
அடிமைப்பணி செய்வேனென்று கூற, தாரன்
கேட்டு இவ்விழிவு இவளுக்குத் தகவன்றென்று செ
ய்த்துக்கூறினான். கலுழவேகன் அதுகேட்டு, பே
த்தைக் குறையாமற் பெற்றுவைத்த மகளிர், கெ
ழுநன் இன்றித் தனித்து வாழ்தலினும் காட்டி
இறக்கும் வருத்தம் பெரியதில்லை. அம்மகளிர் த
கணவனது குறங்கிலே துயிலப்பெறின் அது தே
வரின்பத்தின் பகுதியை யுடைத்து. அதை யாவ
அறிந்துவைத்தும், நம்மை இந்நாளளவும் சார்ந்து
அடைந்து நிற்கவும், ஒருவன் பகுதியிலே படு
காலம் வாராமையாலே சோதிட நூல்வல்லான் அ
றியப் பொருளை மனத்திற்கொண்டு வேந்தர் இரக்
கவும் கொடேனாயினேன் காலத்தை யான் விலக்
கேன் என்றான். தாரணி, கணவன் கருத்தே தன்
து கருத்தாகக்கொண்ட கற்புடையாளாதலால் தன்
மைப் பிரிகலாற காந்தருவதத்தைக்கு உண்டாக
துன்பத்தைப் போக்கித் தான் அவட்குக் கொடுத்
தருளிய எல்லாம் கொடுப்ப, வேறுதன அருங்கல
வைத்தற்கு வயிரம் இழைத்த பெட்டிகள் ஐந்து

மம, மணியும் பொன்னும நிறைந்த யவனதேசத்துப் பெட்டிகள இரண்டாயிரமும, பரந்தகாவினை மம கைச்சுரிகை யினையுமுடைய கசசாந்த கட்டியும், தவிசும், கண்ணாடியும, தூபக்காலும வினையாயிரமும அவற்றிற்குச் சிவந்த போர்வையும பின்னும அவள வேண்டுவன எல்லாம கொடுத்து, சீதத்தனுக்கும சிறப்புச்செய்து விஞ்சையர் என்னும படியை நோக்கி, உடம்பினேடு உயிர் பின்னுமாறுபோலப் பின்னி யொன்றாய் ஓரிடத்தும இவர் நீங்காத அறிவாய! நினது தடங்கணணி யெம மைப்பிரிந்த தனிமை போம்படி நீ இவளுக்குத் தந்தையும தாயும ஆவாயாக. அன்றி இருவிரும எமது ஆணையைவிட்டு, சீதத்தனது ஆணைப்படிப்பீர் என்றான். காந்தருவதத்தை, தன தாயரை வணங்கி அரசனை வணங்க அவன், தன் தேவி வருந்தம நீங்கும்படி, வலம்புரி, அன்றமுதத்தம, புவியிலுள்ளோர்க்குப பயன்பட்டு அவவலம்புரிக்குப் பயன்படாது. மகளிரும தாயருக்கு அத்தன்மையர் என்று கூறிவிடுத்தான். தந்தை, யானை ஆயிரம, தேர் இரண்டாயிரமும, குதிரை நாலாயிரம, வேலுடைய வீரர் பன்னீராயிரவரும, சூழவிமானம ஏறினாள. அவவிமானம படையுடனே யாகலும் இருந்த இடத்தைச சார்ந்தது.

தான், சீதத்தனை நோக்கித் தந்தையைக்காத்து வேந்தர் வந்து கூடினார். * கணி அது கண்டு அரசனை நோக்கி, நின்மகள் வாழ்வு மண்ணிலதே ஆதலால் அவளைக் கொண்டுபோதற்குத

* கணி=கணிப்பான.

கடமைடத்தாருகிய நின்தோழனை அழைப்பி என் கூறினுன். மன்னன், என்னை நோக்கி, நீ சென் என் காதல நண்பனைக் கொணர்க என்றுன். ப ன் அவன் ஏவிவந்தமையால அங்கேதோர் வருசனி கான். அன்பனே! துன்பமுறறுாக்கல்லது இ பம் இலலையாதலின் யான் நின்னை யொழிந்தோ கு இன்பருசெய்து நின்னைத துன்பத்தாற் பிணி தேன். இங்ஙனம துன்பருசெய்து நினது நட்ை பபெற்றேன். நீ வாழவாயாக என்று கூறி, வி ைசயாலே தான் முனனே மறைத்த அம்பியையு தோழரையும, நிதியையும் காட்டினுன். சீதத தோழரைக் கணடு மகிழ்ந்து தழுவிக கடமைடே தான் உற்றதையும பிறவறறையும கூற, அவாக யாங்கள் ஒன்றும கணடிலேம. யாங்சள் நாடக நண்டோம என்று கைபுடைத்துச சிரிததாா.

சீதத்தன, பரிவு தீாநது தனககு இனியவ ெலாரும் தன்னைசசூழ மகிழநது தநதையோடே இராசமாபுரம் சென்று தன்மனை புகுநதான. த ைத, சநதிரகாந்தததாற் செய்த நிலத்திடத்தே பொன்னாற் சுவா அமைத்து மணியால தூணநிட்டி பளிங்கால் அலகு பரபபி வெளளியால வேயந்து செய்த கன்னியாமாடத்தைச சோநதிருநதாள். ததன் அவன் மனைவி பதுமைக்குத் தநதைய குற்றமற்றவாவையும யாழ வாசிதது வென் னுககுக் கொடு என்று அவடந்தை கூறியதையு பிறவறறையும் சொல்லிக் கட்டியங்காரனுகிய அ சனுக்கும் மேலே பதுமைக்கு உணாத்தியாங் உணாததி அவனது அநுமதிபெற்று அரதனங்

ளாற் புதிய மண்டபம் சமைத்து முரசறைய ஏவுக
என்று தன் இளையரை ஏவினான். அவர் ஏவலாள
ரிடம் சொல்ல, அவர் முரசறைவார் உறைவிடம்
புகுந்து முரசறைமின் என்று கூறினார். பறையறை
வார் மங்கல அணி அணிந்து நகருள் வந்து, புங்கவ
னது அறநெறி பொலிவொடு மலிக; இவ்வையகம்
வாழ்கோறும் மழைதரு வளத்தையுடைத்தாய பி
ணியினின்று நீங்குக; தேன்போன்ற கிளவியாரும
நம்பியிறப்பறியாது நிலைபெறுக; மாந்தரெல்லாம
இருமுது குரவர் சொற்கேட்டு நாளும் இல்லற
புணர்க; என உலகை வாழ்த்திப்பின்பு கட்டியங்
காரன் முதலாக நகரையும் வாழ்த்தி நீங்கள் தானஞ்
செய்யின் தவஞ்செய்யின் யான் செப்புகின்ற இக்
காரியத்தையுங் கேண்மின்; சீதத்தன் கூறிய காரி
யம் இதுவாகும் அஃதியாதெனின், கலைகளெல்லாம
முற்ற நந்தனையது தாதையாகிய கலுழவேகன், பின்
னவர் ஒழிய மற்ற மூவகைக் குலத்தாரிலும் யாழ்
பாசித்தலில் அரிவையினும் அறிவுடைய நம்பிக்கு
அவளைக்கொடுக்க என்று கூறினான், என்று வீதி
தோறும் முரசறைந்தார். அறையக் கன்னியைக்
கொள்வான்; அத்தினபுரத்தின் அரசனும், காம்பிலி
நாட்டு மன்னனாகிய ட[illegible]குமாரனும் வாரணவாசி மன்
னனும் அவந்திதேயத்தரசனும் அயோத்தியாக
ஒற்றையும் ஒழிந்த அரசரும், அந்தணர் வணிகர் இவ
ர் வீணைவல்லோரும், மதுநசையால் மொய்த்த தே
ரீயின் நிரைப்போலக் கூடி வந்தார். * தேன் வரு
த, தேனை ஒருவன் கொண்டுபோதல்போலத் த

* தேன் = வண்டு

தையைச் சீவகனை கொண்டுபோதலை யுணராது மன்னரெல்லாம் விரைந்துவந்து குறுந்தெருவிலும் நெடுந்தெருவிலும் நிறைந்திருந்தார்.

சீதத்தன், தத்தை செல்வதற்குத் தெருவினில் தத்தை ஐந்து விற்கிடை அகலம் பொன்னால் திருத்தி, அதன்கண் எழும்பொடியைப் புழுகானும் பனிநீரானும் போக்கிய பக்கமெல்லாம் வண்டொலிக்கும்படி மலர்பரப்பி மேலே வெண்டுகிலை ஒன்றின்மேல் ஒன்றாக விரித்து அத்துகிலின்மேல் ஐம்முழ அகலம் அனிச்சப்பூவைப் பரப்பினன். வீணாபதி, வட்டம் பொருந்திய மறுவில்லாத மதியின் பக்கத்துநின்ற வியாழம்போன்று முகத்தருகே ஒரு குண்டலம் தொங்க ஒதுங்கிநின்ற தத்தையைத் தொழுது அவட்கு நாணால்வரும் துன்பம் நீங்க, முன்னம் உலகில் நடந்த மணங்களைக் கூறி * அம்மனாய் நின்றது மகர யாழாகிய மலையினின்றும் இழிகின்ற § பாலையென்னும் பண்ணாகிய நீர்ப்பெருக்கத்திலே அரசர் அழுந்து

---

* அம்மனை=தாய், அன்னை யென்னை யென்றலும் உளவே, தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினும் தோன்றுமரபின என்மனார் புலவர்" இது விதி. மேலே கண்ட சூத்திரம் தொல்காப்பியம், பொருளதிகாரம், ௩௨ அதன் பொருள், தோழி தலைவியை அன்னையென்றலும் தலைவி தோழியை அன்னையென்றலும் இருவருந் தலைவனை யென்னையென்றலுமாம். இங்கே தோழி தலைவியை அன்னை யென்றாள்.

§ பாலையாவன=செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை, என எழும்.

ார். அதனை யான் அறிவேன் என்றாள். சந்திரா
ரணம் என்னும் நூலிலே கூர்த்து வல்லானாகிய
ருச்சிகன்என்னுங்கணி, உரோகிணியூர்ந்தமதியை
டைய வியாழக்கிழமையிலே நங்கையது யாழுப
ாரைக் காண்பேம் என்று சீதத்தனுக்குக்கூற,
சசீதத்தன் தன்மனைவி பதுமையுடனே இது நட
தும் முறைமையை ஆராய்ந்து ஏற்போாக்கெல்
ாம நிதிகல்கினான். மாதர்கள், மணியைக் கழுவி
ற்போல * ஓமாலிகை, † விரை, ‡ துவர் என்னு
வற்றைச் சேர்த்தித் தத்தையை நீராட்டினார்.
கயத்திலுள்ளகயல, விசும்பிலேநின்று தம்மையெ
க்கப்பார்க்கும் சிசுவிக்கு அஞ்சி, அகருளத்
கத்துறந்து நீலநிறமுள்ள நெருங்கிய விற்காப்பச
ந்திரணிடத்திற் கிடந்தனவல்ல; கண்ணே யென்று

---

* ஓமாலிகை— "இலவங்கம் பச்சிலை கச்சோலமிரு
ரி மலையிருவேரி வகுளப்பூச்சுரபுன்னைப்பூ ஏலந்தக்
ால மதர்வரிசி சாதிக்காய் நாகணமஞ்சட்டி நறும்பிசின்
குலுமாஞ்சில் கண்டில்வெண்ணெய் திம்பூ கன்னரி வே
.விக் கச்சோலமரத்தை சரளம் புழுகுசட்டக்கோட்ட
ரியக்கோட்டங் தகர மதிமதுரமூத்தக்காசுவாய்ந்த விலா
சஞ் சயிலேக நாகப்பூச் சண்பகமொட்டென்று முழு
ணர்ந்தோரோதிய முப்பத்திரண்டே விதிவகை யோமா
கை."

† விரை = சந்தனமகிலோடு கருப்பூரங் கத்தூரி குங்
மென்றிவை யைந்தும் விரையே.

‡ துவர் = கோற்பாங்மரமா நாவறிரிபலை வன்கருங்
லி பத்துத்துவரே.

§ கயம் = குளம்.

யாவரும் துணியும்படி மையெழுதினார். பின்பு எழுதுவனஎல்லாம் எழுதி இடுவன எல்லாம் இட ஒப்பனைசெய்தார். சிந்தும் குறளும தாம் அணைத்த ஆரம் அசையத் துகில் நெகிழ விலாப்புடைக்ள்ளே காம் விசித் தேரை நடப்பதுபோல நடப்ப் பெண்கள் ஆயிரத்தெண்மர் வட்டப் *பனிச்சையராய் வாராற்கட்டின கச்சினராய்ப் பல கலைகள் நிறைந்த தூணியராய் வில்லினராய் வாளினராய் வஞ்சினங்கூறி ஒரு புடைசெல்ல ஓடுங்கா அம்பினும்கடிய வேகமுடைய பெண்கள் தோளுறும் தனம் கண்ணுக்குத்தோன்றாமல் கச்சால வீக்கி ஆணுடையாக உடுத்ததானையராய்க் கேடகத்தையும் வாளையும் பிடித்துத் தத்தையைச் சேவித்து செல்ல அமுதைச்சுரந்த மதியைச்சூன்று கிரணங்களை வாங்கிச் சேர்த்தாற்போன்ற கவரி கதிரைச் சொரிய எட்டுமங்கலமும் முன்வர யாழால்* வென்றவனது மார்பிலே பூட்டுதற்குச் செப்பிலே பொன்னரிமாலைவரப் பின்னே யாழ்களும் போதத் தத்தை வந்தாள். அவளை மன்னரும் பிறரும் பார்த்து இவடிருவோ! விச்சாதரியோ! என்றையுற்று ஒருவன், இவளை யாழால்வென்று மணப்பதன்றி வலிதிற் கொள்ளக் கருதின் போர்செய்வோம்; இவட்டான் யாழ்வல்லாரெல்லாரையும் வெல்லின் இவளைப் பெறுதற்கு நல்வினை யுண்டாம்படி தவஞ் செய்வோம் என்றிருந்தார். தத்தை யாழ்மண்டபத்தைச் சேர்ந்து திரைக்குள்ளிருந்து தன் மகரயாழை யெடுத்துப் பண்ணையெழுப்பி நரம்பைத்

---

* பனிச்சை = பின்னிமுடிக்கும் மயிர்ச்சுருள்.

னத்திலொன்றாகிய * பதுமாசனத்திலிருந்து † கலை நதொழிலின்படி யாழைவாசித்து அதற்கேற்ப பாடினாள். பாடப்பொழில உருகி வளைந்தன. தூண களிரையின்றன. கின்னரமிதுனங்கள் மெய்மற ந்து வீழ்ந்தன. அரசா முதலாயினோர், இவளது புருவம ஏறா; கண்ணுமாடா; கண்டமும வீங்காது எயிறும தோனறா; ஆதலால் இவள் வாய்திறந்து பாடுறாளோ! அன்றியாழ்தான் தனக்குரிய நா மபோடே சாரீரவீணைக்குரிய நாவாலும் பாடி ற்றோ என்று வருந்தினா.

கருநகொடிபபுருவமேறா சயனெடுஙகண்ணுமாடா
வருநச்டிம்டறுமவிமமா கணிமணியெயிறுநதோனறு
விருநகடறபவளச செவவாய திறநதிவளபாடினாளே
ாமபொடுவீணைநாவின விளறதோவெனறு நைநதாா

இங்ஙனம தத்தை * உள்ளாளப்பாட்டுப்பாடி றுத்தலும, அரசா யாழைவாசித்து உச்சதே பாடினார். பாடுமபொழுது முன்னே மெய்மமறந்த புள்ளெலலாம் அதறகு வெருவி அவரைச்சிரிபபன போலப் பறந்துபோயின. தத்தை, கண்டத்தா

---

* நேரிருநது காலடிகள மாற்றிக குதிமேலாப்=பார் ருததல பத்மாசனம்.

† கலைதொழிலாவன="பண்ணல பரிவட்டணைய ாய தறைவரல-கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ நண்ணிய குறும்போக்கு" என்ற எட்டும்.

* உளளாவம்="கண்ணிமையா கண்டந்துடியா கொ டிறசையா-பண்ணளவும் வாய்தோன்று பறறெறியா•வெ ண்ணாவிமை -களளாா நறுந்தெரியற் கைதவனே கநதரு ருளாளப் பாட லுணா."

பாடினுள். பாடலும அவையுள்ளோ புகுந்தயோ அரசர் கணடத்தாற பாடினா. அவை மீண்டு போயின, வேந்தாதிறம இயஙனமாக * வீரரும வேதவணிகரும தத்தையாழ் வாசிககத் தாம் பாடித தோற்றா. அவள்பாட அவா யாழ்வாசித்துத் தோற்றார். கட்டியஙகாரன் இனி இவளை வெலவாா இளமையால் யாழவாசிக்ன யொழிக என்றுன.

சீவகன், தானும் தம்பியும தோழனமாருமாக இருநது புததிசேனன் எலலாரும மறையவனே நோககி அரசாமுதலாயினுா சூழ்நது ஆறுநாள சென்று மாறுபட்ட யாழ்பபோரிலே இககூட்டம் கலைதற்கு முனனே யாமும் செலவேம. கனனி இடந்து வேடகையாற செலகின்ற னலலன் கலவிதோ ற்றுவித்தற்குச செல்கினறுனே எனறு தொள்ளும படி குரவாககுக் கூறென்று கூற, அபபுததிசேன னும கந்துகனுக்குக் கூறினுன்.

கநதுகன், ஐயனுககு, இன்பத்தால் அமுந்த அனனுராய், நீஙகலாகாமையிற சொல்லியபாவை அனனாராய், ஒபபில்லாதவராயக் கலேகள் என்றும அறுபததுநால்வா முனனரே அமைநதிருககின்றா. யாழ்வாசிக்கச செலலுதறகுக குறையிலலேஆயினும் கட்டியஙகாரன, பொருத் குறையுண்டெனறுகூறினு ன. கூறுஙகால், கோயிலினின்று ஒருசேடி ஒருததிவந் துதனது கூநதலிற்சூடியிருந்த தாளிக்னயுடைய குவ

* வீரமொன்றது அநதணா. ‡ "அந்தணாளர்ககரசு வரைவின்றே" எனறுதனல. ‡ தொலகாப்பியா, பொருள திகாரம், மரபியல, அஉ.

மயிரிலேவைத்த பூவொன்று இகழாதே இவளை வாசிட்ட நாகமாலையின் குறிப்பாலே ஒருகாரியம் உண்டென்று கருதி அதனைவாங்கி அந்நாகமாலையின் குறிப்பை விசாரித்து அப்பூவின் அலவியுட்கிடந்த ஓலையை வாசிக்கின்றவன், கட்டியங்காரன் நியுடம்போபோல வெம்பி நஞ்சையுடைய கடவுள்போல எரிந்து இப்பொழுது எனக்குச் சொல்லுவதுஞ் செய்தான் ஆதலால் நம்பனைக் கொல்லலுற்றேன் என்றான். இந் நம்பனை நகரியினின்றும் போக்கி ஒரு சேமத்திடத்தே வைக்க என்று வாசித்தான். வாசித்தவன், ஓலைகொணர்ந்தவளைப் பார்க்க, அவள் அடிகள்! மேலை நாளுடையாயினோடு நான்று விளம்புவேன் என்றாள். கந்துகன் திங்கள் விரவிய பெயரையுடைய மனையினை நோக்கி இவள் கூறுகின்றதைக் கேளென்றான். அவள் அப்புத்திசேனனை நோக்கி, நாடகங்காண்டற்கு எழுகோல் அகலத்தையும் எண்கோல் நீளத்தையும் ஒருகோல் குறட்டுயரத்தையும் இரண்டு வாயிலையுமுடைய அரங்கை அணிந்து பார்ப்பனப் பூதமுதலிய நால்வகைப் பூதங்களையும் பிறவற்றையும் எழுதி அமைத்து நடையறிபுலவராகிய இயலாசிரியனும், அடலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும் தண்ணுமைமுதல்வனும் பிறருங்கூடி அரசனொடு எண்ணிச் சீவகனைத் தொண்டாக என்று கூற, அவனும் தோழரும் சென்றார். நடையறிபுலவர், சீவகனை நோக்கி நாடகமகளாகிய இவ்வநங்கமாலையை ஐயன் அணிக என்று சொல்ல, அச்சீவகன் பட்டம் கட்டிக் கோதைசூட்டிச் சாந்தும் ஆரமும் பூணும் சேர்த்திச் செப்பட்

டு கலையுடுத்தி அவளைப் புனைந்தான. அவ்வநங்க மாலை, சீவகன தன்னை அலங்கரிக்குங்காலை அவன திண்டோளில் தனக்கு வேட்கை நிகழ்வுப அவற்கு வேட்கைநிகழாமை கண்டாள். கண்டு இனி இவனைக் கூத்தினாற் பிணிப்பேன என்று உட்கொண்டு போந்து, யாழும் குழலும் ஏங்கச் சிலம்பு சிலம்ப வலக்கால் முன்னை வைத்தேறி, வலத்தூணைச் சேர்ந்து, மேலே வெருவிப்பார்த்துத் தெய்வத்தை நோக்கிப் பின்பு கூத்தாடுகின்றாள். இவட்குச் சீவகனிடத்து வேட்கை யுண்டானமையின, ஒருத்தி ஒருவன மேல வேட்கையுற்றதோர கதையை நடித்தாள்.

செங்கதிரச் சிலம்பு செம்பொற்கிண்கிணி சிலம்பக்கோதை
பொங்கப்பொன் மேகலைவட்டம் பொழிந்துமின்னுகுப்பப
[ப்பூநீர்க்
குங்குமச் சாந்துதோய்ந்த குண்டலந் திருவில்வீச
அங்கதிராரமின்ன வரிவைகூத்தாடுகின்றாள். ௬௭௫

மருங்குலு மொன்றுண்டாக்கு மொருமகளாதலோர்ந்து
மருப்பிளம் பிறையன்றொக்குந் திலகமோ விருந்துகாண்க
வருந்தினமே இவளைத்தந்த தாயரோ கயத்தியன்றோ
சுரும்புசூழ் கண்ணிசூட்டி யவர்கொலோ செய்வரோசொல
[லீர். ௬௭௬

நாந்தலும் அங்குள்ளாரிற் சிலர் இவட்கு இடையும் ஒன்றுண்டோ வேறு சேம இடையுமில்லை. இது முரிந்தால் இவள் தாய்க்குப் பிள்ளை இவளொருத்தியுமே வேறில்லை; அதனை யறிந்தும் இரும்பாற் செய்த நெஞ்சினையுடைய இக்கொடியோர் அருளின்றி இருந்து காண்க. இவர் இது முடிவுபோகக் காண்டல அறிந்தும் இவளை அரங்கின்மேல் விட்டதாய கொடியரோ அல்லாயின கண்ணி சூட்டியவர

கொடியரோ இருவரினும் கொடியவரைக் கூறிக் கனீர் என்பாரும், இவள் அகிற்புகை அணிந்தனளாயினும் சந்தனமும் அணியாள்; பூவின் அருகும் செல்லள்; ஆகவும், இவளுக்கு இடை என்பது ஒன்று இன்றாகவும் சாந்து எழுதி முத்தம் அணிந்து பூவுஞ் சூட்டக்கண்டும் இவடாய் உயிருடனே யிருந்தாளாதலொரு பாவம் இருந்தபடி என்னே என்பாரும், இவளது இடை, நம்மைக் கொல்வதற்கே முத்தம் இட்டுவைத்துஞ் செய்தார்; குங்குமச்சேறு ஆட்டுவதுஞ் செய்தார் அவர் கொடியரானார்; தமது காதலிட்டு வாழ்வார் சிலரை உலகம் தானே அழிக்குமாயின் அவைகளும் தாமே நம்மை அழிக்க அமையும் என்று கருதித் தான் முறியாத மாத்திரையாலே தானுடன் உளவென்னும் அளவாயிருந்தது. இப்பாதகத்தைக் கண்டுவைத்தும் இருந்து நாடகம் காண்பாரும் உளராயினர் என்பாரும் ஆயினர். அநங்கமாலை, தலைகூத்திலே சீவகற்கு வேட்கை நிகழ்ந்ததோ இல்லையோ என்று அறிதற்குத் தனமேனி வாடியதையும் நோயையும் உரைத்துக் கண்ணென்னும் ஓலையெழுதி அதனை முறுவல் என்னும் தோழி கையிலே கொடுத்துச் சீவகனைக் காணப்போக விட்டாள். சீவகன் இணங்காமைகண்டும், நாடகமகளாதலில் தலைவனைஞ்சு வருந்தாதபடி நம்பி பூச்சூட்டப் பெற்றேன், வலிதிருத்தப்பெற்றேன் மகளிர் பெறும் இன்பம் எல்லாம் பெற்றேன் என்று தன் மனத்தைத் தேற்றிக் கட்டியங்காரனை நோக்கினாளாயினள். அவன் அநங்கமாலைக்குச் சீவகனிடத்துக் காதலுண்டானமையைக் குறிப்பாலுணர்ந்து சீவகனைக் கொல்லவேண்டு

மென்று செற்றங்கொண்டான்; கொண்டு, அநங்க மாலையை வலிதிற்கொண்டு கோயிலுட போய்ப் பிணைத்திலிருக்கும சாக்கை தாமரைபபோதைப்புல் லிக்குடைநதாற்போல அவளது முலலையைப பறித் தான்; அநஙகமாலை சீவகனையே கூடுவேன் என்றிரு ந்தவின முல்லையாகிய அவளது கற்பை அழித்துக கட்டியங்காரன் கூடினான். கூடுதலும் அநங்கமாலை கூடும் நெறியறிநது கூடுவோய! நம்பி! சீவகசாமி! நீ வநது புலலுவாயாக என்று கடலொலிபோல அர ற்றினள். கட்டியஙகாரன், அநங்கமாலை தனதருகே இருநது வேறொருவனது நன்மையை அங்ஙனங்கூற க்கேட்டும, சிறிதும வெட்காதுகித் தன அமைச்ச ரை நோக்கிக் கநதுகன் மகன விலங்கலையொத்த வேழம நான்கையும வெல்லும ஆற்றலன என்று உலகமெலலாம கூடி அவன் நலத்தை கூறுநிற்கும்; இநநகர்க்கு அவனே பெருமான் நீவிர் கூறுவிர் என் றான். அது கேட்ட அமைச்சா அச்சீவகன், ஆயிர வரால் எடுக்கலாகாத உலத்தைநேயநதி ஆடினான்; யா னையால எடுத்தலாற்றாத இரண்டு கலவினையும இர ண்டு கையிலும் போதுபோல எநதினான். வேடர் சிலையாலே அமபுமாரிபெயய நம்படை ஆற்றாது உடைநது ஒடினபின்பு அவன் சென்று நிரையை மீட்டுப் புகழ்மாலை சூடினான்; இன்னும் சொல் லின், அவ்வணணல் அவ்விடத்தே நாம் பசித்து இளைத்தபொழுதிலே பருப்புசசோறு ஆயிரமிடா வும் நறு நெய்யும் கன்னலும்கொணாநது தந்து நம் பசியைப் போக்கினன் என்றார். சீவகன் வலியனு மாய் நமக்கு உதவிசெய்தான் என்று அவா கூறக்

கட்டியங்காரன், மகிழாறும் இவர் கருத்தாலும் அ
ன் வலியாலும் இனி நான் அரசு இழந்தேனல்லே
னோ என்று உட்கொண்டு இவனைக் கொல்லும் வ
எங்ஙனே என்னும் சூழ்ச்சியிலே இருக்கின்றா
என்று கூறினாள்.

கந்துகன் மாலைக் காலத்திலும அங்குப் பிற
கும் சொல்லை ஒற்றிவாவென்று சேடிக்குக்கூறி அ
ட்குச் சிறப்புச செய்து அவளைப் போக்கிப் புத்
சேனனை நோக்கிக கட்டியங்காரன் கருத்து அன்
தாதலை நாகமாலை அறிந்து கூறி விடுத்தாள்
காரியம இன்னதாயிருந்தலாலே படையமைத்து
போவீரென்றான. சேடிவந்து கூறியவற்றையு
கந்துகன் கூறியவற்றையும புத்திசேனன் கூற
சீவகன் கேட்டுச்சிறித்து நமக்கு வருவதோர் தீங்
ல்லை காண் செலலுதும் என்று துணிந்து ஓரோ
யை ஒரு காதிற்குச்சோத்தி ஒருகுழையை ஒருகா
ற்கு இட்டுத் தனைனப் புனைந்து புலித்திரளபோல
தோழர்சூழக கதிரவன் ஒரு மலைசாரந்தாற் போல
யானைமீதேறிக் கட்டியங்காரனது பொரூத மன
தைத் தனது பொலிவு என்னும் மத்திகையாலே
அடித்து யாழ்மண்டபத்தைச சேர்ந்து யானைப்
னின்றிழிந்து புதிதாய் இட்டவட்டமான வெள்ளி
தவிசின்மேலிருந்தான். அவன் அத்தவிசின்மேலிரு
த தன்மை, சூரியன் சந்திரன்மேலிருந்த தன்மையை
யொத்தது. காந்தருவதத்தை, சீவகன்தன்னை வெ
று பெறுவனென்று தனது ஞானத்தாலே யுணர்
தாள். உணர்ந்துவீணாபதியை நோக்கி நல்லதொரு

வீணையைக் கைக்கொண்டு சீவகனுக்கு இனிய யாழ் இந்த யாழாயினும் அவனது கல்வியை அறிதற்குப் பல யாழையும் செலுத்திடப் பின்பு இந்த யாழைக் கொடுப்பாய் என்று சொன்னாள். சொல்லி ஏவுதலாலே, அவ்வீணாபதி அவ்வீணையொன்றனையும் நீக்கியொழித்து ஒழிந்த வீணைகளை எடுத்துக்கொடுத்தாள். சீவகன் அவற்றைக் கைக்கொண்டு அவற்றின் நரம்பைத் தெறித்து வீணாபதியை நோக்கி இந்த மரம் மெலிகிறது. இந்த மரம் அழுகினது. இந்த மரம் புண்ணுற்றது. இந்த மரம் உருமேறுண்டது. இந்த மரம் சிறைபயின்று இம்மரம் வெந்தது. இந்த மரம் முதிர்ந்தது. ஆதலால் இவைகள் வேண்டா என்று ஒழிந்த யாழ்களையும் போக்கினான். போக்கவே வீணாபதி நல்ல யாழை நீட்டச் சீவகன் வாங்கி, மண்மகள் பெற்ற மரம், விசும்பு என்னும் செவிலித்தாய் முகிலாகிய தனத்தாலே மாரியாகிய இனிய பாலை ஊட்ட உண்டு நோய் நீங்கி வளர்ந்து வாளின் வாயால் அரியப்பட்டுவந்தது இவ்வியாழ் என்றோதினான். ஓதி நரம்பின் தீமையை நெடும்பொழுதெல்லாம் ஆராய்ந்து கூறி அதனைக் காணும்படி முறுக்கையுடைத்து, அதிற்கிடந்த மயிரை எடுத்துக் காட்டினான். காட்டவே அவையிலுள்ளோர் இனி நம்பிக்கு நங்கை தோற்றாள் என்று கூறுநிற்கச் சீவகன் தத்தையது யாழை நன்றாகக்கொண்டு, நபுன், வைத்திருந்த தனது நரம்பை வாங்கி அவ்யாழிற்சேர்த்தி இடக்கைவிரலால் மாடகம் தழீஇ வலவிரலாலே அவன் கவர்ந்து எடுத்த பாட்டைத் தேவரும் மக்களும் தம்மில் வாசியின்றி, கண்டமெ

ம்பரிவையமாயிருந்தது என்று உட்கொண்டார். தந்தை, பருந்து பறக்குமிடத்துமுறையே உயர்ந்து நிலத்தினைக் கண் நின்றுயர்ந்து பின்னும் அம்முறையே மேன்மேல உயர்கின்றாற்போலப் பாடிய பாட்டும், யாழ்வாசினையும், சீவகற்கே விருந்தாரச் செய்தன என்று கருதி, யாழ்வாசித்து மந்தரஸ்தாயிலே அவனை ஒத்திலளாயினள். ஒத்திலளாகி, அச்சம ஒருபுறத்தே தாழ, தோடும் குண்டலமும் இலங்க, நுதலவியர்ப்ப, எருத்தங்கோட்டி அம்மதுரகீதத்தைப் பாடுகின்றாள். எங்ஙனமெனின், வேட்கையும் சிறிது புலப்பட்டு நிற்றலின் இளவேனில் வருகின்றமை கண்டு ஆற்றாளாகிய தலைவி, தோழிக்கு உரைத்ததாகப் பாடுகின்றனள், இசைக்கலைநிறைந்த சொல்லினாய், மேனிபசலையிலே மூழ்குமபடி ஒளிநிறைந்த வாள்போல் இலங்கும அருவி, மலைமேலே மினனுமம இதனைக்கேள்வர் காணாரோ. கறைவேல்போலும் கண்ணினாய், நுதல்முதலியன பசலையிலே மூழ்குமபடி ஒளிநிறைந்த வாளபோல் இலங்கு மருவி, மலைமேலே மின்னும் இதனைக் கேளவா காணாரோ. கருமபுபோலும் நீஞ்சொல்லினாய், தோள்முதலியன பசலையிலே மூழ்குமபடி முத்து வடம்போலும அருவி, மலைமேலே மின்னும இதனைக்கேள்வர் காணாரோ என்னும இப்பொருள்கொண்ட பாட்டுக்களைப் பாடினாள். அவள் பாடிய பாட்டும யாழும ஒருதிறமாயிருந்தன. சீவகன்பாடிய பாட்டும யாழும வேறோர் திறமாயிருந்தன. அவள் பாடிய பாட்டுக்கள், தாமபுடன் நடவாவாயின. அவளது வீணை யொழிந்த பாட்டுக்கள், விண்ணிலே நின்று

இயக்கி அக்காலத்தே கம்பித்தலைச்சோர்ந்தன. ஆ
லால வாதிற்கு எடுத்த கீதத்தில் சிறந்து குறைந்து
அவள் இசைதோற்றாள். தத்தை தான் தோற்
றற்கு நாணிப் பொன்மாலையைச் சீவகனுக்குச்
சூட்டி அவனை வணங்கி அவையிலே நிறைந்த நாண
நிலம நோக்கி மின்போல நடுங்கினாள், அவட்கு
நாணத்தால வரும இறந்துபாடின்றாகச் சூழ்விழப்
தோா திரையைத் தோழியா விழ்த்தார்.

சீவகன், தத்தையை யாழானும பாட்டானும
வென்றான. நல்லன் என்று மாந்தா, கடல்பொலிய
ஆர்ப்ப, கட்டியங்காரன் அது பொறாதே மனம்புழு
ங்கி அரசரைக்கொண்டு சீவகனைப்போர் காணவேண்
டி, மன்னரை நோக்கி வணிகன்மகனை அரசன் நோட
லன்றி அரசன்மகளை வணிகனுக்கு நீங்கள் கொடு
கின்றமையால, மேருப்போல் நிலைகுலையாத நும
குலத்திற் கெல்லாம் வடுவுண்டாக்கிக் கொண்டீர்
இதுவுமன்றி இவன்முன்னர் நுமது ஒளியுங் குறை
ந்தீர். இவ்வடுவை, ஒருகாலத்தும் மாயாது. இத
னை மாய்விக்கும் வாட்போரை அஞ்சுவீராயின் நீ
அளிக்கத்தக்கீர் அரசைவிட்டுப்போய் முனிகளாய்க்
காட்டிலே சென்மின் நீர் போர்செய்தற்கு அஞ
சித் தத்தையை அவனுக்குக் கொடுத்தலால யான
நினைத்த அளவாய் என்கீழ்வாழ்கின்றவனை எனக்கு
நிலைகுலைத்தல் அரிதாக்கினீர். தத்தையாது இலக்
கணத்தை நோக்கின் திருமகளாகிய அவளைச் சோ
தவன், கடலை ஆடையாகவுடைய நிலமகட்கும சக்
கிரவாளத்திற்கும் இறைவனாவன். இவனை நாம
வெல்லினும, பாவையொருத்தி, நாம பலராதலால்

இவளைப்பெறுதற்குப் பின்னும் நமமிற்போர்செய்ய வேண்டுமே என்று கருதி மனம் தளரவேண்டா, நமது உயிர்போகாதபடி குளத்திலே சிவிறியாலே நீரைத்தூவித் தனித்தனியே பொருது வென்றவர், அவளை யடைக என்றான்.

கட்டியங்காரன், அங்ஙனம் கூற, மன்னர் கேட்டுத் தத்தையது போகத்தை விரும்பி, கந்துகன் பிள்ளையாகிய ஐந்தலை நாகத்தினது கோபமாகிய நஞ்சிலே அழுந்தலுற்றார். சீவகனும் நந்தட்டனும் ஒரு தலையும் சீதத்தன், புத்திசேனன், தேவதத்தன் இவர்மூவருமமூன்றுதலையுமநபுலவிபுலர் ஒரு தலையும்ஆகப்படைவகுத்துளபூநலாலே ஐந்தலைஅரவுபோன்றசீவகனோடுபோர்செய்யஅரசா அமைதலும, யானைமேலானாகிய பதுமுகன், அரசரது தானை போர்குறித்தமையும் அறிந்து கட்டியங்காரன் கள்ளராற் புலியை வேறுகாண எண்ணியதையும எண்ணித் தண்ணிய சிறிய வெய்ய தழலபோலும சொல்லாற் சொல்லா நின்றான். இசையாலே தோற்ற நாம், இசைக்குவணங்கும் யானையாலே வெலலுதும் என்று கருதில் அது பொருந்துவதன்று; அதுவும வசையுடைத்துக்கண்டீர்; அதுவேயுமன்றித் தீத்திண்டிறைசுடும; பிறன் மனையை நயக்கின்ற தீவினையாகிய தீ, நினைப்பினும சுடும; ஆதலால இங்ஙனம் பழியும் பாவமுமாய் நீரே அறிதற்கு உரிய இதை, நுமக்கு மாறாகிய யான் இரந்துகொண்டு நுங்கட்குக் கூறினேன். வந்தவழியே கடுகப்போவீராக; இன்பத்தை வேட்டோர், தோளாலே புலவிபெருகின்ற அமிர்தத்தை நீவாளாலே பொ

ருது வலிதிற்கொள்ளின், நுங்களை வாழ்க; அதுவுமன்றிச் சிங்கமபோன்றவன், ஒரு மகளைப் புணர, நுமது நல்வினையால் தரணியைப் புணரப்பெற்று நின்றீர்; இனி முடியாத முயற்சியாற் பிறக்கின்ற வருத்தத்தைக் கைவிடுவீராக; தனது மதத்தாலே தன்னை யொழிந்த யானைகளைக் கெடுப்பதாகிய ஒரு யானை, மிக்க சினத்தையுடைத்தாய்அதிமதுரமுடைய குளகைக் கையிலே கொண்டால அக்குளகை யாவர்க்கும் கொடுக்காது. தத்தை நம்பிக்கு அக்குளகின தன்மையாள்; இதனைத் தனித்து ஆராய்ந்து காணீர்; இடபம், இளம்பசுவைப் புல்லித் தனது இனத்திலே நின்றால உழாநின்றவெருது, அப்பசுவை நுகரக் கருதிமுயல்தலை உடையதாமோ; அதுபோலத் தத்தையைச்சீவகன் தழுவி நின்றார் கோடற்கு முடியாமல் வருந்திப்போவதல்லது நுங்கட்குக் கூடுதல கூடுமோ; பேய்காள்! சிங்கம் * பெட்டைமேலே மேவிநின்றால மேற்சென்று அச்சிங்கம் கெடும்படி பாய்தல புலிக்குக்கூடாதாகலினநீர் கருதுகின்றதும அத்தன்மைத்து; அரசிகாள்! தத்தையதுதோட்டுணையாகிய சீவகனைப்பிரித்தல, இந்திரனுக்குங்கூடாது; இன்னமும் கேண்மின், இரதியைக்கூடுவேம என்று வேட்கையாலே நினைத்தார்க்கு அவளைக்காமனிடத்தினின்றும்பிரித்தல் கூடுமோ. நீர்எம்மையொருவாறறான் வெல்லப்பெற்றீராகப்பாரும், அங்ஙனம

---

* ஒட்டகங் குதிரை கழுதை மரை யிவை—பெட்டை யென்னும் பெயர்க்கொடைக்குரிய.'' இதனுட்கொடை யென்றதனாற் சிங்கத்துக்கும் பெடைகொண்டவாறு காணக. தொல்காப்பியம் பொருளதிகாரம், மரபியல், ௬௨

வென்றபின்பு, கட்டியங்காரன் நும்மையும் பகைப் பித்து நும்மிலே நீர் பொருதுபட்டால் நுமது உல கெல்லாவற்றையும் தான் ஆளுதற்கு முறைமை உண்டாகாநிற்கு மெனவெண்ணினன். அதனை என்னை யொழிய நீர் ஆராய்ந்து பாரீர். இவன் கருத்து முன் பும் அத்தன்மைத்து, மன்னிர்! எங்கள் சொலவன் மையன்றி வில்வன்மையையும் இரண்டு நீர் காண்பீ ராக. சக்கரவியூகமாக வகுத்த படையாகிய விளைநில த்தே அம்மையும் தண்டையும் விதையாக விதைத் துப் பிணமாகிய, நெல்லை விளைவித்தபின்பு, குருதியா கிய நெய்யுடனே இறைச்சியாகிய சோற்றைப் பல பேய்களுக்கு ஊட்டி, விசயமகள் விரும்பும்படி களம் வேட்டுநின்றவர்கள், தத்தையைப் பெறுவார்கள். ஒ ரு பயனின்றி வெகுளல வேண்டா என்று கூறினை பதுமுகன் தான் மேலே கூறிய தண்ணிய, சிறிய, வெய்ய, தழல என்னும் சொற்களின்பொருட் கே ற்ப, சாமபேததான தண்டங்களைக்கூறி இருத்தலும், அரசர் படைகடல்போல முழங்கி ஆர்த்தது.

சீவகன் அதை நோக்கித் தத்தையையும் நோ க்கி நின் கண்போலத் தப்பாத எனது அம்பிற்கு இரையாவதற்கு வேந்தர் விரும்பினின்றார். நீ வருந் தாதொழிக என்றான். தத்தை, அம்மேயோ என் று துணுகவென்ற நெஞ்சினளாய், மெய்ந்நடுங்கி, அழுது கலங்கி, உறவாகி நம்பிகருக கடிய பகையை விளைவித்த பாவியேனது உயிரே நீ பாழுடலைக் கை விட்டுபபோகின்றிலை. இங்ஙனம் போகாத நீயும் ஓருயிரோ என்று அழுது தன் கண்கலங்க அடித்துக கொண்டாள். வீணாபதி நங்காய், வலியையுடைய

நமபடைமேலே நின்றது. இது இவர்களையன்றி இப்பாரிலுள்ளோர் எலலாரையும் கொன்று குவித்து ஒன்றாகக் கரைந்துக் குடித்துவிடும என்று கூறி முன்றானையாலே கண்ணீரைத் துடைத்தாள். அப்பொழுது நங்கைவாட்படை எங்கள் பெண்தன்மையிலும மன்னர் ஆண்தன்மையிலும அமைவதைக் காணககடவேம் என்று கூறி நஙகையைச சூழ்ந்தது. கூன்களும குறளும படையெழுச்சிகண்டு, அருசி குடல வெநது, பொறபெட்டிகளகளை உள்ளடககிக் கொள்வதாகக கருதி, அதனுளளே புகுதறகும சாநதுவைநத பரணிகளிலே புகுதறகும ஓடிசசெல்வனவும், பூமாலைசூடி மாலையாயுததிரண்டு நிறபனவும் உருவமுடைய பளிக்குததூணிலே மறைவனவும் ஆயின. சீவகன், கண்டு முறுவலித்துத் தத்தையைப பதுமுகன், காகக என்று கருதி அதனை அவனுக்கு நகாநின்று கூறிக கடியதோர் சிங்கம, அவ்விடத்தில சிங்கங்களின முழககாலே சீறிக கோபித்து அவற்றின்மேற செல்வதுபோலே சமுழொலிக்க, பதுமுகன் இருந்த இடத்தே சென்றான். பதுமுகன் தத்தையைக் காக்க மண்டபத்தின வாயிலளவும் களிற்றைச செலுத்தி அதிலே நிறக, சீவகன், நம்முடைய சுற்றத்தார் வாள்முதலியவற்றை எந்தி நமது சேனையை நான்குவகையாக வகுத்து, நிறுத்துக என்றான். என்று தான், வாளவீசுகி அருச்சுனன் போலத் தேரையேறித் தோக்காலைக் காபபச் சிலையேவினான். ஏவிச் சினம வெவவியதாய்த் தன்மனத்தே தோற்றி மிக்கு உடம்பினைச செலுத்தாநிற்பளால, மன்னனை நோக்கி மிகநககுப போர்செயத

ால உண்டாகும் புகழை விரும்பும்படியன்றாக,
ன்னுடைய வீரமும் காயங்களை; எங்கும் புகழ்
ன; ஆதலால், நீர் தத்தையைக் காதலித்து யாழ்
ாசிகப்போந்தீர் என்பதனாலே அநீதியாக்கு
மயிடத்திற் பிறந்த புல்வியாலே பின்பு அவர்
பெறுகின்ற கல்வி இன்பத்தைப் பாழேயுகுப்பா
ால என்றான். மன்னர், சீவகனைநோக்கி நின்குல
த்தோர், ஊழ்வா உண்ணுமலே ராட்டியமுதலோடு
லாபத்திற்கும் அழிவுவந்தால், இரண்டையும் இழ
பதினும் முதல் பெறுவதும் ஊதியமே என்று
கொண்டு இலாபத்தினமேலே செல்லுகின்ற ஆசை
ய விலக்கி முதல் கெடாதபடி அதனைக் கைக்கொ
வர். நீயும் அது செய்யாது போர்குறித்து எழுந்
ாலே நினக்குரிய வாணிகத்தை நீ அறியாய். இனி
தத்தையாகிய இலாபத்தைக் கைவிட்டு நின்
னுடம்பாகிய முதலைக் கொண்டு பிழைக்கப்போ என்
ர். சீவகன் அதுகேட்டுத் தமருடைய பண்டத்
தைப் பிறர்க்குக் கொடுத்து அவர்களது உடைமை
னை வாங்கிக்கோடல் எங்குலத்தோர் வாழ்வாத
லின் அஃது எமக்கும் ஒக்குமன்றே. இனி யான்
ங்கட்கெல்லாம் என்னை அம்பைத் தந்து நும்மு
டைய வீரமதனையும் புகழையும் இப்பொழுதே கொ
வேன் என்றான். மன்னர், சீவகனைப் பார்த்து நீ
து மார்பிலே சரங்கள் பாய்தலாலே நின் வன்பு
தலியன கெடக்கிடக்கலுற்ற பாவி நீ எது சொ
லாய் என்றார். சீவகன், பரிதிமுன்னர் இருளிருக்
தல் போல நீர் எனது தோற்றங் கண்டுபோச்
ான் நுமதுபுறங் கண்டு பின்பு தத்தையைக்கூடு

வேனா. அது செய்யநிலேலுறாயின் என புகழ் சந்
சூரியா சஞ்சரிக்கின்ற உலகு எங்கும் நடவாது
லெதாக என்றான. ஆனாகிய மாதனைத்யுடைய
னாகிய நிலத்தே அமபுவேலாற செய்த விடு
னைா யுடைய எல்லாருமகாணடற்றுடைய காட
ல களிறுகிய வரைமேலே வேநதராகிய வேழத்
ள், தத்தை என்கின்ற பிடியை விருமபிபபோா
யதலுறறது. இசை ஏழினுலும் உயாநத சீவக
என்னும் யானை, கை நநதட்டனாக, மருப்பு நபு
விபுலராகத் தாள தோழர் நாலவருமாக, மும்ம
ம தேரும் குதிரையும காலாளுமாக, அரசராகி
யானைகளோடு போர்செயயத் தொடஙகிறறு. வே
நதராகிய யானைகளும் தத்தையாகிய பிடியையுமை
ய சீவகனாகிய யானையும் தமமிற பகைத்துப் புரியு
போாத தொழிலைக காணடறகு விருமபியா மலை
நெறறியிலே ஏறினார். இரணடுபடையும கலந்
இயம இயமபின சஙகு ஒலித்தன. வாடகுழா
இலங்கின குதிரைகள் ஒனறையொனறு ஏறறு
தோகள் ஒனறையொனறு தடுத்தன. யானைகள்
ஒன்றையொனறு காய்நதன. இஙஙனம இரண்
படையுமபொருதாநிறக, சீவகன் நநதட்டனை நோ
க்கி இவவிடத்திலே நமது இடா கெடுமபடி வீரமந்தி
ரம இரணடையும நீ கறறுக குதிரையினது செவி
யிலே மொழிக என்று சொலலி அவனுக்குச
கூறினான. நநதட்டன சேட்டுககூறவே புரவி
நானகும அநதரத்தே பாய்நதன. தேரின் உரு
வா நிலைதனை விடடன நநதட்டன், குதிரையை
தொழிலிலே பயிறறும வாயககயிற்றை ஆயந்து

...ந்துபோயின. மேலே கூறியவாறு சீவகன், தோழிக்குலாமே நொந்துபோகாத சில அரசரது படையைப்போக்கவும், அவர் ஏறிய தேர்கள் கயிறு அற்று மறியாநின்றன. அவர் ஏறிய யானைகள் கச்சை துணிந்தனவை குன்றமொத்தன. நாண் அற்ற விற்கள் துண்டுபடப் போயின. இவை கண்டும் மற்றவர்தாம், அழிவையெதிர்த்துக் கடுக ஆர்த்தார். அது கேட்டுச் சீவகனது படையிலுள்ளாரும் ஆர்த்தார். அச்சீவகன், முடிவில் படையை இறைசக்குஞ் முழக்கினன். பதுமுகன் யானையைச் செலுத்திவருதலும் அவ்யானை தனது மருப்பாலும் கையாலும் காலாலும் வாலாலும் கொன்றது. பதுமுகனும் வில்வாங்கி அகன்றுநின்றான். பதுமுகன் கொன்றமையைக்கண்டு அரசர் தமது யானையை விட்டார். சீவகனும் தோழரும் இனி இவரை எய்யவேண்டுவதில்லையென்று தமது கைவில்லை மடக்கினார்.

கண்ணன், பாரதப் போரிலே முழக்கிய வலம்புரியினொடுபடைக்கொண்ட சங்கைச் சீவகன் முழக்கினன். ஆழியான் கடைந்த கடல்போலே வேந்தர் கலங்கிச் சீவகனைத் திருமாலே என்றும் அவன் முருகனே என்றும் கருதி ஒருவரோடொருவர் கூடாத்தன்மையாலே கேடுற்றார்.

உலகத்தீர்! சிறுபடையாளர் மிக்க படையையுடைய அரசரை வருத்தித் தமக்கு ஊறுவதுமின்றி அவரை வென்று போகுவாரோ என்று கருதவேண்டா. விலங்கேயாயினும் யாளி வேழத்திரளைக் கெடுக்குமன்றே. புலியொன்று மான்கூட்டத்தைக் கெடு

ருமனரே. இவற்றை யுணர்ந்து தெளிவீராக ஒரு
ளை ஒருவர் வெல்லும் தன்மையைக் கேட்பீராயின
லலவைபுரிவார்க்கு நலலவைபுரிவாரது கைவாள
ப்பிவிழாது. அவர்க்கு அதுவுமின்கை நல்லவைபுரி
ரர் வெற்றிலையைவிடினும் அதுவேலாய் விழும் தி
ம இடங்கொண்ட மனத்தினர் அத்திரம் பெறி
னும். அவர்க்கு அவை சிறிதும் பயன்கொடா. ஆத
ரல அத்தியோர்க்கு ஒரு காலும் வெற்றியே இ
லை.

சீவகன் போரிற் கொன்ற பாவம் தீரப் பொன்
றற் பாவை செய்து தானமும் பண்ணிக் களவேள்
முடித்துப் பாவத்தையும் என்ன காரியம் செய்
தாம் என்னும் வெறுப்பையும் போக்கித் தீர்த்தன்
ரத மெய்திய சேடத்தையும் வலம்புரி அதனில
ரத்த நீரையும் கொண்டு தொழுது தீர்த்தனைத் துதி
தான். துதித்துத் தத்தையைக் கொண்டு தன் மனே
லே புக்கான். போரிற் புண்பட்டாரெல்லாரும் சீவ
னுற கலம்பல நல்கப்பட்டார். சுற்றமும் அழும்படி
ட்டாரெல்லாரும் கைகழி கொடுக்கப் பட்டார்.
ரப்பொருந்து போலப் புண்ணுற்றார்க்கு மருத்துவர்
து மருந்தென்று கவளம் வையாநிற்க, சீவகன்
துமுகன் மார்பிலே கிழியைச்சேர்த்திக் காற்றுப
டாதபடி உள்ளே சிலையைச் செருகிய எலிமயிர்ப
டத்தால் செய்த சட்டையிலே புகுக என்று பரிக
த்தான் பின்பு கலியாணத்திற்கு அரிசி முதலிய
ும் முழவுபோன்ற பலாக்கனி முதலியவும் வந்தன.
யுனனம வந்த*பசசையைக் கணக்கர் எழுதிக் கை
நாந்த பட்டோலை களைக்கிழித்து இளைப்பாறினர்.

அக்காலத்தில் அன்னம் அமைத்தற்கு அரிசி கழுவிய நீர், குதிரையும் யானையும் முழுகும்படி குவளையுட தாமரையும் பூத்துக் குருகு பாயும குளங்களாயின அங்ஙனம் சோறு சமைத்தபின்பு கருனை ஆக்குவா. சிலம்பின் அரவமும உண்டற்குக் கலங்கழுவுகின்ற வர் அரவமும எச்சில சிப்பார் கிண் கிணியின் அரவமும கடலொலியினும் மிக்கன. உண்டபின்பு துகிலும நானமும மாலையும சந்தனமும் மெய்ப்படுத்தினா. இங்ஙனம் சமாவாத்தனம முடிய, சீவகனும தத்தையும் ஓராசனத்திலிருக்க, சீதத்தன் நீரை சொரிய மணவினை முடிந்தது. சுற்றுச்சுவரை பவளப்பலகையால நிறைத்துத துதலையிலே மணி அழுத்தியபண்ணின தூணை நாட்டி அதன்மேலே பொன்னுறசெயத கையலகைச சேர்த்தி அத்தூணி னை நெற்றி மறையும்படி படாமாகிய மேறகட்டி யைக்கட்டி மாலையை நாற்றி மணவறை இயற்றினா. இயற்றிச சீவகனும் தத்தையும துயிலகே டற்கு இரண்டிம போகம நுகாதற்கு ஒன்றுமாகச செய்த அமளிமூன்றில * சிறு பூளைமுதலியவற்றுற் செயத ஐந்து மெத்தைகளைப படுத்தினா. படுத்திய பாகு கவுட்கொள்வதற்குமுந்தி முதறகவுட கொள்ளும † முகவாசச்செப்பையும சந்தனச்சாந்துச்செப்பையும் மலாமாலைச்செப்பையும சாந்தாற்றியையும் ஆலவட்டத்தையும இளையவா ஏந்தினர்

* "சிறு பூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண—முறு துவிசையை யோரைந்து."

† முகவாசம்— "தக்கோலந்திம்பூத் தகைசாலிலவங் கு—கற்பூரஞ் சாதியோடைந்து."

புவர் ஏகதாநிற்கச் சீவகன் தத்தையைக் கூடி மகிழ்
தான். மகிழும்நாளில் சீவகனை பொழிலைக் காண
வண்டிச் சென்றான். ஆங்கு * விச்சாதரனொருவன்
தோன்றி அணுகி ஓரோலையைக்கொடுத்து மீண்டு
போய் நிற்க, சீவகன் வாங்கி, கலுழன் ஓலை, செல்வ
னாகிய சாமி காண்பானாக; அறமும் இன்பமும் பொ
ருளும தனககு இன்னும மிகவுணடாக வேண்டு
மென்று கருதி இது வரவிட்டேன். மன்னர் தந்
தையோடு வீணையாற் பொருது தோற்றதுமுதல்
யம்மன்னரை வென்றது ஈறாக நான் கூறக்கேட்டே
ன். எந்தை திறத்தில் அத்தான்கூறிய மொழியும
அச்சணந்தி யடிகள் மொழிந்த காரியமும முடியுங்
காலம் முன்பே குறிப்பாலே யுணர்ந்து தத்
தையை, சீதத்தனோடு வரவிட்டேன். இனி மலா
ராபனை நான் நினைத்திருக்கின்ற காரியங்களை எம
கு அறிவித்தலலது நினைக்கவும் வேண்டா. அம
பொருள்கள் ஆகும போம பொருள்கள் போகும.
இவ்விரண்டும யாராக்கும அழித்தலாகாத் தன்மை
யுடைய இருவினையின கூறாகிய இயல்பு. ஆதலா
ல், தான் கட்டியங்காரன் ஆக்கத்திற்கும சச்சந்தன்
அழிவிற்கும வருந்தாதொழிக. உப்பு நீரையுடைய
கடல் உலகத்திற்கு இனிய நீரைத்தருதல ஒருகால
த்துமில்லை. அதுபோலத் தீயகுணமுடையார் பிற
க்கு இனிமைசெய்ய அறியார். கட்டியங்காரன்
மக்கு என்றும அத்தன்மையானவனே. இக்குண
த்தால அவனுக்குக் கேடுவிளையும். என்று வாசித்

* விச்சாதரன்—தரன்.

தான். வாசித்து மாமன் அடியைத் திசைநோக்கித் தொழுது அன்பினாலே தன்னை நீங்காதுநின்ற தானைப போகவிட்டுத தத்தைக்குக் கூறி அவட்கு நகைக்குப பொருள் கொடுத்தான.

காந்தருவதத்தையாரிலம்பகம்

முற்றிற்று.

## நான்காவது,

# குணமாலையாரிலம்பகம்.



சூரியன், வடதிசைப் போதலைக் கருதிக் குற்ற
ற்ற துறவின்கண்ணே மிக்க இருடிகளது மனம
பாலக் களங்கம் அற்ற ககனத்திலே செல்லும் நா
ளில், பின்பனி நீங்கும் பங்குனித் திங்களிலே இள
வேனிலையுண்டாக்கினன். அவ்விளவேனிற்காலத்
தில் மைந்தர் மாதர்களிடம் சேர்தல்போல, மலரணி
ந்த மாதரையொத்து மலர்ந்த கொம்புகளில் வண்டி
னங்கள் சேர்ந்தன. மைந்தரிடத்து ஊடித்துவளும் மங்
கையர்போல, அக்கொம்புகள் வண்டினங்கள் தாங்கா
தொருபுடை வளைந்தன. ஆடவர் வனிதையரது
று புறத்தைத்தழுவி ஊடலுணர்த்தி எதிர்முகமா
க்குதல்போலத் தும்பிகள் அக்கொம்புகளின் சிறு
றத்தைச்சேர்ந்து அவற்றை நிமிர்த்தன. பூத்
தனமெல்லாம் மணம் செய்த மடந்தையர் மேனி
போல இனிதாய் விரை நாறிக் காமனுக்கு விரு
ந்து செய்தன. அப்பொழுது இராசமாபுரத்தார்
க்கொய்து புனலாடக்கருதி உருவுதிரையுடைய
காலவண்டி, பொற்சிவிகை, போதகம், பிடி
களும் இவற்றிலே ஏறி, கதிரவனது ஒளி, இனி
யான் என்செய்வேன் என்று வருந்தும்படி பூஞ்சோ
லை பரவப்போய்ப் பொழிலைச்சேர்ந்தார். குபே
ரதத்தன் மகள் குணமாலையும் அவள் தோழி சுரமஞ்
சரியும் சென்று அச்சோலையிலே திரையை வளை

ந்து அந்நாளை தமது பூவையும் கிளியும் மிழற்ற புகுந்திருந்தார். இருந்த காலை குணமாலை யாவரும் விரும்பத்தக்க சுண்ணத்தைக்காட்ட, சுரமஞ்சரி பார்த்து இது சுண்ணம் என்பதோர் பெயரிட்டுக்கொண்டு நின்னை வருத்துவான் வந்ததோ எனக்கு, என்னுடைய சுண்ணத்தைப் பார்த்துச் சொல்லாயென்றாள். குணமாலை, என் சுண்ணத்தையொப்பது தேவருலகிலன்றி இவ்வுலகில் வேறு சில சுண்ணங்களும் உளவென்று அறிவோர் கூறின் நின் சுண்ணத்தையும் இதற்கு ஒக்குமென்று கூறுவாயென்றாள். சுரமஞ்சரி, அது பொருதே கொதித்து சுண்ணம் தோற்றுப் புனலாடலேம். வெல்வதற்கு அருகனுக்குக்கோடிபொன் கொடுப்பேம் என்றாள். எனவே அவவிருவரும் சுண்ணத்தாலே நட்டக்குலைந்து சுண்ணத்தைக் காணபிக்கச் சுரமஞ்சரியும் குணமாலையும் பின் செல்ல, அவர்கடோழி கனகபதாகையும் மாலையும் சுண்ணத்தைத் தட்டிலே வைத்து மூடிச்சென்று, மைந்தரிடம் காட்டினார் அம்மைந்தர் பார்த்து இரண்டும் நல்ல சுண்ணமே இவற்றின் நன்மையை அறிய விரும்பின் சீவகனிடம் காட்டுவீரென்றார். இராகு கேதுக்களை யொழிந்த கோள்கள்சூழ்ந்த மதியொத்துத் தோழர் நால்வரும் * தமபியர் மூவரும் சூழயிருந்த சீவகனைத்

---

* தம்பியரென்றது நந்தட்டனையும் நபுலவிபுலரையும். சீவகனுக குடன்றோன்றினோரிலரேனுமிவர் கந்துகடன் புதலவரானமையின் இவரைத தம்பியரென்று வழங்குப.

தோழியா இருவரும கண்டு சுண்ணங்களைக் காட்டி இவற்றில நலலதை அறிந்து கூறுக என்று கூற லும, அவன இவை நல்லன என்றான். சீவகன குணமாலை சுண்ணம ஒன்றே நன்றென்று கருதின னாயினும், பலவேறுறையுங்கூட்டி இட்டதலபற்றி இவை என்று சொன்னமையால அப்பெணகளிரு வருக்கும இரணடு சுண்ணங்களும் நல்லன என றதபோலிருந்தது. கனகபதாகையும் மாலையும அணணலே! நின்னை யொழிந்தமைந்த ரெலலா ரும சுண்ணத்தைத் தீண்டியும, மோந்தும, நோக்கி யும் ஆராய்ந்து இரணடறகும வேறுபாடு கூறும லே இவை நலலன எனறு புகழ்ந்து, இன்னும் இவ றறின் நன்மைதெரியவேணடின, சீவகற்குக் காட்டு மிரென்றார். அவா கூறக்கேட்டு நின்னிடம வந் தேம. நீயும அவருடன் கூறினைபோன்று சொல்லு கின்றாய். அவா வார்த்தை மெய்யாம்படி நின்னறி வைக்கூரிதாக்கி ஆராய்ந்து கடிதுரையென்று தொ ழுதாா. சீவகன் இவை நல்ல சுணணம. இச்சுண் ணம இவற்றிற் சிறிது நலலவல்ல. காரணங்கேட பிரேல், பொற்புடைச் சுண்ணம் கோடையில இடித் தவை. நலலவல்லாதவை மாரியிலிடித்தவை என் றான். சுரமஞ்சரியின் தோழி கனகபதாகை, ஒரு வரை விரும்பியகாலத்து அவர் செய்யுந தீயவும நலலவாம. விருமபாதகாலத்து அவர்செய்யும் நல

லவும் தீயவாம். இஃது உலகத்தியல்பு வள்ளலே! நீ கூறிய தீவகை என்னுள்ளம் கொள்ளும்படி அறிவித்த பின்னரல்லது நீ இவ்விடத்தினின்று போகப் பெறாய் என, அவனும் அது கேட்டுக் கோதையினாய்! யான் சான்றால் உணர்த்துகின்றேன். நீ நெஞ்சால் தெளிக என்றான். அன்னமே! உணரின், தேவரினும் மக்களினும் நின் சொல்லைக் கடந்தறிவாரில்லை ஆதலால் அவ்வை பொழிந்த தமிழின்கண் ஒன்றையொன்று அழைத்த சொல்லை அறிந்து பயில்கின்ற பாவைமுதலாயின இதனைத் தெளிவாறு நீ கருதாயின், யான் உடம்படுவேன் என்றாள் சீவகன், பொன்னனாய்! சோலையிலே வாழ்பவர் * நால்வருளர் அவர் நடுவராயுணர்த்துவர் என்று கூறக் கனகபதாகை எம்பெருமான் அருளியவாறே யாம் என்றாள். எழுப்பின பாவை அறிந்த விக்கிரமாதித்தன்போலச் சீவகன் வண்டின் பாடை அறிந்தவனாதலால் வண்டுகளை ஏவுகின்றான். எங்கு மொட்டுத்திரியும் அறுபதங்காள், மிஞிறுகாள், மதுவையுண்டு மகிழுகின்ற வண்டுகாள், தேனுண்டு தேக்கிடுகின்ற தேன்காள், வம்மின் என விளித்தான். விளி

* "நால்வரென்று உயர்திணையாற் கூறுதல் "ஒருவரைக் கூறும்" என்னுஞ் சூத்திரத்து ஒன்றென முடித்தலாற் கொள்க. தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௨௭.

றதலும அவை * கேட்டு வந்தன. சீவகன் அவற்றை நோக்கிச் சுரமஞ்சரி சுண்ணமும குணமாலை சுண்ணமும மிகநல்லனவாயினும் இவற்றில நல்லனவற்றைக்கொண்டு உணமின் என்று கூறி, இருவர் சுண்ணங்களையும் இரண்டு கையாலேந்தி ஆகாயத்திலே தூவினான். நறு நாற்றம தீநாற்றம என்னும் பகுதியின்றி எல்லா மணத்திலும் செல்லும இயல்புடைய சுரும்பும் மிஞிறும இவை தீய என்று உணர்ந்து போதலின், சுரமஞ்சரி சுண்ணம நிலத்தே வீழ்ந்தன. நறுமணம் ஒன்றிலே செல்லும வண்டும தேனும குணமாலை சுண்ணத்தை விரும்பியுண்

* "வண்டுக்குச் செவியுண்டாம. "தாதுண்டுபெடை போதுமுரன்றங்கு எனறும, "இரங்கிசை முரன்றுடு துயிற்றாதுத" என்றுங் கூறுதலிற் றுயிப்பது இளையாம (?)ங்நான்குமெனக. "தண்டுக தும்பி நானகறி வினவை—பிறவு முளவே யககிளைப்பிறப்பே" என்று தும்பிககுச் செவியின்றெனவே இவற்றிற்குஞ் செவியின்றுமாதலாலே வருத்தமிகுதியான் இப்பற்றை நோக்கி வாளா கூறியதன்றி வேறன்று, இவை வந்து கரிபோதலில, கேள்வியிலலன வருதலென்னை ? என்பது கடா அதற்கு விடை ஆசிரியா தண்டுந் தும்பியுமென்று தும்பியைப் பிணைவைத்தது மேல்வருஞ் சூத்திரத்தின் "மாவு மாக்களு மையறிவென்ப" என்ற ஐயறிவு இதற்கு மேறுதற்கெனறுணாக. இதனை வாராததனால் வந்தது முடித்தலென்னுந் தந்திரவுத்தியாற கொள்க. அதுவே ஆசிரியாக்குக் கருத்தென்பது சான்றோருணர்ந்தன்றே. "பூத்த பொங்காதத்துணையொடு வதிந்த—தாதுண் பறவை பேதுற லஞ்சி—மணிநா வார்த்த மாண வினைத் தேரின்" என்று அப்பொருடோன்றக் கூறியதென்றுணர்க." ஆராய்ந்து பொருந்துமாறுணர்க.

டன. சுரும்பும் மிஞிறும் ஒரு குணத்தன வாத லால், இரண்டுமே ஒரு கையை நோக்கிச்சென்று உண்டுதொழிந்தன. மற்ற இரண்டுமே ஒரு குணத் தன வாதலால மற்றொரு கையை நோக்கிசசென்று உணடுபோயின. சீவகன் சேடியரை நோக்கி யா ன் கூறிய நடுவு நிலைமை நுமக்குப் பொருந்திற் றோ என்னும் நோக்கத்தானே நோக்கி யான் தேற றின முறைமையை நுங்கங்கைமார்க்குக் கூறுவீ ரென்றான். கனகபதாகை, சீவகனைநோக்கி நீலமணி யைககரைத்து நிறங்கொடுத்தி எழுதினறபோன்று விளங்கு உலகைக் கமக்கு விலையாக விறகும் புரு வங்களையுடைய சுரமஞ்சரி கணபோலவும் தப்பாத வேலுடையோய! நீ தேற்றிய முறைமையை யா முடம்பட்டுப் புகழ்ந்தேன் என்றாள். என்றவளும மாலையும் சென்று குணமாலைக்கு வென்றி கூற, சுர மஞசரி வருந்தினாள. குணமாலை சுரமஞசரியை நோககிச் சந்திரகிரணத்தால உறுககப்பட்ட தாம ரைமடுவை யொத்து வருந்துகின்ற பாவாய்! என னுடனே கடுக முன்புபோல நகையாடி உரையாய எனறிரந்தாள். சுரமஞசரி, குணமாலையை நோககி நின்னைக்காதலித்து எனது நறுஞ்சுண்ணத்தை இக ழ்ந்தவன், இனி என்னையும விரும்பித் தானேவந்து என்னடியைத தொழும்படி நோற்பேன. அவன் நின்னை விரும்பும்படி நீ முன்னே நோறறாய் என்று தன் குறிப்பைக் கூறும்படி கூறிப் பின்பு உரையா டாது சென்றாள்.

குணமாலையும நீராடாது சென்று கன்னிமாட த்தை சோந்திருக்க, அவணறாய் சுமதி தன் மகள்

ராடாது வருதற்குக் காரணம் என்ன என்று கேட்டாள். கேட்டவட்குக் கன்னியர் சூழ்ந்து நின்று காலிலே நிகழ்ந்ததைக் கூறினர். சுமதி, கண்கள் ஒருவன் குறிப்பினை யொன்று தப்பாமற் கொண்ட கபினவாயினும், பெண்கள் தம்மனத்திலே வேறுக்கொண்ட செற்றங்களை விடாவொன்று தானுட்கொண்டு குபேரதத்தனைக் சார்ந்து, நும்மகள் எண்ணம் விண்ணில இயங்கும் திங்களை இயக்கமறத் தடுப்பார் எண்ணமாயிராநின்றது. இன்று நீர் விளையாட்டிலே ஏந்திழை வேறுபாடுற்று ஆடவனைக் காணினும், அவர் பெயரைக் கேட்பினும் உண்ணேன் என்று வருசினம் கூறினள். அந்த என்றுவிக்குக உற்றமாயிற்று என்று நையாநின்று தேமொழியால வன் மனங்கொள்ள அறிவித்தழுதாள். குபேரதத்தன், நங்கை இங்ஙனம் வருசினங் கூறப்பிறந்தது என்னென்று கேட்ப, சுமதி, சுரமஞ்சரி, குணமாலையோடு இகலிசசுண்ணம் தோற்றுள். தோற்றபடான, நம்பி சீவகன திறத்தாலே ஆடவரெல்லாரையுங் காயந்தாள். பிறந்த காரியமிது இதனை அறிவாயாக என்றாள். குபேரதத்தன, துயில கொள்ளும் யானைபோல வருத்தந் தோன்ற, பெருமூச்செறிந்து, என் பாவை நினைந்த காரியம் வேறொன்றன்றி இதுவேயாயின, மிகப் பெரிதும் மகிழக் கேட்டேன். கோதை தெருவினன்றி இந்நகரிலும் மாந்தர் இயக்கத்தைக் கடியவேண்டினும் வெள்ளமெனனும் எண்ணுடைய நிதியாலே அவள் விரும்பியதைச் செய்வேன். அதுவேயன்றி இன்னதோர காலத்திலே இன்னதோர் நகரில இன்னதோ

இடடுத்தினெல்லையில இத்தன்மையதொரு காரிய த்திறகு ஒரு வணிகன் மகள், ஆடவர் வாராமற கடிந்தொழுகினாள் * போலேஎன் புகழ் நிற்கவேண டும். விலையில்லாததோர ஆரத்தைத் தருவாயென்று வாங்கிக்கொண்டு சென்று, அரசனுக்குக் கொடுத்துத தன் காரியத்தைச் சொன்னான். அவன் அங்ஙன மே ஆக என்று கூற, தெருவில ஆடவர் இயங்கா ராயினர். குபேரதத்தன குணமாலைவதியும மாடத தில ஆணபாவைக ளெலலாவற்றையும் அழித்துப பெணபாவைகளாயச செய்வித்தான்.

குணமாலை, வாழ்நாளிறுதிக்கண்ணும சீவ கன் என்னோடு கூடுமாயின கூடுக. அவனையொ ழிய எனது நிறையை அழிப்பாரிலலையென்று ஒரு மனத்தையுடையவளாயினாள். பின்பு குணமாலை, இனபத்துக்குக் காரணமான கடுநட்பு, பகைக்குங காரணமாய ஒரு விளையாட்டினால் நட்பினைத் துறப தற்கும என்கின்ற "விளையாட்டே சலமாம" என னும பழமொழியை நினைத்து வருந்தினாள். வரு ந்திப் புனலாடவேண்டி, சுரமஞ்சரி நட்பைப் பிரி ந்த பின் நீங்குதற்குப பிணடியினை அடிக்கு ஆ யிரம பொற்றாமரையும ஒழிந்த மலரையுமேற்றி வ ணங்கினாள். மன்னவ, பொனனனையுடைய மா க்களும அந்தணரும கொள்க என்று நீராடு தானங கொடுத்தபின் அசசனம, ஆகாயத்திற் சென்றதோ

* போலே— "ஒப்பில போலியும்ப்பொருட்டாகும" †
என்றதனால் உரையசையின் பொருளுணாததுமாயிற்று.

† தொலகாப்பியம், சொலலதிகாரம, இடையியல, உக

ரோசையோடு நிதியத்தை * யுண்டது. நகரார், காமனை வாட்டிய இருபத்திரண்டாவது தீர்த்தங்கரராகிய நேமிசுவாமிகளுடைய பொன்மதிலையுடைய செவ்வரைபோன்ற சீகோயிலுக்கு எட்டுக்கோடி பொன்னை நீரொடுதானமாகக் கொடுத்தார். இரவலர்க்குப் பொன்னையொழிய, யானை முதலிய உடைமைகளை முற்படக்கொடுத்தவர், பின்பும் அவ்விரவலரது காலடியிலே குவித்த பொற்கட்டியாலே அவருடைய தீவினையாலுண்டாகிய சிந்தாகுலமென்னும் நீராலே கரையுடைந்த ஆசையென்னுங் கடல் அடைக்கப்பட்டது. சிலம்பணிந்த சீறடியையுடைய மகளிர், கழலணிந்த ஆடவரோடுபொன்னிறைந்த யாறு, போர்க்களத்தை யொக்கும்படி நீராவத்தை விளைத்தார். முன்னே சுன்னம் தேருநின்ற காலத்துச் சீவகனோடிருந்து நத்தட்டனும் அவனைச் சேர்ந்தாரும் வேறுபோக விட்டொத்திறுக்கப்படும் புத்திசேனனும் ஒழிந்தோரும் சீவகனைக் கருதுர.

மேகலையும் சிலம்பும் வணடும், சேம உயிரின்றி ஒருயிரையுடையீர்! இவள் கண்ணன்றேங்கும் றமாகி உயிரைப் போக்குகின்றது. ஆதலால் நீவிர் ஓடிப்போமின் என்று சொல்வதுபோல வொலிக்க, காமவல்லி போலப் புனலைச் சோபவளைக் காணமின். மகளிர் பிவிமஞ்ஞையிறுடலைக்கண்டு தயங்குந்த

* உண்டற்குரிய வல்லாப்பொருளை—யுண்டனபோலக்கூறலுமரபே" குணைறுணப்பட்டோர் என்றுறபோல. மேலே கண்ட சூத்திரம், தொல்காப்பியர், பொருளதிகாரப் பொருளியல், ௰௬.

ல உலரும்படி பரப்பி இருப்ப, பேடைமயில் அம ்களிரைத்தன் தோகைமயிலென்று கருதிச சென்று ுல்லி. அல்லாமைகண்டு நாணிசசெலலும்படி மயங் நமாறிருந்த தோகைபோலவாளைக் காண்மின. ன்று வெவ்வேறு போயிறெல்லாரும் கூறும்படி )தன்மையவான இவையும பிறவும, கவிகளாற ுகழ அரியனவாய்க காண்டற் கினியனவாய் நடந் ்ன.

அப்பொழுது ஆங்குத் தியன நீராாகிய அந்த ரர்க்கு ஆக்கிய சோற்றை ஒரு நாய் கவவிற்று. அ ா அதுகணடு கனன்று இனிப பிழைததுப்போவை ியா என்று கூறிக கலலும தடியும கையிலே கொ ண்டுகெடுக ஓடலும, அஃது ஒரு குளத்தைப பாய்ந் று நீந்திறறு. அவ்வளவிலே அம்மூர்ககர் அதனை வ ாத்து அதனகாலொடியத தடிநதார். இப்பிறப்பில ்னது உண்டியை விலககிய நீவிா மறுபிறப்பில ்னக்கு ஆளாவிர் என்றாற்போன்று ஆள் என்று ுது குறைததலையும் உணராராய்ப பின்னருங்கொ ாமூர். அப்பொழுது கனிமகனொருவன், கடகுட ் சுமந்த மனேவியா இருவரோடு யாவரும் துணுக ்கண வந்தான். வநதவன், ஒரு முறையிலே இர ாடுமதி கதிரைச் சொரிதலபோல மனைவியர் இரு ்ரும் வெண்ணிறமான வடடகையை தன் வாயி ுழுததிப, பூவாலாககிய நறவைவார்க்கக்குடித்தான். டிததலால வெமமை பரநது சுழலுஙகணணின ்பச சோர்நதமாலையினனுய்க் கழலினனுய் வீக ்ய கருங்கசசைய ணுய் மழலைச் சொற்களாலே வை ு, எனது நாயை அடித்து உயிரைப் போக்கினீர்

றிலேம். நீ வெகுளவேண்டா இப்பொழுதே யாட செல்வேம். கொற்றவனைக் கொல்லுங் கூற்றமு, நிக மடந்தையாய்க கொல்லும். தான் செய்த பிழைப்ப ய்க்கொல்லும். அளவற்ற நிதியாய்க்கொல்லும் ஆதலால் அவனுபகுக் கொலை அமைவதாக என்று போனன்.

அரசன் தேவிபாட்டுக காதல்கூர்ந்து அவளது போகத்தில் அழுந்திக்கிடக்கதலின் கட்டியங்காரன் அ வனது வெறுமையைப்பார்த்து அவனைக் கொல்லக் கருதி அதற்கு வேண்டுங் கடிய தொழில்களைச் செ ய்தான். என செய்தானெனில் வேந்தனது சுற்ற மெல்லாம் விலங்கிலே பூழுகிச சிறையிலே தாழச் செய்தான். தனது கீழமையை யேற்றுக்கொண்ட மாந்தர்க்கெல்லாம நிதியம்நல்கி மலைமேல் ஏற்றிய விளக்குபோலே பழியாகிய விளக்கை ஏற்றிவிட் டுச் சேனைகள் நகரைவளைந்து சூழச்செய்து தோன றினன். வாயில்காப்போன் வந்து தூரத்தே நின் று மன்னனைத்தொழுது கட்டியங்காரன நின்னைக் கொலைகுறித்து வந்தானென்றுசொலல, அரசன் க வமெல்லாம தாளிடுக. தோகளையும், யானைகளையுப, குதிரைகளையும், பண்ணுக. மதிலைக்காக்கும காவல ளார் அதனைச்சேர்க என்று இராசதத்தாறகூறித் தன க்கு ஊர்தியின்மையின் புலியின் வரியையுடைய கவ சத்தைத் தவிர்த்து அரசர் அருசாநின்ற வாளை ஏந்தி வாளெயிறு இலங்க நகைத்தான். நகைத்தவன் தே வியை நோக்கி, நஙகாய் ! நீ அன்றுகண்ட கனவுகளி ன்பயன் இன்றுபட்டது. நீ வருந்தாமலே பிள்ளை காரணத்தாலே செல்லவேண்டுமென்று சொன்னன்.

ஆ! ஆ! வயாவுடைய தேவி என்செய்வாள் தனது முகத்தைப் புடைத்துப் புவியில் விழுந்து வயிற்றிலுள்ள தன் பிள்ளைக்குத் துன்பஞ்செய்தாள். அரசன் தேவியை யெடுத்து மார்பில் அணைத்துப் பேதாய்! சாதலும் பிறத்தலும் ஆதலும் அழிதலும் வினைகளின் பயத்தாலுண்டாகும். சாதற்கும் அழிதற்கும் துன்புறுதலும், பிறந்தற்கும் ஆதற்கும் இன்புறுதலும், அறிவின்மையன்றே. நீ பெரிதும் அறிவிலியாயிருக்கின்றாய். நம்முடைய பழைய மானிடப்பிறப்பை எண்ணின கடல் மணலும் உறையிடப் போதுமோ? அப்பிறவியெல்லாம் பிறந்தும் வெறுப்பட்டோம் இனி இவ்வுடம்பை நீக்கி எந்தப்பிறப் சேரவோமோ இப்பொழுது நாம் சேர்ந்து நின்ற * இரண்டு நாளுறவை உறவாகக் கருதி அதற்கு இரங்கவேண்டா. வாமனாலே சொல்லப்பட்ட நூலின் பொருளை உணர்ந்த நீயும் உணர்விலலாத்தன்மையையாய் என்னுமொழியை வெறுப்பட்டுக் கண்ணீர்விழ விம்மி உயிர்த்து இத்தன்மையையாதல் தகாது; இவ்வருத்தம் தவிர. மாதே! மன்னரெல்லாம் தமது உரிமையை முன்னே போக்கியல்லது தாம் போகார். ஆதலால் இப்போக்கு எனக்கும் கருமம், நினக்கும் கருமம் நீ கருவுயிர்த்து நாம் கதிபெறுதலும் பகை வெல்லுதலும் வேண்டும். ஏறுதற்கு ஊர்தியும் சமைந்திருக்கின்றது. இனிக் கவலைவேண்டா போவதே கருமம். அந்த சுக ம பிருதலாலே சீர்த்தியையுடைய அருகனது "ஓம ணமோ அரஹந்தாணம்" என்னும் ஆணைமொழியைக் கூறி என்பு உருகும்படி பிணித்த அன்பாலே சிறிதும் ஆற்றாத உயிர்போலும் தேவியை ஊர்தியைச்-

* இரண்டுநாள = சிறிதுநாளெனனும்பொருட்டு.

சேர்த்தினன். தேவி இருதலைக் கொள்ளியிடத்து
எறும்புபோலே கணவனுக்கும் புதல்வனுக்கும் வரு
ந்தி இறைவனது ஆணைமொழி கூறவே செயலற்று
ஊர்தியை ஏறிச்சென்றாள். சென்றபின்பு நெருப்பு
மரை யுண்டாக்கி அதனை யழிக்குமாறுபோல அரச
ன தானுண்டாக்கிய படையைத் தானே யழிக்க, வ
டவாமுகாக்கினி கடலைச் சுடுவதொத்து முழங்கினா
ன். முழையிடத்தே சிங்கத்தை வளைத்த யானைத்
திரள்போலே, மகளிராகவும் அந்தப்புரத்தே வேலை
யும் வாளையுமுடைய மள்ளராகிய குஞ்சரங்கள் வேந்
தனை வளைத்தன. கடலதனக்குக் காவலாகிய கரை
யைத்தானேயழித்ததுபோலப் படை தனக்குக் காவ
லாகிய வேந்தனைத்தானே கொல்லத் தலைப்பட்டது.
அரசன் நாற்படையையும் மடித்தபின்பு போர்முனியி
னின்றுவந்த யானைகளை மத்தகத்தைப் பிளந்தான்.
பிளக்கவே கட்டியங்காரன் தான் ஏறிய களிற்றை
செலுத்திச் சக்கரத்தை ஏந்தி அரசனது கேடகத்
தை யறுத்தான். அரசன் முனிந்து கட்டியங்காரன்
ஏறிய களிற்றின்கரத்தை வாளோச்சித் துணித்தான்.
கட்டியங்காரன் அது பொறாது வேலை ஏந்தி வேந்
தன மார்பிலே எறிந்தான். அரசன் அதனைப் பறி
த்து தனது மார்பிலே தைத்து வளைந்த வளைவை
இறந்து வீழ்ந்துகிடந்த யானையின் மருப்பிடையிட்
டு வளைவைப்போக்கி அவ்வேலாலே, வேலாலே கு
ன்றைப்பிளந்து மயிலைப் போக்கிநின்ற முருகன்போ
ல, கட்டியங்காரனது வேழமாகிய குன்றைப் பிளந்
து, கொன்று, மற்ற யானைகளையும் மடித்து, வாளெ
டுத்து நின்றான். அவ் யானைப் போரிலே தனது
வாள் ஒடிந்துபோகவும், தான் சலியாமலே நின்று

வீரர் எறிகின்ற படைகள் தனது மார்பிற் றைக்க சிறிதும இமையாதுப்பாரத்திலே புறங்கொடா லே பொருதிய போரிலே கன்னனோடே மாறுபட நின்ற அபிமன்னுவெனத் தமியனாய நின்று சகங் கும வேலும தமபிற் பொருது, மேனியிலழுந்திய மையாலே மெய்வலி குறைந்தான். மக்கள் வசிக் ம விண்ணுலகு என்று சொல்லத்தகும எமாங்கத தே சான்றோர மயங்க, கற்புடை மகளிர இரங் கொடுங்கோலாகிய இருளபரவ, வேந்தர் பெருமாலே சசசந்தனைகடலபோன்ற குருகுலத்தே மூனத, செங்கோலையுடைய சூரியனை, ஐயோ ! மந்திரியாகிய நாகம விழுங்கிற்று. இதென்ன பாவம இதறகு மு ன்னம பலபோரிலே தேர்மீது நின்று இடையறாத கோல வழங்கிப் பகைவென்ற வேந்தனுக்கு இப் போரிலே அவனதாகிய படையொன்றும் உதவ மையின் வாளும் கேடகமும அறமும் துணையாகப் பொருது அவற்றையும் போக்கிநின்று வீரர் எறிகின்ற படைகளைத் தனது மார்பிலே கண் இமைத்தல் செய்யாமலே யேற்று உயிர் நீங்கினான். உயிர் நீங் குமபொழுது தியானம வந்தமையாலே வாமனுடை ய அருவியாடி மந்திரமென்னுஞ் சாந்துபூசி அவ்வா மனுடைய திருவடியாகிய தாமரை மலரைச்சூடிப் போய் விண்ணோர்க்கு நல்விருந்தாயினான்.

தீயாலே துளைசெய்த குழலையும், யாழையும், தேம தேம என்று ஒலிக்கும முழவதனையும், தாம தாம என்று ஒலிக்கும தண்ணுமையையும், தமக்குரி ய மற்றத் துறைகளையும, முற்றக்கற்ற நிருத்த கீத வாச்சியங்களுக்குரிய மகளிர அவற்றை நமக்கே

கொணர்ந்து இயம்பாநிற்க அகப்பரிவாரர் ஐஞ்ஞூற்றுவரும் அரசனுக்குக் காமமொழிந்த நுகர்ச்சி கொடுத்தற்குரியமகளிரும் காம நுகர்ச்சி கொடுக்கும அரம்பையொத்த மகளிரும் எம்பெருமானே! வெறுநிலத்துக்கிடத்தியோ என்று அழுது அரசனைப் பள்ளிபடுத்தினர். மயில் சூழ்ந்துகிடப்ப ஒரு சிங்கம் அணைமேற்கிடந்தாற்போலத் தேவியர் சூழ்ந்துகிடப்பக கிடந்தவேந்தனைக் கரிந்த இயல்புடைய நெஞ்சுடைய கட்டியங்காரன் கண்டு தொழுது கண்ணீருகுத்தான். மகளிரெல்லாரும அவன் கோவம் நீங்கினமைகண்டு அரசற்குப்பொருந்த மகுதேவமக்கடனசெய்து நீ கடன் செய்யாமைக்கு வருந்தி எம்பெருமானே! நின்மெய்யையும் எரிநுகர்கின்றதோ? நீயும ஒளித்தியோ? என்று கணணீர் சொரிவார; விழுந்து அலறுவார்; இரங்குவார; வயிறதுக்குவார்; முகமபுடைப்பார; பூணகளைந்திடுவார; புலமபுவாராயினர. மலைமேல ஒருநாகம் வேழத்தை விழுப்ப அது காத்தறகுரிய பிடிகள் துயருழக்குமாறு மகளிர துயருழந்து எஙகோனுர் நுகர அவர்க்குகொடுத்த நலஙகளைப பிறர்க்குக்கொடேம; இனி அவ்வுலகிலே சென்று அவரது அடி அடைவேம என்று அழுதுபோயினர்.

ஓர் நரி ஒப்பிலாத சிங்க ஏற்றைக்கொன்று அப்பொழுதே அதற்குரிய இடத்தைச்சேர்ந்தால அச்சிங்கத்தின்தொழிலை நடத்தாது தன்தொழிலை நடத்துமாறுபோலக் கட்டியங்காரன் தன்பெயரால் பறைசாற்றினன. விடத்தையுடைய நாகம் செவிநுழைந்தாற்போல அபபறையொலியைக் கேட்

டுக் கொடிது! கொடிது! என்று எல்லாரும் வ
ந்தினர்.

## சீவகன் உற்பத்தி.

எந்திர மயிலூர்ந்து ஆகாயத்திற்சென்ற தே
கட்டியங்காரனது முரசொலியைக்கேட்டு மூர
த்துப் பொறியை வலம்திரிக்காது ஓயதலும் அ
நாமே இடந்திரிந்து வலியுள்ளவரும் உள்ளம் அ
சுமாறு எங்கும பிணம கிடந்து தனது எல்லை எ
லாம கழுகு உறங்கும நிழலையுடைய சுடுகாட்டிடெ
பஞ்சின்மேல் மாலைவீழவதுபோல மெலமெல வி
ந்து கால்குவித்திருநதது. மூர்ச்சையடைந்த தே
சிறிது உணர்வுபெறறுப பிணப்புகைமலிந்து பேய
அஞ்சும் மயானத்தே என்செய்வேன்! என்று இ
ங்கி ஏங்கி அவலித்தாள். இங்ஙனம் தேவி இன
வினை நினைந்து கவலைகொண்டு வாய்விட்டரற்
அருநாநின்று கண்ணீர மேனியை நனைப்பதனை
பிரிந்த மகன்றிலையொத்தாள்.

தேவி அரசன கோயிலிலே விண்ணவர மக
போல நல்வினையின் வண்ணமாயநடந்தவள், ப
உயிர்கரும நுகரும தீவினையும் உண்டென்று ப
மாலே அறிவாரெலலாம் இனி என்னைக்கண்டு தெ
ளிக என்று உலகிற்குக் காட்டுவாள்போலத் தா
தீவினையின் வண்ணமாய்ச சுடுகாட்டிலே தமி
ளாயினாள்.

வனதெய்வமெல்லாம், ஆங்குப் பிறப்பவன் மு
ந்திபெறுவன என்பது கருதி அருளுடைய மனத்
வாகி இருள் கெடும்படி மணிவிளக்கேந்தி வணங்
நிற்ப இளஞாயிறுபோலப புதல்வன் பிறந்தான்

ஞாயிறு தோற்றத்தில் இருளைபபோககிய யின் மதி
யத்தைக் கெடுக்குமாறுபோல, தேவியினது அவ
லமாகிய இருளைப போக்கிக கட்டியங்காரனாகிய ம
தியைக் கெடுக்கலாலே அஞ்ஞாயிற்றை யொத்த
மகனைக் கவானிடைக்கண்டபொழுதே தேவி அவ
லமதிரந்தாள். மகப் பயந்தே நாக்குப பயந்தபொ
ழுதே பால சுரவாதாகவும தான வலியவாங்கிக
கொடுத்தத திலகனுக்குத திரையிட்டுவைத்தாள்.
வைத்து மகனைப்பார்த்து வருந்திப பாலகிரகாரிட
டம பன்னீராண்டளவும உள்ளத்திற்குச சாந்தி
பாய பன்னீராண்டு இறைந கொள்ளற்க. அறச
சாலைகள் கோயிலகள் இவற்றைப்புசமைக்க. ஏழு
பிறப்பினுமுள்ள தீவினை நீங்குதற்கு எழுநாள் விட
யின்றி எல்லாருமு எல்லாபபொருள்களையுங்கொள்க.
உடம்பிற்பொருந்திய மூன்றனைக்கோடி மயிருக்கு ம
ற்றனைக்கோடி பொன் தானஞ்செய்க. சிறை
யடுத்திய சிங்கம்போல் மடங்கி இனமழுங்கு ம
டி மன்னர் கிடக்கின்ற சிறைசசாலைகளை இடிக்க,
என்று இவ்வாறு அரசன் பணிப்பப் பிறந்தநக
, தீவினையேன் காண்டற்காக. ஓ! ஓ! வெவ்விய வா
ளையுடைய நரியோவி, முழவாக விளிந்தவரைச்சுடும
மை விளக்காகப் பேயகள் ஆட, கூகை குழறிப்பா
ட, பிறப்பாாக்கு ஒவ்வாத சுடுகாட்டிற் பிறந்
ாய். இவ்வாறு பிறப்பது மன்னர்க்கு இயல்போ.
திருஞாலமுடையாய! நீ கிடக்கின்ற இடம பகைக
ன் இடமாய் இராநின்றது. பாயற்சுடுகாடாய் இ
ாநின்றது. யானோ யாது செய்வதற்கென்று
ரராய்தற்கு ஓர் துணையுமில்லாத் தமியேனாயிரா
ன்றேன். இதினின்றும உன்னைக் கொண்டுபோ

கந் கருனை போகவொண்ணுக இருளாயிராநின்றது நீ வளருமாறு மறியேன. இவ்வாறு கண்டும், என துகொடிய உயிரோ! நீயும் போகாதிராநின்ருய், என று கூறி மகனை நோக்கிச் சிந்தாமணியே! நீ பேச மற்கிடக்கின்ருய். எனது வருத்தம நீக்கப்பிறந் நீயும பூம்பிண்டிப் பெருமாளுகிய அடிகளும என்னை இத்துயர்நீத்துக்காவாதபொழுது நும் இருவிரினும் சிறந்தார் உளரேல் உரையாய். நுங்கோன கூறிய காரியத்தைச்செயத யான் வருந்தக் கடவேனே என று பெருமூசசெறிந்து சிறிது இடர்தணிந்து இருந தாள். அகங்கைபோய்ப் புறங்கையான கடுவை போலே கோமான் கொலலைபபடட புறங்காட்டுக வந்த வினையையுந் தீங்குகளை மரங்கொலலை உட்கொண்டு, அந்தோ! என று அழுவனபோல நமகக்கொந்த பனியாகிய கண்ணீரைச் சொரிந்தன உலகிலே தீங்கை நீங்கிய இறைவன போக்கறாத லே சார, புறங்காட்டிலே புகலவனைபபெறறு வரு தி, சிறிது இடர்தீர்ந்து இருந்த இறைவியும் இ ளைப்பாருகிய கதிரவன மறைய, குழவியாகிய மதி யைபபெற்றுச சிறிது குளிர்ந்த அந்தியை ஒத்திரு ந்தாள்.

தேவி, திருமகனது நலவினையை உணராதவளாயிருந்த அளவிலே, ஒரு தெய்வம, அவளிடத்தினின்று எனறும் நீங்காத சண்பகமாலையென்னும கூனியது வடிவங்கொண்டு வந்தது. வந்து இறைவனுக்கு நட பாளனுகிய கோவிந்தனும, பகைவனுகிய கட்டிய காரனும், தேவியைத்தேடாமைபபொருட்டு எந்தி மயிலை ஒளித்துவைத்துத் தேவி பாட்டனுக்கு, அ

னாய்! யாஞ்செய்த தீவினையாலே நீ இவ்விடருற்றாய்; இனி இவவருத்தம் நீங்கு; முருகன்போன்ற இநநம்பி பார்த்தைகயிலே யுலகமெல்லாம நடக்கும; அதற்குப் பொருந்தாது நின்ற கட்டியங்காரனைக கொல்வதற்கு தப்பொழுதே ஒருவன்வந்து இவனைக கொண்டு போவான்; அதுகாறும நாம மறைந்து நிற்பது கரு மம் என்று கூறிற்று கூறிய பகைவா பண்ணுறு இ டர்களைச் செய்யினும அவை தீதிலவாக என்று தே முலையைப பிடித்துப பாலகொடுத்துப்பிள்ளையை புறிந்து வளர்த்தறகு அரசன பெயர்திட்டிய ஆழி யைச்சோ நதித் தேவி அறியாதபடி ஒரு பள்ளியை நுமிநது அதில் அப்பிள்ளையைச சோநதித் தேவி யைக் கொண்டுபோய் மறையநின்றது. தேவியும, லஞ்சலய முதலைதயினறு முந்நீரிலே செல்வதோ துக கிணகிணி சிலம்போடேங்கச் சென்று நின்று . நின்றவள் தன் மகனைநோக்கி நின்னைபபெறுதற நல்வினைசெய்து, வளத்தற்கு நல்வினைசெயயாதே யுடைய மகனே! நீ தனிமையாய்க் கொடியவிலங்குக சூழக்கிடத்தியோ! என்று அழுதாள். அழுதுகொ மைப் புலலிய கருவிளை ஒரு பூவைப் பூத்ததுபோல நு கொம்பைப்பற்றி ஒதுங்கி ஒரு கண்ணாலே நோ கிநின்றாள்.

அன்று மகவையிழந்த வணிகனாகிய கந்துக்கட என்பான், ஒரு முனிவனாலேநமபி உறபத்தியை ணர்த்தப்படடமையாலே, அவன கருப்பு உடைத தனனாய் வாளேந்தி, நிறைந்த இருளிலே ஆங்குச ன்று, இருளை மணிபோக்குதலாலே நமபியைப ர்த்து, மோதிரத்தைப பிறரும் அறிவரென்று ம

றைத்துக்கையாலே இளஞாயிற்றைபெடுத்தல்போ னம்பியையெடுக்கும்பொழுது, அந்நம்பி தும்மினன். அப்பொழுது கூனி *"சீவ" என்று தன்னுள்ளேயெ ழுத்தினள். தேவியும் அரசனுக்குப் புத்திரமுகங்கா ணும நல்வினை இன்மைக்குவருந்தி மகனைநோக்கி ' ஐயனை! வெல்வாயென்று வாழ்த்தினள். கந்துக்கடன் தனபுதல்வன் மயானத்திலே கிடப்ப, நம்பியைக்கொண்டுபோய்த் தனதுமனைவி சுநந்தையை நோக்கி புலகிற்பொருந்திய புகழெல்லாங்கூடிய அருந்ததியை அகற்றிய கற்பினாய், நீ வருந்தல, வருவருக என, அவளவரவே, நின்மகன சாதலின்றி உமக்குப் பிறந்தவன் எனச்செப்பித் தேவியிட்ட திலகத்தை அழித்து நம்பியைக்கொடுத்தான. கந்துக்கடன், முனிவன் தனக்குக் கூறிய இரண்டு மொழியினும் இனிய மொழியைச் சுநந்தைக்குக்கூறி நம்பியைக் கொடுத்தலும, அவன மனையில வலம்புரி இசைத்தன. நாலவகை வாச்சியங்களும ஆர்த்தன. பொன்கொள்ளையிடப்பட்டன. கட்டியங்காரன் கந்துக்கடன் மனையில் அக்கொண்டாட்டமெல்லாங் கபியாலே என்றுணராமலே தான் அரசு எய்தியதற்காக என்றுகொண்டு கந்துக்கடன் அரசனது இருப்பிற்குத் தொடர்ந்த பீடிகைத் தெருவிலேயிருந்தும, எழுபிறப்பிலும் கிளையைவிரும்பி எமது அரசாட்சியை விரும்பினனாதலால் மிகக்காதல் உடையன் என்றுகொண்டு அவனுக்கு நிதியமநல்கினன். அரசன் போர் செய்துமாண்ட இந்நகரிலே நம்பியும் போர்செய்து, பிறந்த பயனுறவேண்டிக் கட்டியங்காரன் கொடுத்த

*சீவ— வேணடுகோளாகிய வியங்கோட்கண வந்த வடசொல.

சிறியைக் கந்துக்கடன் இரவலர்க்குக் கொடுத்துக் கொடைக்கடன் பூண்டான்.

கந்துக்கடன் நம்பியை எடுத்துச் சென்ற உடனே தேவி விம்மிய பாவைபோல நிலனில் வீழ்ந்தாள். வீழவே கூனி தன் தெய்வத்தன்மையாலே அந்தத்திலும் ஆதியிலும் *எய்துவ தெல்லாங் கூறினாள். தேவி கனவால் ஆக்கமும் உளதென்று கருதி கூனி வாயாலும் கேட்டு அன்னாய்! இனி யான் செய்யுங் காரியங்களெல்லாம் உரையென்றாள். கூனியாவாள் நம்பி அவனுடைய முற்பிறப்பில் அன்னப் பார்ப்பைப் பிரித்த தீவினையை அடைகின்ற தன்மையைத் தான் நோக்கி அதற்கு அவனை வேறோர் இடத்து நீக்கித் தேவியைத் தனியே கொண்டுபோதற்கு வந்து வருந்தும் தெய்வமாதலாலே அவள் தேவிக்குச் சொல்லுகின்றாள். உலகமெல்லாம் நின்னது ஏவலிலே வருதற்குக் காரணமான கற்பினையுடையோய்! நாம் இப்பகைநிலத்தை இருளாகிய போர்வையிலே மறைந்துபோய் அமரிகையென்னும் ஆற்றைச் சார்ந்து அதன்மணலிலே தங்கித் தளர்வுபோக்குவோம்; முதலில் இதனைத் துணிக; அவ்யாற்றைக்கடந்து ஐம்பது யோசனை சென்றால் நமதாகிய தரணிதிலகமென்னும் மூதூர் இராநின்றது; அரசனை அமரில் நீத்துப் புதல்வனைப் புறங்காட்டில் நீத்துத் தமரிடைச் சேறலாகாமையாலும், தவஞ்செய்வதற்குத் தாபதப்பள்ளி வேண்டுதலாலும், அந்நகரைச் சேரேமாய் அப்புறம் செல்வோம்; சென்று ஆற்றிலோடை என்கின்றவாவியும் மானிடராக்காத் தீநிலை என்கின்ற பொய்கையும் சோலையும் பொருந்திய தண்டகாரணியமென்கின்ற வனத்தே ஒரு

---

* எய்துவதெல்லாமென்றது, †"ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி—பன்மைக்காகு மிடனுமாருண்டே" என்றதனால். † தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௫.

தாபதப்பள்ளியுண்டு; அதனிடத்தேயுறைவோ
ன்றாள். தேவியும் கேளிரைக்கண்டால் துன்ப
மாதலால் அவரிடைச் சேறலாகாதென்றுந் த
செய்யவேண்டுமென்றுங் கருதினவளாயினும்,
ன் கருதியதனையே நீயுங் கூறினாய் என்றது கூனி
கூறினதாகக்கொண்டு உடன்பட்டாள்.

புதல்வற் பயந்த வருத்தந்தீராத தேவியை
கூனி தன்தெய்வத்தன்மையாலே இரவிற்கொ
போதலும் அத்தேவி சிலம்பேங்கக் கிண்கிணி
மேகலையும் ஒலிக்கத் தனியேபோதற்கு அஞ்சிக
சூழல ஓர் பவளக்கொம்பைச் சிலம்பி சூழ்ந்த
போல மெய்முழுதும் போர்வையாலே மறைத்
சென்று மலைகளையுங் காடுகளையுங் கடந்து யா
டைக்குறையைச் சேர்ந்தாள். ஒருவர்க்கு நல்வி
வந்துதோன்ற அதற்குமுன்னே தோன்றிநின்ற
வினை அகலுமாறுபோல உலகம் பகற்பொழுதை
பெறவேண்டிக் கதிரவன் கடலிற்றோன்றினன்.
வானிலே இருள் அகன்றது. மஞ்சிலே ஒரு
கிடக்குந் தன்மையொத்துத் தேவி அவ்யாற்றிடை
குறையிற் பொழிலிலே துகில்மேலே கிடந்தா
தெய்வம் சண்பகமாலையென்னும் கூனிவடிவாய
றலின், அவள் தொழிற்கேற்பத் தேவியின் அ
ளைத் தைவந்து *எம்மன்னாய்! வாழ்வாயாக! பொ
ழுது விடிந்ததென்று கூறிற்று. தேவி, அ
ளைக் கனவிற்கண்டு அது நனவாகாமையின் ஐயோ
என்று மதி புவியிலே முளைத்ததுபோல எ
தாள். மானினம் ஆதியாக அன்னமும் தோ
யும் தேவியைக்கண்டு கொட்டாவிகொண்டு
ருது அழுதன. அவை இயல்பாகக் காலையிற்

* அன்னை, தண்டுமுறைப் பெயரன்மையின் †"
னை பெனனை" என்னும் பொருளியற்சூத்திரத்தாற்கொ
† தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், சூ

சொன்னுரைகக் கருதி அவ்வியாற்றில் ஆடுதலாலே உண்டாயபயன் எத்தன்மைத்து மொழிஎன்றாள். அந்தணன் அவளைக்கூடின் மூப்புக்கழிதலைக் கருதி வருமகாலத்துவாராது முன்னேவந்து நலிகின்ற இமமூப்புப் போகும என்றான். சுரமஞ்சரி, மிககநகைத்துக் குமரியாடி இளமைபெறுவாா நும்மையொழியப பிறருமஉளரோ கூறுவீர் என்றாள். அந்தணன நீ கொண்டவிரதத்தைக் கெடுத்துக் கூடுந்துறை இமமூப்பால என்றறிந்து நின்னை அணுகிக் கூடுவாா என்னையொழிய இல்லை என்று கொண்டு, துறையறிந்து சோந்து ஆடுகின்றவா இலலை என்றான். சுரமஞசரி, நீா உலகத்தாரறியும துறையன்றியே வேறொருதுறை அறிவீரோ என்று இகழந்து கூறினாள். அநதணன், அதற்கு ஐயமில்லை எனறான். சுரமஞ்சரி, பட்டுப்போனமரம் பெருமழையாலே தளிாககுமென்கின்ற இவா பித்தர் இனி இவரது பசியைத் தீாப்பேம் என்று கருதி அடிசில் அமைக்கச் சொன்னாள். சொல்லி நானமுரைத்து அந்தணனைப்பூசி நீரால் ஆட்டுவித்துப புடைவையையுமபூணூலையும்பவித்திரத்தையும கொடுக்க அநதணன அவற்றை மெயப்படுத்தித் தவிசின்மேலே இருந்தான். மதியைசசூழ்நத மீன்கள், ஞாயிற்றைச்சூழ்ந்தன என்னும்படி மகளிர், செம்பொற்கலத்தைமுமபக்கத்தட்டங்களையும பரப்பி, அடிசிலைப்படைக்க அவனுமுண்டு மலர்தங்கிய நீராலே வாயபூசி ஐந்துவகைப்பட்ட முகவாசத்தையும் வெற்றிலையையுந் தின்றிருந்தான். சுரமஞசரி, நீாவல்லது யாதென்று வினவ அந்தணன் மறைந்தவேடங்கோட

லை வல்லேன் என்னும் பொருள்பட, "மறைவல்லன்" என்றான். சுரமஞ்சரி, அவன் வேதம் வல்லேன் என்று கூறினனாகக் கருதி, வேதம் அநந்தசாகையுடையது ஆதலால், நீர் கற்ற எல்லை எவ்வளவு என்று வினவினாள். அந்தணன் யான் நினைத்த காரியத்தைப் பெறுமளவும் என்னும் பொருள்பட "பொருளெய்தி முடிகாறும்" என்றான். சுரமஞ்சரி வேதம, தத்துவத்தைமுற்ற உணர்த்திமுடியுமளவு மென்றானாகக்கருதி, இக்கலையெல்லாம் நீர் கற்ற காலத்தை இன்னும் கூறும்என்று வினவினாள். அந்தணன் அக்காலம் கூற நினைவிலேன் என்னும்பொருள்பட, அது * சிந்தையிலன் என்று சொன்னான். மேன்மேலும் வினவும் உத்தரமும பெருகுதல கருதி அது எனக்குக கருத்தன்று என்று அவன் சொலலவே சுரமஞ்சரி நினைத்திருந்திலேன் என்றானாகக் கருதினாள்.

அஙஙனம் கருதிய சுரமஞ்சரி இத்தன்மையையுடையவர் இவ்வுலகிலில்லை என்று துதித்து அவனைப் பார்த்தாள். அந்தணன் இனி இவள் நம்மைப் போகசசொல்லுவாள என்றெண்ணிச சிறிது துயின்று தலையைச்சாய்க்கச் சுரமஞ்சரி நகைத்தாள். அந்தணன் வாடைக்காற்று மிகுதலாலே வருந்துகினறேன் இதனாலே இறக்கும் தன்மை எய்தினேன் கோதாய்! என்செய்வேன் என்றான சுரமஞ்சரி, தன்னுடைய கட்டிலிலிட்ட அணையே லே தங்குக என்றாள். அந்தணன் அங்கிலே தங்க

* சிநதை—கருத்து

வே ஞாயிறு பட்டது திங்களெழுந்தது. கூதிரா தலால் மகளிர் பாலடிசில் உண்டு வீணை வாசித்தார். அந்தணன், தான் நினைத்திருந்த காந்தருவத்தை முந்துற முடிக்கவேண்டிக் கீதத்தைப் பாடினன். மகளிர் நெருங்கி அதனைக்கேட்டு மயங்கினர். பின்பு அந்தணன், கொன்றைமாலையை யுடையானது கண்டத்திலே கிடக்கும் சாமகீதத்தைப் பாடினன்; சுரமஞ்சரி, அப்பாட்டாகிய வலையிலே அகப்பட்டு அவனிடம் வந்து நின்றாள். அந்தணன் யான் பெரிதும் மூத்தேன் * முடிப்பதென் என்றுசொல்ல சுரமஞ்சரிநாணித்தோழியைமுன்னிட்டுக்கொண்டு நின்றாள். அந்தணன் என்னையொழிய இளையவரை நீர் பார்த்தால் என்செய்வீர் என்றான். தோழி அவர் பெயரும் இவ்விடத்துக் கெடும் என அந்தணன் நீ இங்ஙனம கூறியது யாது காரணத்தாலே இவளை மணத்திற்குப் பேசினரில்லை என்றே! இவள் வருந்தும் காரியம் அவர் செய்ததுண்டோ! சொல்லென்றான். தோழி இம்மாதரது சுண்ணத்தைச் சீவகன் பழித்த பின்பு ஆடவரெல்லாரையும் காய்ந்தனள்என்று சொல்ல அந்தணன் இவட்குத்தீயானாகிய காளை மாய்ந்தான்போலும் என்றான். மகளிர் நாளும் புகுவான் என்று வாழ்த்தி ஐயன் உய்ந்தான் அதனை அறிந்தனம். சுரமஞ்சரி சீவகற் குற்றத்தைக் கேட்டுக் கலங்கிப் பித்தேறி ஏங்குதலாலே, யாங்கள் தத்தையைக் கண்டறிந்துவா என்று கிளியைவிட்டோம். அங்ஙனம் போய்த் தத்தையது

* முடிப்பது—இடக்கர்.

பொலிவைக்கண்டுவந்த அத்தத்தை சொல்லாதே வருத்தந் தீர்த்தேம் என்றார். மாதரார் * அடித்தி யாரும் ஆடவரைப் பார்க்கமாட்டேன் என்று கொண்டதனை தவிர்ந்து நம்மிடத்து அன்புடையாரா ய் முனிவு தீர்ந்தாராதலால், நீரும் எம்மிடத்து அன்புசெய்து எமக்கொரு கீதத்தைப பாடும். நீர் என்ன தீங்குறறுலும் பாடல் கேளாமல் நம்மை விடோம் அதற்கு யாங்கள் இவனை ஆணையிடேடேம் என்றார். அந்தணன் † பாவைதனது தோற்றப பொலிவு தொடங்கி ஒழிந்தவற்றையும் எமக்கு நல்குவாளாயின் பாடக்கடவேம் அதனைபொட்டு வாளாயின் கேண்மின் என்னும் பொருள்பட "பாடு தும்பாவை பொற் ‡ பே பற்றிமற்றெமக்குநல்கின்' என்றுசொன்னுன். அவர்கள் அதனைப்பொன்னுயி ருப்பதொருபேயைப்பிடித்து எமக்குத்தரின் பாடு வேம்என்ருனுகக்கருதிப்பேயைநாடிக்காண்பார்யார்! அதுவுமன்றிப் பொற்பேய் என்று இவன சொல்லு கின்றமையால் அதுவும் உலகில் இல்லாத ஒன்றுத லால் யாம் உடன்படுதற்காமே என்றார். சுரமஞ் சரி, அவன் கருதிய பொருளை யோராதே உலகி லில்லாதது ஒருவனுற் காட்டமுடியாதாதலின் இல லாததற்கு உடன்படலாமென்று கருதி உடன்பட்டா ள். அந்தணன் பாடினுன் பாடவே மாதரார் சோர்

* அடித்தியார்—சுரமஞ்சரியார்.

† பாவை—சுரமஞ்சரி.

‡ பே—பேய். யகரவொற்று விகாரத்தாற்றொக்கது. $ அலர்ந்தென்பது அலந்தென்று விகாரபபட்டு நின்றுற போல. $ திருச்சிற்றம்பலக் கோவையார். சகo.

து மயங்கிய மயில்போன்றார்; அப்பொழுது சுரமஞ்சரி, அந்தணனைப் புகழ்ந்து இப்பாட்டையுடைய சீவகனைத் தரவேண்டுமென்று நாளைக்கோயிலிலே புக்கு நமக்குத தெய்வமாகிய காமனை வழிபடுவேன என்றாள். அவளைச் சூழ்ந்த தோழியரும் காமனை வரமவேண்ட எண்ணி இருக்கக்கடலிற் கதிரவன் தோன்றினான். நிலைபெற்ற செலவினையுடைய எருத்தை மணியானும் தாரானும கண்ணியானும் புனைந்து பட்டுக்கட்டி. நெயயையும பாலையும ஊட்டி வண்டியிற் பூட்டிச்செலுத்துங்கோலை ஒரு மகள்கொள்ளச் சுரமஞ்சரி அவ்வண்டியிலேறி ஆடவா விலகிப்போக மகளிர்சூழக் கோயிலுக்குள்ளே போய்த்தான் வரம வேண்டுகின்றது அவ்வந்தணனுக்குக கேளாதபடி கடிஅறையிலே அவனைமறைத்துவைத்து தனது இடமுழந்தாளையூன்றி மாலையும் குழலும் வலதகோளிலே வீழக்கழுத்தை வலத்தே சாயத்துச் சென்னி நிலத்தைப் புலலுமபடி வணங்கி எழுந்து இரண்டுகைகளையும குவித்து நின்று பூமலிமார்ப! எனக்குச் சீவகனைத் தரின நினக்கு யான் மகரக்கொடியும அமபும் சிலையாகிய கருமபும தருவேன் என்று சொன்னாள். காமனது படிமத்திற்குப்பின் மறைந்திருந்த புத்திசேனன், நின்காதலனைப் பெற்றாய் இடைவருந்த நில்லாதே போஎன்றான். சுரமஞ்சரி, புத்திசேனனது வஞ்சனையை அறியாமல் தெய்வம் தன்வாய்விட்டுக் கூறிற்றென்றே கொண்டு துதித்து மீண்டு கடிஅறை

யுள்ளே சென்றாள். அப்பொழுது சீவகன் தனது பழையவடிவுகொண்டு நிற்றலும் அவனை மனா துணுக்கெனக் கண்டு நாணி கொடிபோல நடுங் நின்றாள். சீவகன், சுரமஞ்சரியைக கொண்டாடி இனி உன்னைத் தீண்டேனாயின் உய்யேன்; அருளெ னத்தொழுது அநங்கன் அம்பைத்தொடுத்து எய்த லாலே, கொடுப்பாரும் அடுப்பாருமின்றிச் சேர்ந்து இனியதமிழ்கூறிய இயற்கைப்புணர்ச்சியாகிய இன் பத்தை நுகர்ந்தான்.

பின்பு சீவகன் சுரமஞ்சரியைப்புகழ்ந்து நான் நாளை நின்னைச் சேரேனாயின் கடியங்காரனாகக கடவேன் நீ இனிச் செல்க என்றான். சுரமஞ்சரி, கணவனை வணங்கிச்சென்று ஆயம்சூழச் சிவிகையி லேறி மாடம்சேர்ந்தாள். இஃதுணர்ந்த சீவகன் தோழர் நம்பி காமதிலகன் என்று கூறி அம்மாத ருடைய சுற்றத்தாரிடத்தே இமமணத்தைக் கூறி விட்டார். சீவகற்குச் சுரமஞ்சரியைக் கொடுக்க வேண்டுமென்று கூறிய வார்த்தையைக் குபேர தத்தன் கேட்டு, வெயயதேனைவாய்க்கொணடால வெமமையால நஞ்சென்று விழுங்காதேயும இனி மையால் உமிழாதேயும இருக்குமாறு போலச் சுர மஞ்சரிகொண்ட விரதத்தால உடன்படுதலையும் சீவகனுதலின மறுத்தலையும் செய்யானாய நல்வினை யில்லாதேன் நல்வினையிலலாதாள் திறத்திலே செ யவது என்னென்று கலங்கியிருப்பச் சுரமஞ்சரி

ரு தூணைச்சேர்ந்து நின்று * கற்பாகிய மாலையை
'கி நாணென்னும் வண்டையோசகித் தோழிக்கு
|றத்தொடு நின்றாள். அத்தோழி, சுரமஞ்சரி
'ன் கருத்தும் இதுவே என்று செவிலிக்குச் சொ
|ளுள். அச்செவிலி நற்றாயாகிய சுபத்திக்குச்சொ
ல அவள் ஒரு பொய்கைவற்றக் கனவுகண்டேன்
பூதலாலினி நங்கைக்குக்கன்னிநீரும் அற்றது என்
ய தன் கணவனாகிய குபேரதத்தனை நோக்கிச சுர
ஞ்சரியின் கருத்தை யுரைத்து இது நமக்குப் பா
கடலிலே தேன்மாரிபெய்தது கண்டாய் என்றாள்.
பேரதத்தன், கேட்டுச சுற்றத்திற்கெலலாம் அறி
த்து, நல்ல நாளிலே இயம இயம்பச் சுரமஞ்சரி
யைச் சீவகற்குக் கொடுததான். கொடுத்துப் பரிய
மம சிலம்பும் கிண்கிணியும நிறைந்த பாதத்தை
டையனூடலில மிக்காராய்வீணைவல்லாராகிய அரி
வையர் நூற்றிரண்மரையும் பொன் ஒன்றரைக்கோ
யையும் ஊர் மூன்றையும் என மகட்குக் கொடுத்
தேன் என்று எரிமுன்னே சொன்னான். சீவகன் சுர
ஞ்சரியைக் கூடிப் பின்னுங்கூடக் கருதி அதற்குக்
ளிகூருமபடி மதுவையுண்டு பினபு கூடினான். கூடி
னவன், கயற்கண்ணாய்! சிலநாள் நின்னைப்பிரிவேன
கவலவேண்டா என்று கூறச சுரமஞசரி, பெ
நம! யான் விரும்புவது வேறொன்று உண்டோ

---

* † "உயிரினுஞ்சிறந்தன்று நாணே நாணினுஞ்செயிர்தீர்
காட்சிக்கற்புச்சிறந்தன்று" என்றதனாற் சிறிது நாணைவிட்
டாள். மாலையாலோட்டவே வண்டுமிகவு நீங்காது.

† தொல்காப்பியம் பொருளதிகாரம், களவியல். உஉ.

நின்மனம் உவப்பதுகாண் என் மனம் உவப்ப, என்றாள். சீவகன் அவளைப் புல்லிப்போய்த் தோழ சூழத் தன்மனையிலே புகுந்தான். புகுந்தவன், த ய், புரவியையும் களிற்றையும் தேரையும் நோக் என்மகன் எவ்விடத்திருக்கின்றான் என்று இரவு பகலும் ஓவாது அழுத கண்ணீராலே கைகழு வருந்தியவளது வருத்தத்தை நீக்கினான். ஒற்ற சுற்றத்தார்க்குச சீவகன் வரவை வாயாலுரைய மற் கண்ணாலேயுணர்த்த அவர் வந்து நம்பியோ நம்பியோ! என்று அழுதகண்ணீர் காலை இழு தோடிற்று. இருடியின் கூற்றைசசிந்தித்து இருத் லால் வருத்தமின்றி இருந்த கந்துகன், இங்ஙனம் ழுதால் மறைவெளிப்படும் என்று கூறினான். உற னர், அழுகை தவிர நகராரும் அகத்திலுள்ளாரு நாயனார் போனநாள் இன்றெனக் கூறிவருந்திச சீ சன் வரவால் மகிழ்ந்தார். தத்தையும் மகிழ்ந்து சீ னைநோக்கி அடிகள்! போய்க்குணமாலையைக்கான மின் என்று புலவியில்லாத சொல்லாலே சொல் அவன் சென்று அவளைக் கண்டு அவட்கு மாலை யையும் கண்ணியையும முதற்சேர்த்திக் குங்கும தை அணிந்தான். குணமாலை மங்கல அணிக்கு உடன்பட்டுப் பின்பு கூட்டத்திற்கு உடன்படாமல் சீவகன் தன்னைத்தீண்டிக கொலையுண்டானென்று உலகம கூறலின், தீவினையையுடைய என்னைத் தீண் டன்மின என்றாள். பின்னும் அவன் தீண்டவி வேண்டா என்று சொல்லி, இவனைப்பெற்றுவை தும இங்ஙனம மொழியவேண்டவில் தான் பாவ என்று நொந்து பரிந்து அழுது உருகி நைந்தாள்

வகன், அவனை நோக்கி நீ என்மனத்தினின்று
ங்காது இருந்தாயாயினும், கூட்டமின்றிப பிரிந்த
நாள் ஒருழிகாலம்போலே இருந்தது என்றுரை
த்துப் பின்னும அவள் மகிழ்வனவற்றைச சொல்லி
வளைக்கூடி மற்றைநாள் மேல்முடியுங் காரியங்
ளைத் தந்தைக்குமொழிந்து விதயதேயத்தரசனு
ய தனது மாமனைக்காணச சுற்றமசூழக் குதிரை
கொள்ளுமவணிகனாய் அதற்கோர வேடங்கொண்டு,
னமனையினின்றும் போனான்.

சுரமஞ்சரியாரிலம்பகம்,

முற்றிற்று.

---

பத்தாவது,

# மண்மகளிலம்பகம்.

சீவகன் முதலாயினோர் எருமை சென்ற இடமெல்லாம் சொரிந்தபால், அன்னமும் குருகும் நாரையுமாகிய பார்ப்பினத்தை வளர்க்கும் மருதத்தையும், ஆயிரஞ்சங்கு சூழத்திரியும் வலம்புரி ஆயிரத்துக்குள்ளே மேய்கின்ற சலஞ்சலங்களை நோக்கி அன்னங்கள் தமதுபெடை என்று சென்று தழுவி அவை அல்லாமையால் வருந்தி மீண்டுபோகின்றதைப்பார்த்து நெய்தலையும், முருகு எதிர கொள்ளும்படி மலர்ந்த முல்லையையுடைய முல்லையையும், கங்கையினீர் பிறைக்கோட்டிலேவீழ ஓற்றைச்சடையைவிரித்து நின்று ஏற்கும் * சூலத்தையுடைய அணலைபோலமலையருவி தனதுகோட்டிலேவீழ யானை குன்றிலே நின்றும் குறிஞ்சியையும், கடந்தார். கடந்தவர், புகழைவிரும்பினவனது கைப்பொருள் போமாறுபோலவும் பரத்தையரது காமம்போமாறு போலவும் இருடிகளது கோபம் போமாறு போலவும் பாலைநிலத்தைக் கடிதுசென்று ஆலும் பிண்டியும் மகிழும் பொருந்திய பறவை களொலிக்கும் நதிக்கரையிலே தங்கி இளைப்பாறிப்போய் விதையதேயத்தைச் சேர்ந்து வேந்தனுக்கு அறிவிக்கும் படி ஆள்விட்டார். அவ்விறைவன் இடங்கள்தோ

---

* கங்கைக்குத் தலைபாகிய இமயமலையில் பதுமை என்னும் பொய்கையில் புனல் விழுகின்ற தாழ்வரையில் உருத்திரப்படிமம் இருத்தலையுணர்க.

ம் விற்பிடித்த விரல்போல நெருங்கி நின்று எதிா ாள்க என்று தனது நாட்டார்க்கு ஏட்டிலே எழு ந்திருவெழுத்துச்சாத்தித் திருமுகங் கொடுத்துக ரியப் பெயரை ஏவினான். அவர், * நாட்டிலயிர் தயும் கடலயிர்தையும் வரையயிர்தையும் காட்டி யிர்தையும், குவித்துக்கொண்டு கமுகையும் வா ழையையும் நட்டு எதிர் கொண்டார். சீவகன், யா ரமேலே தேவகுமாரன் போலேசாமனைவிச்ச ரல்லநகரார்கண்டு † திருப் ‡ புகுதக, திருமால்புகு க, காமன்புகுதக, காளைபுகுதக, விச்சாதரகுமார புகுதக, வரையைப்பிளந்த முருகன்புகுதக, அரு ன்புகுதக, வீரன் புகுதக, என்றார். மகளிர், சீவ ன் ஏறியபிடியைத் தொழுது, பிடியே! நினது ந டையை விரும்பிக்கற்ற எமக்கு நீ அன்புற்றாயாயி ர காமனைக்கண்ணாலே காணும்படி மெல்லநடப்பா ; பிடியே பெண்மைக்கு அழகு மென்னடை என் தையோராயாய்க் கடியநடையைக்கற்ற நீ கணவனை )ழக்கக்கடவை; பாவி நீ பிடியல்லை; பிடியேநின்

* நாட்டிலயிர்து—செந்நெற சிறுபயறு சேதாநறு ரய்திங்—கன்னற்கதலியோடைந்து. கடலயிர்து—ஓர்க் காலை சங்கமொளிர் பவளமொண்முத்த—நீர்ப்படு மூப்பி ஞேடைந்து. வரையயிர்து—தக்கோலந்திம்பூத்தகை சா லவங்கமங்—கற்பூரஞ் சாதியோடைந்து. காட்டிலயிர் து—அரக்கிறால் செந்தேனணிமயிற்பீலி—இருத்தகுநாவி யோடைந்து.

† திரு—உவப்பின்கட்பால் மயங்கிற்று.

‡ புகுதக—ஒரு சொல்விழுக்காடு.

கொடுமையை நினது கணவனாகிய * ஐராவண
தோடு சொல்லுவோம் இனிச்சொல்லாதபடி ஐய
கிய உயிர்காவலனைக் கொண்டு நில்லென்று கூறி
ர். சீவகன், மன்னன்கோயிலைச்சேரக் கோயில் ம
கையர், முகம் தோன்ற மெய்ம்மறைந்து நின்று
பட்டத்தேவியர் இங்ஙனம் ஒரு மகனைப்பெற்றே
என்று மகிழ்ந்து மறைந்து நின்றார். அப்பொழு
கோவிந்தன் மகள் இலக்கணை தோழியைச் சோர்
சீவகனைப்பார்த்தாள். அவனும் அவளைப்பார்த்து
பிடியினின்றிழிந்து மாமனைக்கையாற் றொழுது
ன்பு அவனடியைத் தன்முடியிலேசேர்த்தினன்.
ன்னன், மருமானைப்புல்லி அன்பு மிகுதியாலே
ழுதான். தான்வேந்தன் என்கின்ற தன்மையாது
ன்றிக் கோவிந்தராசன் அழுதானென்று கருதி
கோயிலுள்ளமாதரார் அழுதார். அழுது சசசந்
னது தன்மையைக்கேட்டு அவர் அலறவே கோவி
ந்தராசனுக்கு இளையாளாகிய விசயை வந்து அவ்
ழுகையை நீக்கினள். அரசன் ஏத்தாளிகள் புகழ
சித்திரகூடத்திலிருக்க, அடைப்பையையும் படிக்
த்தையும் வாளையும் கலசப்பானையையும் கவரியைய
ம் ஏந்திய மகளிர், அவற்றை ஆசனத்தருகே வை
த்து நீங்கச்சீவகன் மாமனோடு சூழ்தற்கு அம் மாப
னமைச்சரோடு சென்றிருந்தான். கோவிந்தன்
தனது குலத்தை வளர்க்கத் தான் புதல்வனைப
பெற்றுளதலால் தான் பொருது படக் கருதி
ன். அங்ஙனம் கருதியதற்கு அமைச்சர் உடன்

* ஐராவணம்—கோவிந்தராசனது பட்டத்து யானை
யின் பெயர்.

டாரென்று அவரை வினவாது வாழநாள் முடிந்த க்குத் தோன்றுதே மறையும அருந்ததிதோற்கும் பிணையுடைய புதவி எண்ணும தேவி பெற்ற நமபி கிய சீதததனுககு அரசைககொடுத்து இத்தேய தைக காப்பாயெனறான். என்றவன் சீவகற்கு அமைத்தாற போல அணிகலம முதலியவற்றை அவ தோழாக்கெல்லாம் கட்டியங்காரனறறா அறி தபடி அமைத்தான்.

சீவகன் வேறு வேடம கொண்டிருத்தலால புலனையாரும அறியாராயினும அவன தோழாக்கு வேந்தன் சிறபபுச் செய்தது தெரிந்தால் கட்டியங காரனறறாபோய் நீ கொன்ற சீவகன் தோழர்க் குக் கோவிந்தன் சிறபபுச் செயதானென்று அக் கட்டியஙகாரனுககுக் கூறினால அவனுறவாகிக் கொலசெய்தல் தவறுமென்று கருதி மறையக்கொடுத் து ஒருமொழி கூறுகின்றான.

தன்மைத்துன னரசுரிமையைத தானே அடைய கருததுடையனென்று கட்டியஙகாரன் கருதி நமது கருததறிதலே காரியமாகத் துணிந்து வரவிட்ட ஓலையை நீரபடியினென்று கோவிந்த ராசன் சொலல விரிசிகன் இலசசினையையீககி ஓலையைபபடிக்கின்றவன, கட்டியங்காரன் ஓலையை விடுத்தார் வேந்தன் காலமபானாக, சசசந்தனை நான் கொன்றதாய் உலகிலே பரவி என்மேல கிடக்கின்ற பொய்பபழியைததானும மெய்யெனறுகொணடான். இனி என்னுயிா போமபடி எனது நெஞசைப பிளந் து காட்டினும் நமபுவாரில்லை; ஆயினுந்தானுதவிற் சொல்லுகின்றேன. அசனிவேகம, யானைததிரள அநு

சபபாய்ந்து தேர்களை அழித்து தன் கோட்டாலே கு திரைகளைக்குத்தி வீரர் மறிக்கச்சீறித்துன்பம் செய்தது; சச்சந்தன் அதனைப்பொருனுய்ப பாகா நூற்று வரையேவ அவரையும அதுகொனறது; பின்பு அரசன்தானேசென்று அவ்யானையை அடக்கி அதனையேறிக் கந்திலே கட்டுகின்றபொழுது அது நமன்போல் முழங்கித்தள்ளிக் கொல்லவே வேந்தன பட்டான; இனிகோவிந்தராசன், உலகம கூறும் பொய்யைநமபாமல் யான்சொல்லியதையே நமபி இங்குவந்து தெளிய எனக்குப்பழியும நீங்கும். தனக்கு யானை எனுயிரையும தருவேன். இனித்தானே எனக்கு இறைவனுதலால இந்நிலகிழமையை விருமபிக்க கேவருகஎன்றுவாசித்தான். சீவகன்கேட்டுநகைத்து இவன்தானே காலனைக் கையாலே அழைக்கின்ருன என்று நகுநி நூல வலலீர் ! இவனைக கொலவதற்குக் காரணமான சூழ்ச்சி இது போலவது வேறில்லை என்ருன். கோவிந்தன, கட்டியங்காரன கள்ளத்தாலே நமமைக் கொல்லக கருதினன; நாமும் அவனை அககள்ளத்தாலே சொல்லக கருதினேம்; ஆகலால் இந் நட்பை முதற்சொலலி பினபு படைகூடுமபடி சொல்லி ஊரிலே முரசறைவிக்க என்றருளினன். முரசறைவான, வேந்தன பகையை விட்டுக் கட்டியங்காரனேடு உறவானன ஆதலால் நெல்லும பொன்னும இரண்டு நாட்டிலும வழங்குமினென்று முதற்சாற்றிப்பின்பு மள்ளர் வேழத்தையும தேரையும குதிரையையும்பண்ணிக் கழலணிந்துநானை நகரிலேபோக என்று சாற்றி முரசறைந்தான் அங்ஙனம அறைந்த மறுநாள் சஙகும முழவ

ம் முரசமும் ஆரவச் சேனை சேர்தலாற் பாற்க ல் போலே நகரிலே ஒளி பரந்தது.

கையாலும் காலாலும் வாலாலும் கொம்பா ம் கொல்லுவனவாய்க் கையும் கோசமும் வாலும் லந்தோய்ந்தனவாய் ஏழுமுழம் உயர்ந்தனவாய் லையைக் கிழிக்குந்திறலினவாய் நீரைச்சொரிகி ற மேகமன்ன மதத்தவாகியயானை பதினாயிரத் றுநூறுவந்தன. தீக்கு அஞ்சாத குஞ்சரங்களை ற்றினவீரர் எறிகோல் வாள் வில் என்கின்ற இவ் ன்றிலும் வல்லராய்க் கூற்றேடும் பொருவாராய் னையைக் கொண்டு அந்தரத்திலே பறக்க எண்ணி ப் பறக்கும் திறலாய்க் கோடிபொன்னைச் சீவிதமா டையாராய் வந்தார். புறப்படாமற் பந்தியிலே ன்று குங்குமங் கலந்த பனிநீரையாடும் * நமபி ரான் பன்னீராயிரம் மயிர் சூழ்ந்த புரவி அறு பதினாயிரம் கவரி அணிந்தபாய்மா அறுபதினா யிரம் ஆகக்குதிரை நூறாயிரத்து முப்பத்தீராயிரம் போந்தன. குந்தமும் வாளும் சிலைகளும் பிறக ளும் முற்றக்கற்று ஊனமொன்றில்லாராய் உயர்ந் தகுடியிற் பிறந்தாராய் ஆயிரம் போர்க்களத்தை கண்டார், அமமாகக்ளப பணணிமேயறி வந்தார். மாளவதேயத்துத்துரகம அஞ்சாமையும் ஆண்மை யும தாமரைபோன்ற நிறமும வெண்குளம்புமுடை யனவாயுள்ளன. சிந்துவின் கரையனவாகிய துர கம பறையொலிபோல முழங்குவனவாய் நாவ லின் கனிபோலக் கோலத்தனவாயுள்ளன. பாரசூ ரவம பல்லவம என்னும் நகரிலே பிறந்த துரகம

* நமபிரான்—உத்தம இலக்கணமமைந்த குதிரை.

ஆற்றலுடையனவாயக் கடுந்தேறல போனற நிற தனவாய்த் தாம பூட்டப்பட்டதேர புவியிற்செல ஏ பழியுண்டென்று நாணிவிணைஙிற செலவனவெ யுள்ளன. மாரட்ட தேயத்துக் குதிரைகள் ம மகழுக்துப் போலும நிறத்தனவாயுள்ளன. மா கலத்நினின்றிழிந்த குதிரைகள் கிளிபோலும நிற தனவாயப பவளமபோலும குளமபுடையனவாயு ளன. இத்தகையனவாகிய குதிரைகளபூண்ட தே ரத்தொகை இருபதினுயிரத்தறுநூறுவநதன. வி ர் தமதாண்மையாற் புலியை யொப்பாராய வி லையும வாளையும் பிறர் தமபக்கலிலே கறகுமபடி வ ல்லராய்ப பலநூற்கேள்வியுடையாராய்க கட்லை நூர்க்கவும் மலையைத் தோண்டவும் வல்லாராயுள் நான்கு நூறுயிரவர் தோன்றினர.

வேநதன், படைகாண்பான் மாடத்துச்சியிலே றிக்குடை நிழலிலே நிறக ஏறுதிமோதிரம் கெ ண்ட சேனுபதி அரசற்குப் படையைக் காட்டி னன். அவன்கண்டு ஐராவணத்திலேற வெல்கவெ ன்று எல்லாரும் வாழ்த்தினர்; அப்பொழுது சங் குமுழங்கின; முரசமார்த்தன; நெறியிலே பற வைகளும் நிமித்தமும் நனமையே அறிவித்தன; இறைவனது வலக்கண் பலகாலும் துடித்தது. இ றைவன் செல்லுமபொழுது பாலைநிலம் குடையா லும் குஞ்சியாலும பிச்சத்தாலும குளிர்ந்த நிழலு டைய சோலையாய் யானையின் மும்மதத்தாலே தன் பாலைத்தன்மை போய் மருதத்தன்மை யை

புணராக்கிற்று. பெடையோடு மயில்கள் ஒலித்து எழுதலானும் கணநோடு மான்கள் கலங்கியோடுதலானும் படைக்கஞ்சிக் காடும் மலையும் குடிபோவன போன்றன. சீவகன்காத்தற்குரிய மண்ணை அவனைக்காக்குமாறு கருதிய கோவிந்தன் பலமலையையும் காட்டையும் கடந்து போய ஏமாங்கதத்தைச் சேர்ந்து இராசமாபுரத்தின் புரிசையின் புறத்திருந்தான். அப்பொழுது கட்டியங்காரனதேவிமார் வலக்கணை துடித்தன; அவர் பொல்லாக்கனாக்கண்டார்; அவனமேனியொளி மழுங்கிற்று; பகைபகலிலேஅவனகோயிலிலே இருந்து குழறப் பாலொலி அவிய ஆகாயத்தினின்றும் குருதி சொரியப் பூகம்பமும் வெளிப்படுதலுமுண்டாயின. பட்டுப்போயப பொன்னுலகை யாளுதற்குரிய கட்டியங்காரன் சீவகன்றந்தையைக்கொன்று அரசெய்த வந்திருந்தலை அறியானாய் இனிக் கோவிந்தனையும் கொன்று அவனரசையுமெய்தினேனல்லேனோ என்று மகிழ்ந்து கோவிந்தனுக்கு யானையிருநூறும் தேர்நூறும் குதிரை ஆயிரமும் விடுத்தான். கோவிந்தன் அவற்றிற்கு ஈடாகக்கட்டியங்காரனுக்கு வேழங்களில் அரிமணனென்னும் வேழத்தையும் தேர்களில் விசயமெனனும் தேரையும் புரவிகளிற் பவனவேக மென்னும் புரவியையும் விடுத்தான். கோவிந்தன் அவனைப் பெரும்படை தனசிறுபடைக்கு நிகர்க்குமெனபது தோன்ற வரவிட்டானென்பதைக் கட்டியங்காரனுணராமலயாவர் முன் கூறிநேரே விடுத்தனவற்றின் இரட்டி சிறப்புடையனவற்றைக் கோவிந்தன் எனக்கு வரவிட்டான் எனமகிழ்ந்தான்.

கோவிந்தன் கட்டியங்காரனோடு கூடி இருந்த *அன்பென்னுங் கூர்மைகொண்ட வாளாலே அவ னுயிரை வாங்குதற்கு வஞ்சனையாலே சூழ்ந்ததைச் செய்கின்றவன் சக்கரத்தினுள்ளே திரிகின்ற மூன் று பன்றியையும் எய்தவன் என்மகள் இலக்கணைக்கு க்கணவனுவானென்று முரசறைவித்தான். இலக் கணையது அழகு தமது மனத்தைக் கவர்தலாலே அரசரெல்லாம வந்து விலலையும கணையொன்றையு மபிடித்துச் சக்கிரத்தினுள்ளே திரிகின்ற பன்றியைப் பார்த்துத்தலையசைத்து நின்றார். அவரில வினிதை யிலாசனும் அத்தினபுரததாசனும் பன்றியை எய்தா ர். அவ்வம்புதையாவாயின. காமபிலியின் மன்னன் கேழலையெய்யவேண்டிச்சக்காத்திலேறி அதன்விசை யாலே வீழ்ந்தான். கோசல நாட்டு வேந்தன் எய்த கணை வானில நேரே யெழுந்தது. அவந்தி அரசன து வில ஊடிய மடந்தைபோல வளைக்க வளையாதா க, அவண அசசிலையை வலித்துவாங்கி முரித்து வா டி நின்றான். அறிவான்மிக்கான் பிறர்மனையாளி டத்துச் சென்ற தனது மனத்தை மீட்க அது மீண் டாற்போல மகதசேயததரசன் எயத கோல பன்றி யைத்தீண்டி மீண்டது. கலிங்கததரசன் தான தொடு த்தவிசிகத்தைப் பன்றி விழுங்கக்கண்டு மீண்டான். அன்று கல்மழைக்குக் குன்றையேந்திநிரையைக்காத்து இன்று உயிரைக்காக்கும் வாரணவாசியின் மனன னெய்த அம்பு பன்றியிடத்தே சிறிதுற்று மிகவுரு து மீண்டு மறைந்தது. போதனபுரத்து வேந்தன் சக்கரத்திலே அரிதாக ஏறி அது கொள்ளிவட்டப

*அன்பெனறது சீவகனை; ஆகுபெயா.

போலத் திரிதலால் அதில் நிறலாற்றாது கண் சுழ ன்று சோர்ந்து நிலத்தே வீழ்ந்தான். தென்னவன் எய்த அம்பு பன்றியை நோக்கிச் சென்று தலையை மதது. அவனும் நிற்றற் காற்றாது நிலத்திலே கா லைவைத்தான. விற்றிறல் விசயன வில்லை வளைக் க அது முறிந்தது. பின்பு சேமவில்லை யெடுத்து வளைத்தபொழுது அதினுடைய நாணறறது, ஆத லால அவனும தன் பெருமை குறைந்தான்மன்னர் யாவரும் இங்ஙனம் பொறியைக் களையாராக ஆறு நாள் சென்றன.

சீவகன், பகைவா நினைக்க ஒண்ணாத வஞ்சனை யாலே அவருயிரைக் கொள்ள நினைநது யானையேறி த்தோற்றினன். கட்டியங்காரன் அவனைப பாாத்து ப் புலியைக் கண்ட கலைபோல உயிர்போயிருந்தான். இருநது புலியை அகப்படுத்திக்கொணட யான அத னை வாளுருவிவிட்டேன், அந்தத் தப்பும என்னை ந லியாநிற்கும்; மதனனை இவன் தப்பிய தப்பும என னை நலியாநிற்கும் என்று கூறிக் களிறறினுச்சியிலே கையைப் புடைத்துச சோர்ந்திருந்தான. சீவகன யானையினின்றுமிழிந்து பன்றி மூன்றும் ஒன்றா சேர்தலை நாடி ஒரு முகூர்த்தத்தளவும நோக்கிநி ன்று வில்லைவளைத்துக் கட்டியங்காரனது நல்வினை யும பன்றிகளும அற்றுவிழும்படி எய்தான். அவை விழுதலும கோவிந்தன சீவகன்குலத்தைக கட் டியங்காரனுக்கு முந்துறக் கூறிய பின்பு எல்லாரு ம அறியச்சாற்றினன. வானிமேல ஒரு இயக்கன்தோ ன்றிச்சீவகனென்னும சிங்கம் வேலாகியசோலையிலே நிற்கின்ற கட்டியங்காரனென்னும் வேழத்தினுயிரை

விழுங்கும் என்று கூறினான். கட்டியங்காரன் விஞ்சையா படையைக் கொண்டுவந்தாயென்று யான் அஞ்சுவேனோ உனது ஆற்றலை நின் தந்தை அறிவான் நீ அறியாய். இனி யாம் போர் செய்தால், என்னைக் கள்வாற் கொலைசெய்ய எண்ணியகோவிந்தனையும் நின்னையும் கொல்வேன் என்று சொல்லி நால்வகைப் படையையும் ஒரு கணத்திலே தொகுத்தான். வேற்படை வீரராகிய மக்கள் நூறுவரும் கூடினார். சூரியகாந்தம் ஞாயிற்றைக்கண்ட அளவிலே அழல் எங்ஙனம் காலும்? அங்ஙனம் மதனன் சீவகனைக்கண்ட அளவிலே கார்காலத்தின் முகில்போலக் கோவித்தான். சீவகற்குப் படையும் யானையுந் தேரும் ஒரோ ஒன்று நான்கனைக் கச்சமாம். குதிரை எழுநூறாயிரமாம், காலாள் ஏழு தேவகோடியாம்; கட்டியங்காரற்குத்தேரும் யானையும் ஒரோ ஒன்று ஐந்தனைக்கச்சமாம்; புரவி எழுநூறாயிரமாம்; காலாள் ஏழுதேவகோடியாம். சேனைகளில் முரசமுழங்கின; வளையும் பணையும் ஆர்த்தன; பறையும் சிறுசின்னமும் ஒலித்தன. போர்புரிந்த மாந்தர் தாமுண்டசோற்றுக்கடன் நீங்கும்படி உயிரைநீத்து யானையைத் தலையணையாகவும், குதிரையைக் காலணையாகவும்கொண்டுகிடந்தார். நிணமாகிய சேற்றிலே நின்று குடரை இழுக்கும் நரிகள், சங்கிலியை வலிக்கும் நாய்போலத் தோன்றின. மதனன், விசயன் ஏறிய யானையினது நெற்றியிலே பாய்ந்து அவ்விசயனது வாளின் வாயிலே பட்டுப் படைக்குள்ளே விழுந்தான். அம்மதனன் தம்பி மன்மதன் சீறி வந்தான், வந்தவனை விசயனது

ானை கொம்பாலே குத்தியெடுப்ப அவ்விசயன் வா
ாலே வெட்டினன். அந்தணனாகிய புத்திசேனன்
புரசனை வென்றபொழுது திரிபுரத்தை எரித்த க
வுளை யொத்தான். நபுலன தானேறிய குதிரை
ய மகதையாரகோன் யானையினஉச்சியிலே பாய்
ிக்கஅவன்கண்ணிமைக்தான். அந்நபுலன் அதுகண்
இவன் மேலே வந்தேனே என்று நாணி நின்னை மு
ிந்திலேன் அஞ்சலென்று தேறறித்தன் குதிரையை
ிவேறோர் வேழததின்மேலே பாய்வித்தான். பாய்வி
தவன, அவயானைமேலிருந்தவனதுகையிலே படை
யான்றுமில்லாமையால அவனையும அவனது யானை
யயும வெடடாது மீண்டான். பதுமுகன்தன்னோ
டதிர்த்தகாமுகனை வெட்டிகொல்லவே அக்காமு
ன்தமபி கோமுகன் எதிர்த்து அப்பதுமுகனால் கொ
லபபட்டான. கட்டியங்காரனுடைய படைத்தலை
ுவாகிய பூரணசேனன் ஊரியளவும கட்டியங்காரன்
ாழ்வாகக என்று வாழ்ததிப்பொருதான். சிங்க
ாதன், கோவிந்தன் வாழ்கவென்று பூரணசேனனை
ாக்கி நகக்குப்பொருது அவனைக் கொன்றான். க
டியங்காரன் சேவகன ஒரு வேலை எறிய நந்தட்ட
சேவகன் தன்மார்பிலே ஏற்றுபபறித்து இதுவும
ரு வேல் பெற்றேமே எனறு மகிழ்ந்தான். பி
பு நந்தட்டன் சேவகன் எறிந்த வேலகளை எல்லா
கட டியங்காரன் சேவகன் கண் சிறிதும் இமையா
து நின்று மாாபிலே ஏற்றுச்சாளரமாய் நின்றான்.
லநிதியென்னும் வீரன், புகழும் கவினாகருத்தை
டந்து அழகுகொண்ட பெணகளதுமாரபிலே தே
ாக கொப்புளிக்கும் மாலையையும் கடல்போலும

கேள்வியையும் உடைய சீவகன் பாதத்தை வாழ்த்திப்போரைத் தொடங்கி யானைகளை வெட்டினான். அதனாலே வளைந்த வாளை தனது நெஞ்சிலே தைத்து நின்ற வேலைப் பறித்து, அப்புண்ணிலே சொருகி அவ்வளவைப் போக்கினான். அரசர் அதுகண்டு யானைகளுடனேதோடு மோதினார். சலநிதி இனி நமக்குப் போரில்லையென்று கருதி நின்றான்.

சீவகன், போர்செய்யத் தேரையேறிக், காற்றினொலியும் காரொலியும் கடலொலியும் தம்மிற் கூடப்பட்டுச சிங்கஆர்ப்புங் கூடிற்றென்னும்படி போர்விளைகின்ற கழனியிலே முரசொலியோடு வீரருமாராநிறுகச், செருசசெய்தான். அழகையும்அழகின்மையையுமகாட்டும் கண்ணாடிபோல ஆடவரது ஆண்மையையும்ஆண்மையின்மையையும்காட்டும்கண்ணாடியாகியபோர்க்களத்தேவீரர்அஞ்சியோடினார். கடியங்காரனமைச்சனாகிய அரிச்சந்தன், ஓடினவரை நோக்கி மைந்தீர! மகளிரிடத்தன்றிப்போரிடத்தினும நீர் ஆடவராகவேண்டுமே; *குமரர் இங்ஙனம் தம துயிரத்தைப்பிறர்கொள்ள ஓடுவாராயின்இனி ஆண்மை யாரிடத்துள்ளது. உழைமான், தலையிலுள்ள கோடுகழலுங்காலத்து அதன்மேலே வேட்கையைவிட்டு அதனை அசைத்துப்போகவிடுதல் போல, வீரர் தம்முள்ளம் தமமுடம்பின்மேல் வேட்கையாலே அதனைககைவிட அஞ்சிக்கலங்குமாயின்அவ்வீரர அவ் வேட்கையை நீக்கிக்கலங்காது நின்றவன்கண்ணராவர; அது நமக்கும்வேண்டுமே; வீரராயுள்ளார் இடுக்கணவந்தால் இவர்நமக்கு உதவுவரென்று தமமை

* குமரர்—முன்னிலைப்படர்க்கை.

ராதுகாத்துவைத்த தலைவற்கு உதவித்தமதுவிரத
தான்ற புகழைப்பரப்பிப் பகையைவிட்டின், பொ
னுலகுசேர்வர்; அதுவன்றி இவ்வுலகிலே புலவர்
சால்மாலையைச் சூட்டிப்புகழ்க் கல்மேலநிற்பர் இவ
ற்றைநாமும் பெறலாமே என்றுசொன்னான். உருகி
இரும்பிலே எஃகைவைத்தாற்போல அரிச்சந்தன்
றங்ஙனம் படையைக்கூர்மையிட்ட அளவிலே அப
டையும் கட்டியங்காரன்குமாரும் பொருதின. வே
தாகுடைகள் வீழவும் அவர்விசும்பேறவும் பேய்
கணமும் குறைத்தலையும் எங்குமாடவும் நரி நிண
த்தையுண்ணவும் களிறும் புரவியும் விழவும் சிவக
ாமிகண்கள்சிவந்தன; அவற்றிற்குதவியாகப்புருவ
மும் கோடின.

பொய்யை போர்க்களமாகப்புறவிதழ் வாட்
டையாக அதற்குள்ளே புல்லிய இதழ்யானை
யாக உள்ளிற் சிறிய இதழ் அரசராக அல்லி கட்
டியங்காரன்பிள்ளைகளாக கொட்டை அக்கட்டிய
ங்காரனாக மலர்ந்த பதுமவியூகத்தை முறையாலே
மல்லக கொன்றபின்பு அக்கொட்டைமேலே பவி
த்திரத் * தும்பி பறந்தது. கட்டியங்காரன்சிவகனைக
ண்டுகாய்ந்து கூறுகின்றான்.

எங்ஙனமெனின் நல்வினையுடையார் நஞ்சை
யுண்டால் அது அவர்க்கு அமுதமாகும்; தீவி
னையுடையார் அமுதையுண்டால் அது அவர்க்கு நஞ்
சாகும்; ஆதலால் அறிவுடையார் இவனைக் கொல
்வன் என்றும் இவன் என்னைக் கொல்வன் என்றும்

* தும்பி—சீவகன்.

நினையார்; இது வினையினாக்கமேயென்றறிந்து நின் செயலென்றுகருதவேண்டா. நீ கேளாய், நின்னுடைய கையிலே அகப்படுதற்குக்காரணமான தீவினையுடையாரைக் காக்க வல்லவர்யார்? ஆதற்குக்காரணமான நல்வினையுடையாரை அழிக்கவல்லாராயார்? என்றான். கட்டியங்காரன் தலைப்புதல்வர் சீவகனாலே கொலைப்பட்டமையையும் அப்புதல்வர் நூற்றுவராலும் சீவகன் கொலைப்படாமையையும், கருதி அங்ஙனம் கூறினான். கூறினவன், சீவகனைநோக்கி என்மக்கள் நின்கையாலே பட்டமையாலே, ஞாயிறும் தனது தன்மை வேறுபட்டுத் தட்பம் உடைத்தாதலும் உலகினுண்டாம்; நீ அவரைக் கொன்றமையாலே, மதியும் தனது தன்மை வேறுபட்டு வெவ்விதாதலும் உலகினுண்டாம் என்று தன் மக்களை வியந்து மொழிந்தான். மொழிந்து நெய்யுந் திரியும் குறைந்தபொழுதே விளக்கு அவிதலன்றி எரிவதுண்டோ? அதுபோல நல்வினை முடிந்தால் செல்வம் கெடாது நிற்குமோ அதனைப் பிடித்துவைப்பாருமுளரோ என்று புகன்றான்

சீவகன்கேட்டு இவன் இயல்பாம் குறைந்தே நீ, பாறுயின் எங்ஙனம் கொல்வதென்று கருதி அவனுக்குக் கோபமுண்டாகும்படி சிரித்து நீ அஞ்சினாய்காண் என்றான். கட்டியங்காரன், தோன்றல்! வெல்லுந் தன்மை விதியாலுண்டாகும். அதுயான் கூறேன். நின்கைவேல் வந்தால் நான் இமைப்பேனாயின் அஞ்சினேனென்று இப்பொழுது கூறிய சொல்லை அப்பொழுது கூறி நீ சிரிக்கக் கடவை. யான் மறந்தோற்பேனாயின், மனையாளை அஞ்சியிருந்தேனாயப் புல்லனாக்கடவேன் என்று வஞ்சினஞ் சொல்லி

மபைத்தொடுத்தான். சீவகன், அவன் தொடுத்த அம்பையும் வில்லையும் அறுத்தான். கட்டியங்காரன், சீவகன்றேரிலே பாய்ந்தான். அவன் பாய்தலும் சீவகன் சரம்பாய்ந்தது. அவ்வளவிலே அக்கட்டியங்காரன், சூரியன்முன்னர்ச் சந்திரன் ஒளிமழுங்கி விழுந்தாற்போலக் கண்டாரஞ்சக் கண்விழித்து வாய் மடித்துச் சீவகன் முன்னர் வீழ்ந்தான். அவ்வளவிலே கட்டியங்காரனென்னும் கலியரசுபட்டது இனிப் போர்த் தொழில் ஒழிகவென்று முரசு கொட்டினார்; அதுகேட்டு வீரர் ஆர்த்தனர்; அப்பொழுது மண்மகள், குருதியாகிய கண்ணீரைச் சொரிந்து அழுது அவன்கண் ஆர்வத்தைக் கைவிட்டாள். அவ்வளவிலே மன்னரிறைஞ்சினர்; அரசர் சூழ்ந்தார்; விளக்குமொய்த்தன; நகர் ஆர்த்தது; விசயை, சீவகன் கட்டியங்காரன் புதல்வரை முன்னே கொன்று பின்னை அவனைக்கொன்ற வெற்றியொழுங்கைக்கேட்டு அரசனை நினைந்து வருந்தியபின் மகிழ்ந்தாள். சீவகன், அரசர் மண்ணுநீராலே ஆட்ட பூமகளைப்பெற்றான்.

மண்மகளிலம்பகம்,

முற்றிற்று.

## பதினோராவது

# பூமகளிலம்பகம்.

சீவகன், மைத்துனனரசனாகும்படி சென்று கோயிலை சேர்ந்தான். மறவர் உள்ளேபுகுந்து கட்டியங்காரன் பெண்டிரை நோக்கி இவ்விடத்து நின்றும் ஏகுகவென்று கோபித்துக்கூறினார். மலர்மேலல்லது நடவாத அத்தேவியர் அழுது வெறுநிலத்தே போயினர். சீவகன், அங்கிருந்தோரை நோக்கி இப்பட்டத்தேவியாருள் கட்டியங்காரனால் பட்டம் பெற்றவள் யாரென்றுகேட்க, உழையர் கட்டியங்காரனும் மாண்டும் பட்டத்தைக்கேட்டு அவளுமபட்டாள் என்றார். சீவகன், கட்டியங்காரன் பெண்டிரை நோக்கிப் பாம்பினது நஞ்சு உயிருள்ளளவும் வெகுண்டு அவ்வுயிர் போனபின்பு அவ்வெகுட்சி போமாறுபோலே கட்டியங்காரனது உயிர்போயபின்னரே யானும் என் வெகுளியைப் போக்கினேன்; கருடனவாயிலேபட்ட நாகம் ஒருகாலும் உய்யா; அதுபோல எமக்கும் உய்தலில்லை என்று கருதி நீவருந்தவேண்டா; மடவீர்! யான் நும்மை வருத்தஞ்செய்யேன்; ஆதலால் இனிக்கழிந்த முந்தைச் சிந்துவதுபோல அழல்வேண்டா, வளைக்கையினீரே! நும மன்னவன் நுமக்குத்தந்த சீவிதங்களை யாமுந்தருவேம்; அவற்றைக்கொண்டு பண்டிருந்தும நீர் உயிர்வாழ்மின்; அன்றிப்பொன்னைக்கொண்டு நுமதுசீவிதங்களிலே போயும் உயிர்வாழ்மின்; இரண்டில நுமது கருத்து யாது? சொல்லுமின் என்று சொன்னான். அந்நங்கையர் போவேமென்று தம்பதி

ளிமேலேபோய் அணிகளை நீக்கி நோன்பு நோற்றிருந் தார். மன்னர் தாழ்க்கோலோடு கூடிய விளக்கை நதியபொன்னறையையும்கோயிலையும் பிற இடங் களையும் தடுக்கிச்சோதித்துக் காவலிட்டார். சீவக ன் களவேள்வி முடித்து முருகன்போலே உள்ளே சென்று போர்க்கோலத்தைப்போக்கி மகளிர் நீரா ட்டி ஆடி நீக்கோலம் செய்து மாமனை வணங்கினான். வணங்கித் தேவாசுரம, இராமாயணம், மகாபாரதம், என்கின்ற போரிலே புண்பட்டமாறுபோல இப்போரி லே புண்பட்ட வீரரது புண்ணைப்போற்றிக்காத்தரு க என்று அவனை வேண்டிக்கொண்டும் அவனோடேபோ ய்ப்பார்த்து பின்பு பள்ளி சேர்ந்தான். புண்பட்டவ ரும இளைப்பாறினார்.

இறந்தவருடைய மகளிர் துன்பக்கடலிலேசு ழல வென்றவர்மகளிர் இன்பக்கடலிலே சுழலக் திரோன் கருங்கடலிலே தோன்றினான். அப்பொ ழுது பெண்கள் கடுவும நெல்லியும தான்றியும் ஊற ின நீரிலே கருப்பூரத்தைக் கரைத்து ஏந்தச் சீவ ன், கண்கழுவி முனிவனை வணங்கித் தானம்செய் து கோலம்கொண்டு பஞ்சவாசம கவுட்கொண்டு பூ ைவபிடித்துச் சிங்கமபோலே சேக்கையிலே இரு ந்தான். அப்பொழுது அவனைத் * தோழருந ந்தட்டனும் கோவிந்தனும கந்துக்கடனும் நகரும் மும சேர்ந்தன. வெள்ளிமலையிலே கலுழவேக ர் இருப்ப ஒழிந்த விஞ்சயரெல்லாரும் வந்துசேர்ந் தார். அவரெல்லாரும சீவகற்கு முடிசூட்டத்

* திணைவிராய் எண்ணி அஃறிணையான் முடிந்தன னமை யொருமை மயக்கம்.

தொடங்குமினென்று அமைச்சரை நோக்கிக் கூ
ஞர். அவ்வமைச்சர் முடியைச்செய்தவரும் * கடி
கையும் † கண்ணாருமவருகவென, அவரும்வந்த
ர். அவ்வளவிலே சுதஞ்சணன் தன் தேவியரோ
வந்து பாற்கடலிலே முகந்த நூற்றெட்டுக்குடத்தி
லே சீவகனை மஞ்சனமாட்டிப்பொன்மழையோடுபூ
மழைசொரிய முடியைக்கவித்தான். தேவர்கட்கு
கைசொல்லுதற்குத் தேவதுந்துபி எரியிற செய
அவியோடும் புகையோடும் சுண்ணத்தோடு மெழு
தன; அரம்பையர் ஏத்தினார்; மன்னர் கைகளை
இட்டு வணங்கினார்; ‡ கடிகையார் மங்கலம்பாடின
ர் வெண்குடையோங்கி நிலத்தை அளித்தது. அங்
ஙனம் அளித்தலால் கயல்போலும் கண்ணுடைய பூ
மியைச் சீவகன் பெற்றான். பெற்றபின்பு சுதஞ்சண
ன் போயினான். சீவகன் நிலமதிர்த்தற்குக் கவ
ரிசப் பொன்னங்குடை நிழற்றச் சென்று திருவ
லத்து பெண்சாராத மண்டபத்தே புகுந்து சிங்கா
னத்திலே வீற்றிருந்தான். இருந்து நந்தட்டனைநோ
க்கி ஊரிலுள்ளாரைப் பிணித்த சிறைக்கோட்டத்தை
இடிப்பித்து நாம பதினறியாண்டளவும் நாட்டை
கடமைகொள்ளாமை தோன்ற முரசறைவி என
பணித்தான். பணித்தவன் அமைச்சரை நோக்
அந்தணர்க்கும தெய்வங்கட்கும்சோதிடர்க்குமவி
ட இறையிலி நிலங்களை முன்பு போல இறையி
யாக விடுமின், பிறஅறங்களையும் செய்மினென்றுவ்

---

* கடிகை—முகூர்த்தம விதிப்பவன்

† கண்ணார்—புரோகிதர்.

‡ கடிகையர்—மங்கலபாடகர்.

தட்டன் எழுந்து முரசறைகின்றவனுக்கு இறைவன் அருளிய மொழியைச் சாற்றென்று ஒருவற்கு மொழிந்தான். பறையன் முரசத்தை யானையின்மேலேற்றிப் பசியும் நோயும்பகையும் அழிக; இன்றுளீர் உலகத்தோடு என்று முள்ளீராய் வாழ்வீர்; இறைவன் நாட்டிலே பதிற்றாண்டிற்குக் கடமை கொள்ளான்; கண்கெட்டவர் முதலியோர்க்கு மனைமுதலியவற்றைக் கொடுப்பான் என்று சாற்றினான்.

பூமகளிலம்பகம்.

முற்றிற்று.

---

# பன்னிரண்டாவது,

# இலக்கணையாரிலம்பகம்.

சீவகன் தான் மணஞ்செய்த மகளிரை அழைத்துவருக என்று அருளிச்செய்ய, அம்மாதரார், அச்சீவகன் அவரைப்பிரிந்த அன்றுசூடிய மாலையராய் அன்று பூசிய சாந்தினராய்வாடிய மேனியராய்ப் பெறுதற்கரிய நிறைகெடாதவராய்ப் போந்து வெண்டுமை பறவையும் அஞ்சுமகாவலுடைய சிவிகையினின்று மிழிந்து மதியையும பரிதியையும கண்டறியாத மாடத்தினுள்ளேபுகுந்து சீவகனடிமேலேவிழுந்தார வீழ்ந்துதமதுதுயரம தீர்ந்துகளித்தார. பெரியகடல் போன்ற நூலை முற்றக்கற்று யானையும சிவிகையு பெற்றானாகிய கணி, விதியாலே தானேமுடிதலே யன்றி இக்கலியாணத்தை ஓரையானும முடித்தற்குப்பொருந்திய நாட்களை அரசனுக்குவிரித்துரைத்தான். மன்னவனன்பினையெய்துகொண்ட இலக்கணையை மணஞ்செய்தற்குக் கணி, நாள் கூறவே, முரசறைவார யானைமேல் முரசையேற்றி அறைந்தார அறைந்து, இந்நெடுநகர் வாழ்க; அரசன் திருவாமொழியாகிய இனியவற்றை யாவரும் *கேண்மின் கேண்மின்; கேண்மின்; நுமது இடைவருந்தினு மன்னவன மணவினைநாளாகிய இவ்வேழுநாளும் . ணிகளை அணிமின்; சாந்தம பூசுமின; பட்டாடை டுமின்; பாலடிசிலேயுண்மின்; வாழையையும க கையும் நடுமின்; மாலைகளை நாற்றுமின்; அரங்குதே றும் ஆடலையும பாடலையும் இயற்றுமின்; கொடிகளை எடுமின்; இவ்வேழு நாளும சினக்கவி

* கேண்மின்— விரை சொல்லடுக்காதலின, மூன யிற்று.

ற அகற்றுமின்; என்று சாற்றினர். சா
றலும் நகா அலங்கரிக்கப்பட்டு யாழ் குழல் தண்
மை முழவு என்னுமிவை அதிர்ந்தன. நகரார்,
னலையும் நெய்யையும் பெய்துபாலடிசில் ஊட்டு
ார்; உண்டோர்சுமக்குமபடி துகிலையுமகலத்தையும
ங்குவார்; பலாப்பழம் வாழைப்பழம் மாம்பழம்
வற்றாற்செய்த தேறலைக்கருப்புச்சாறறோடு கலந்து
மைத்து அதனையும் இளநீரையும் நிறைப்பார்; க
ப்பூர முதலாகப் பாக்கையும * வெற்றிலையையும
ாந்தா கொள்ளைகொண்டு சுமக்கலாமபடித்தனறாக
ாநில முண்ணுமபடி யிட்டுவாா. அரசர்க்குரிய
ங்கையா ஆசனமிடக காணமும்மணியும் பொன்னு
ம முத்தமும குவிக்கப்பட்டன; எட்டு மங்கலமும
ிலங்கின; விளக்கெழுந்தன; தீபமுகைகலந்தன:
மகளிர் ஆயிரத்தெண்மர் கவரிவீசினர்.

கணி கூறிய முகூர்த்தத்திலே மன்னன் ஆசன
த்திலே ஏறிய அளவிலே, மஞ்சிகன், மங்கலமாகிய
அறுகும் அரிசியும இட்டு மந்திரித்துப் பொற்கருவி
யைச் சேர்த்தலும வாழ்த்தினர். அப்பொழுது ப
தரார், பொனனாகலிலே திருமயிரைக் கொண்டு
மண்டபத்தினின்றிழிந்து போய் இலக்கணைகுமயிர்

* "வெற்றிலையையுண்ணவென்றன மரபன்மையி
ன, சுண்டு மாநிலமுண்ணவெனவே மணனுமணனும்படி
யென்னும்பொருட்டாம். அட்குபுலால் பாகுபாளிசமு முண்
ணன்" என்பது பனமைபறறிக கூறிற்றெனவே வேண்டிய
பாகு பசிப் பிணிதீர நுகரும பொருளனமையின.

வினைக் கல்யாணத்தைச் செய்தார். செய்து குடங்களிலே நீரைமுகந்து யானையிலே ஏற்றிக் குடைநிழலிலே கொண்டுவந்து ஆசனத்திலிருந்த அரசனைக் கிட்டி அறுகாலே நெய்யைத் தோய்த்து இமவான் போலே நீ நிலத்திலே நிலைபெற்று நின்னு நிழலிலே உலகமவைக; சக்கரவாளச் சக்கிரவர்த்தியாய் இலக்கணையோடு மன்னுவாயாக என்று வாழ்த்தி நெய்யைச் சோதித்துக் கங்கைமுதலிய தீர்த்த நீர் சந்திரகாந்தக்கல் நீர் என்னு நீர்களாலே இயம இயம்ப ஆட்டினார். அரசன் ஆடிக்கோலங்கொண்டான். பின்பு மகளிர், இலக்கணையை முறையாலே மஞ்சனமாட்டிக்கட்டமலலவன் எழுதது வடிவு தோன்றக் காட்டிய மல்லிகை மாலையைச்சூட்டிப் புனைந்து அவளைக் கொண்டு சென்றார். சீவகன் அவளை மணஞ்செய்து சேக்கையிலிருந்த அளவிலே, யாமும் நன்றுணர்ந்த தையலார், அவ்விருவருக்கும் காமவேட்கையுண்டாகும்படி பாக்கையும் வெற்றிலையையும் இனிய முகவாசத்தையும் ஏந்தினார். அவ்விருவரும னுகர்ந்திருந்தார்.

சிவலோகம பரமபதம என்கின்ற உலகிலுள்ள அரனும அரியும் போல விளையாடும மார்பன், இலக்கணையோடு கூடிவதொரு மயிர்களையுமசடங்கைச் செய்வதற்கு நூலகளையோதி முடிவு கண்டவர், நகரை எட்டுமுறுமென்றோதி அதனுள்ளே பொற்பொடியாலே யானையும திருமகளுமாகக் கோலம் செய்தார். மகளிர், உழுந்தையும பயறையும, உபபையும, அரிசியையும நீரையும கொழுந்துபடக்கூப்பி ஆயிரமரக்காலிலே நெல்லை நிறைத்து அவற்றிலே அழ

ந்த அணிந்துவைத்தார். அரிவையர் எட்டு மங்கலத்
தையும் ஏந்தித் தென்கிழக்கே நின்றார். வெள்ளியவ
டவையுடைய மாலையணிந்த மங்கையரிருவர், வாளையு
நவி வடகிழக்கே நின்றார். மகளிரிருவர் உழுத்தகலை
ந்தித்தெய்வத்தை நோக்கித்தொழுது தென்மேற்கே
நின்றார். * தோரையுமமலருமநீருமஅறுகுமவடமே
ற்றிசையிலே இருந்தன. திருமகள் நோக்கும்பொற்
றருவி பருகின்மேலே வடதிசைக்கணணே இருந்தன.
இரவி, திங்களோடுசேர்ந்த அணையிலே இருந்ததனை
மபோலே மன்னர்பெருமானும இலக்கணையொடு இ
ருந்தான். வனத்திலுள்ள ஒரு இருப்பையொருவன சடங்
கதமையாலே அமமுனிவன் முனனமே நாவிதனு
மினன். அவன்வழியிலே பிள்ளையாயத்தோன்றிப
லநூலையுமகேட்டு அலஙகார நூலையுமகற்று அரச
னிலே வரிசையோடு பாளையுமபெறறு அழகுடைய
னையத் தன்தொழில மிகுதியாலே நாவிதர்க்கு ஏறு
போன்றவனும் வித்தகனுமுள்ளவன் வாய்பூசி வேந்
தனை வணங்கி உன்பகைவர் நடுங்குமபடி பாம்புபா
ர்க்கலபோலே அபபகைவரைப்பார்த்து † வச்சிரவ
ணன் நின்னைக் காப்பன் என்று கூறி ஊழிகாலம் வாழ்க
என்று அறுகையும் அரிசியையும கைக்கொண்டு மன
னனது அடியிலும முடியிலும தெளித்துப்பின்பு அவ
னை இலக்கணையது முடியிலேதெளித்தான. பின்பு
நாவிதன் பொன்னாற்செய்த மஙகலமான கத்தியை
எடுத்து அரசனது வலக்கவுளிலே உறுத்திப்பின்பு
இலக்கணையைக்குறித்து நோக்காதே சிறிது நோக்கி

* தோரை—மூங்கிலரிசி.

† செல்வமுண்டாதற்கு வச்சிரவணனைக் கூறினன்.

அவளது இடக்கவுளிலே உறுத்தினன். அங்ஙனம்
உறுத்தியபொறக்கரியைப் போக்கி, இரும்பும் எல்
லும் ஒரு நீர்மையாகக் காய்ந்த மயிராக்கத்தியை, மதி
ப்பாகம்போன்ற கல்லிலே தீட்டிப் பூவை அக்கலி
லே நிறுத்தித்தனதுதுடையிலே வைத்துப் பின்பு
சீலையிலே துடைத்துக் கையிலே தூய்தாகப் புரட்டித்
தீண்டியது தெரியாதபடி வேந்தன் முகத்தைத் தீ
ண்டி ஏறவொதுக்கியும் இழியவொதுக்கியும் நடுவு தி
றந்தும் அழகு செய்து மயிராக்கத்தியை நீக்கிக் கத்தி
ரிகையாற்செய்யுந்தொழிலையும் செய்து வாழ்த்தி
ச்சென்றான். வேந்தர் குடத்திலே நீரை ஏந்தச் சீவ
கனும் இலக்கணையும்நீராடி மலர்சூடிக்கடிமணப்பள்
ளியிலே அவ்விலக்கணையோடிருந்தான். இருக்கும்
பொழுது அவள்ஊடினமையாலே சீவகன வணங்கி
இரக்க, அவள் சிறிது இரங்கினமைகண்டு, இடையில்
வந்த புள்ளைநோக்கி, நங்கையது ஊடலைத்தீர்க்க
இனிநமக்கு எளிது; நீர்தீர்ப்பீராக என்று சொன்
னான். கூட்டிலிருந்த பூவையும் கிளியும் மன்ன
ன்துணைபுறுதலையுணர்ந்து கூட்டினவாயிலே முகத்
தைவைத்துப்பார்த்து நம் சேவல் நம்மை ஊடலை
தீர்க்குமிடத்து இங்ஙனம் வணங்கி இரந்தால இது
தகாதென்று யாம மனம்உருகி இறப்போம். இங்ங
னம் மன்னன் வேண்டவும் அருளாத இவளது
மனம் கல்லோ! இரும்போ! என்றன. என்று
நங்காய்! இவன் சிறிதும் தவறிலன். நீ அருளா
யென்று கூறின. அங்ஙனம் கூறின அளவிலேபூவை
யார் தமக்கு மேல்வரும் தீங்கையெண்ணிக்கிளியை
நோக்கிப்பேதாய்! இலக்கணைகொடுக்கும் சோற

றையுண்டு நாம் கூட்டிலே வருந்தி இருக்கின்றோம். இத்தன்மையேமாகிய யாம் புத்திசொல்லின நங்கை நமக்கு மூன்றுநாள் சோற்றைக்கொடுத்தாள். அதனால் * தத்தையீரே! இனி நுமது வாயைப் பொத்துமின் என்றார். கிளி, அப்பூவை மொழியைக் கேட்டு நன்னன வேண்டுதலைக்கண்டு யான் உயிர்கொண்டிரேன். நான்றுகொண்டு சாவேனென்று நூலாலே கழுத்தைப் பிணித்தது. இலக்கணை அதைக்கண்டு நகைச்சீவகனை யாம் பெற்றேனென்று அவனைப்புல்லினள். மன்னன் நகர்வலம் செய்து இறைவனை வணங்குதற்கொளிப்புறப்பட்டான்.

முன்பு சுநந்தை மகனென்று இகழக் கருதப்பட்டவன், இப்பொழுது கவரிவீசத் தங்கு முறைக முரசமார்ப்ப அரசர் நிழ யானையிலேறி வீதியைச் சார்ந்தான். அப்பொழுது மாந்தரும் மாதரும் அவனைப்பார்த்துத் துதித்து வாழ்த்தினார். இவன் இந்நகரத்தின் சுடுகாட்டிலே பிறந்தபடியையும் வணிகனில்லத்திலே வளர்ந்தபடியையும் இப்பொழுது அரசர் வணங்கப்போந்த படியையும் பார்த்தால் நல்லறிவுடையோர் தவம் செய்யாதிருப்பது என்னை? ஒருவர்க்கு நல்வினையில்லையேல் அவன் கடலையும் மலைகளையும் நீந்திவருந்தினாலும் அவர்க்குப் பொருள் சேர்தலில்லை. ஒருமுழத்தூரமும் நடக்க வலியில்லாராயினும் அவர் நல்வினையுடையாராயின் பொருள் தானே வழிகேட்டு அவரிருக்குமிடத்திலே வந்து சேரும். ஆதலால், அதற்கேதுவாகிய தவம் வாழ்க என்றார். தவமிருந்தால் நஞ்சைக்குடித்தாலும் நீங்கி

* தத்தையீரேயென்றது இழிவு சிறப்பு.

லை. தவமில்லையாயின் அருஞ்சிறையொளித்தாலுங்காப்பில்லை. தவமுடையார் யானைக்கொம்பிலே அகப்பட்டாலும் பிழைப்பர். ஆதலால் தவமுடையார்க்குச்சிறிது தீவினையால் துன்பம்வந்த விடங்களில் கவலையவா, அறக்கடவுளோ ஆதலின் தவத்தையுடையார் துன்பம் வந்தவிடத்து அஞ்சாரென்று சிலர் கூறினர்.

தன்னை யாக்கிய சச்சந்தனைக்கொன்றபின்பும் கட்டியங்காரன் அரசாண்டிருந்தமையையும், அவன் தாமரை விரிமலர்த்து அதனுள்ளே நின்றும் அவனிறந்தமையையுங்கருதி அக்கட்டியங்காரன் தவத்தை வியந்தும், அவன் சீவகனைச் சிறைசெய்து யானைக்கு இடனண்ணியனைத்த தப்பிப் பிழைத்தமையால், அச்சீவகன் நல்வினையை வியந்தும் தவமுடையார்க்கு மிடையே தீவினைவந்தால் நுகரவே வேண்டுமென்று அங்ஙனம் கூறினர்.

சீவகன், நகரவலமாகப்போய்ச்சோலையிலே படையை நிறுத்திக்கோயிலைச்சேர்ந்தான். அப்பொழுது கதவுகள் திறந்தன. அரசன்வருங்காலத்துப் பர் பூட்டாமற் கதவடைத்து அவற்றுக்குத் திறத்தலாலே அடங்கியிருந்தெழுந்த அதிர்ப்புகையால் திசைகளெல்லாமதிர்ந்தன. மன்னன் கோயிலைவலஞ்செய்து இறைவனை நோக்கிப்பிறவாத நின்னைப்பெற்றேனாதலால் இதற்குமுன் பிறந்தயான் இனிப்பிறவேன் என்று தொழுது துதிக்கின்றான்.

ருமறு மாாபினை திலகமுக்குடையினை
ருமறை தாங்கிய வநதணர் தாதையை
ருமறை தாஙகிய வநதணா தாதைநின
னரிபுரை மரைமலரினையடி தொழுதும். * க௨௪

"யாமெனற உளப்பாடு ஒழிநதமககளையுங் கருதிற
று."

லகுணர் கடவுளை யுருகெழு திறலினை
லவிரி கதிரணி நிகரறு நெறியினை
லவிரி கதிரணி நிகரறு நெறியைநின்
னலர் கெழுமரை மலரடியினை தொழுதும். க௨௫

மறுவற வுணாநதனை மலமறு திகிரியை
பொறி வரம்பாகிய புண்ணிய முதல்வனை
பொறி வரம்பாகிய புணணியமுதல்வநின்
னரைவிரி மரைமலா நகுமடிதொழுதும். க௨௬

என்று இவ்வாறு துதித்து இறைவற்கு விளக்
ாக என்று நூறு ஊரையும், பூசனைக்கு நானகு
டிபொனனையும, நூறு களிற்றையும, நூறுதே
யும, வாடாதமாலை மணிமாலை பொன்மாலை முத்
ாலை சந்தனமாலை பவழமாலையென்னுமிவற்றையு
கொடுத்துத்தன் கோயிலிலேபுகுந்து சிங்காசனத்
லிற்றிருந்து † கந்துக்கடனுக்குஅரசுரிமையையு

* "உமமொடுவரூஉங்கடதற" ஈண்டு நிகழகாலமு
கததல் காலமயக்கு. †தொலகாபபியம், சொலலதி
ம, வினையியல். ரு."

† "அநதணனாக காசுவரைவின்றே" என்பதனால் அந
ரொழிந்த இருவர்க்கும முடியுடைவேநதராதறறனமை
ாமையின, ஈண்டு அரசளிததது குறுநில மன்னாக்குரிய
சாயிறறு."

கின்றா. வேந்தன் தேவியார்க்கு ஐந்தரைக் கோடி பான் விடுதலில்லாத நாடுகளைச் சீவிதமாக விட்டுச ரந்துக்கும அடிசிலுக்கும் நாடோறும ஆயிரம் பொ னுக்கு இறையிலியாக்கினான். இறைவன் திருத்த லாலே யானை திரிந்த காடுகளெல்லாம கணவரோடு கூடிய மகளிர் வாழும் நகராயின. பேய்த்தேர் பாய்ந்த நில மெலலாம பானல் பூத்து அன்னம் பறந்தன. இறைவன் செயகின்ற அறத்தின் மிகுதியாலே திங் கள் மும்மாரி பெய்து உலகம விளைவு மிக்கது. இடைப்பள்ளியினின்றும ஒழுகிய நெய்யாலே எவ்வி டமும் ஏரிகளாகுமபடி பசுக்கூட்டம் மிகுந்தன. அர சன் குடை மாகத்தைத் தீண்டித் தண்ணளியாலே உலகை நிழற்றலால், இவ்வுலகுக்கு உத்தர குருவும் பொன்னுலகும் நாகலோகமும் நாணித் தமது பெரு மையைக் கைவிட்டன. மைந்தரும் மங்கையரும் புகர்ந்து முறையே முதிர்ந்து மக்கட்கு விதித்த ஆயு ளைப பெறுதலாலே அக்காலம் திரேதாயுகம் போல ஆயிற்று. வேந்தனது சமயத்தைப பெருமையாலே அறுசமய கலங்களைச் சமந்து அசைய இடம பெறுதே ஒரு நிலையிலே நிற்குமபடி அவனது வெற்றியும் பரந்தது.

பல்லவதேயத்திற் சந்திராபம என்னும நக ரிற் சண்பகச் சோலையில இறைமகனான உலோக பாலன் வீற்றிருந்துகாண நடனஞ்செய்து ஆங் குச்சென்ற சீவகனைக் கண்டு காதலுற்ற * தேசிகப

---

* தேசிகப்பாவை காதல்கொண்டதைப்பதுமையாரிய லம்பகத்திற் காண்க

பாவை, சீவகன் பதுமையாரோடு அவளையும் கூ டிக்கொண்டு வாழ்ந்திருந்தவன் பின்பு அவ்வரசன் மைத்துக்கோடல் மரபன்மையின் பின்பு அவளை கக் கருதி இருந்ததையோராராளாய் அவன் தன்னிட த்து அன்பிலனாய்த் தன்னைமறந்தானென்று கருதி த்தானேவந்தாள். வந்தவள், சீவகன், * அநங்கமா லையை அலங்கரித்தானதலாலும் அவள் அவனைகக் தலிததாளாதலாலும் அச்சீவகன், அவ்வநங்கமாலை யை விரும்பியிருப்பானென்று கருதி அவ்வோழி சீவ கனுக்கு ஓலைகொண்டு வந்ததாகச் சேடியார் சூழ கோயில் வாயிலிலே வந்தாள்.

வாயிலோன் அவளைக்கண்டு போய் அரசனை வணங்கி அடிகேள்! தாமரை முகத்தாளாகிய ஒரு சோதை வந்து எம்மரசனைக் காணவேனென்று தலை வாயிலிலே நிற்கின்றாள் என்று கூறினான். அரசன், நாம அழைப்பதற்குமுன்னே தேசிகபாவைதானே வந்தாளென்றுணர்ந்து அவளை வரவிடுக என் றான். தேசிகபாவை சென்று கோமானது அடி யை வணங்கி ஓலையை நீட்ட இறைவன் வாங்கி அடி கள் அநங்கமாலை வணக்கத்தை உவந்தருள்க. சட டியங்காரன் என்னைச்சிறை வைத்தபின்பு யான தன் பெயரையே சொல்லி அரற்றிக்கொண்டிருந்தமை யால அவன்போகவிட யான் சேரியிற் போய்த் தன் னுருவை எழுதித்தொழுதிருக்கவும என்கண் துஞ்சா வாய் நீரையே காலும்; வளைகழலாநிற்கும்; இவ் வனம வருந்துதற்கு யான் நின்குடைநிழலில் நீங் கிய அயலிடத்தேனோ அல்லேனாதலின், வேந்தே

* அநங்கமாலையைச்சீவகன அலங்கரித்ததைக் காந்தரு வதத்தையாரிலம் பகத்திற்காண்க.

இவ்வோலை கொண்டு வருகின்ற என்றோழியாகிய வாமலேகை வருந்தாமலே கூறி இன்னே விடுத்தருள்க என்று படித்தான். படித்தது தேசிகப்பாவை, அநங்கமாலையின் றோழி வாமலேகையாக நடித்துத் தருகு மகிழ்ந்து அவன்பாட்டைக்கேட்டு அவனைப் புகழினாள்; அவள் அப்பொழுது அநங்கமாலையின் அடித்தியாகிய என்னை நீ அருளுதற்குக்காரணமென்னை என்று அசதியாடிக்கூறினாள். வேந்தன், செவத்தாற்கொண்ட களிமயக்காலே தெளியானென்றுகொண்டு நின்பேதைமையாலே இங்ஙனங்கூறினைய இகழ்ப்படுமேவண்டா; நின்னையானமறப்பேனோ என்றான்; என்று அவளாடலைப்பார்த்தும் பாடலைக்கேட்டும் அவளொடுநுகர்ந்தும் களித்திருந்தான்.

இலக்கணையாரிலம்பகம்,

முற்றிற்று

---

(விசயமாதேவியார்துறவு)

னை அவ்வறத்திற்குரியனாய்நின்று நடத்தலாலே மகிழ்ந்தாள்.

சுநந்தை வந்து விசயையைக் கையாலேதொழுதாள். அவ்விசயை நம்பியைப்பெற்றீர் வாழியென்று அவளைப்புல்லினாள். சீவகன்தேவியர் எண்மரும் விசயைபாதத்தை வணங்க அவள் அவரையும் புல்லி யுலகாளுநர் * சிறுவரைப்பெற்று இறைவனைத் தெளியின் நீர் யான்கண்ட கனவில் முடிமேலே பட்டபூமாலை நீராய்த்தோன்றினீர், இவ்வாறுவந்தீர் எவ்விடத்தும் என்னைப்பிரியாதுறைவீர் என்றுரைத்துச் சீவகனை வருகவென்றாள். மன்னன்வந்து

* சிறுவரில் நால்வர் உலகாளுதற்குரியரன்றேனுந் தங்குலத் தொழிற்கேற்ப உலகாளுதற்குரியரென்பதுபற்றிப் பலராவுஞ் சிறுவரென்றாள் † "மெய்தெரிவகையி னெண்வகையுணவின்" எனவும், ‡ "கண்ணியுந்தாருமெண்ணினராண்டே" எனவும், ஆசிரியர் கூறினமையிற் றங்குலத்துக்குரிய உழுது பயன்கோடலும் அரசன் கொடுத்த சிறப்புக்களுமன்றித் தமக்குத்தலைவராதலின் அரசாட்சிமுதலியன கொடுப்ப அவர்தாமுந் தம் வழித்தோன்றினோரும் ஆள்வரென்றுணர்க. § உலகமென்னுஞ்சொல் மண்ணுலகமுழுதுமேயன்றித் தனக்குற்பட்ட நிலங்களையு முணர்த்துமென்பது ¶ "மாயோன் மேய காடுறையுலகமும்" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. உலகாளுதற்குரியரல்லாத சிறுவர் நால்வரென்றது, குணமாலையார் க்ஷேமசரியார் விமலையார் சுரமஞ்சரியார் என்றிவர் புதல்வரை. இந்நால்வரும் வணிகமகளிராதலால்,

† தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௭௮

‡ ,, ,, ,, ௭௯

¶ ,, அகத்திணையியல் ௫

* தம்பெருமானையாகத்திலே முதற்பூவைத் தூவி பயினைப்பு தனமுடியைத் தீண்டுவித்து இரண்டு விரற்கிடை நீளம் அகலவிட்ட தவிசினமேலே இருந்தாள் தேவி, சிவகசாமி' நின்தந்தைக்குற்ற நீங்கைப் பிரைகூற அறிந்தாயாயினும் யானகூறவும் கேட்பாயென்று நடந்தவாறு சொல்லி இனி யான் துறத்தற்குப் போவேனென்றாள். சீவகன கேட்டு மயங்கி விழுந்து தெளிந்து எழுந்து அடிகேள்முனபுஎனக்கு அருளிச்செய்ததுயாது அதனை இப்பொழுது அருளிச் செய்யுமென்றான்.

தேவி, யாமவாழுதுமெனனும அவாவினுள் ளே அழுந்துகின்றோம்; அங்ஙனமஅழுந்துகின்றநாம் அறுதியாகப் பெறறவாழுநாள் இவ்வளவு எனபதைச் சிறிது மறிந்திலேம; நமன, நுமவாழ்வு இத்தன் மைததென்று கூறி உயிரையுண்ணும பொழுது ஐயோ இபபிறபபினைத்தப்புதற்குத் தவஞ் செய்திலேமே என்று வருந்துவதலலது அதனைச் செய்தற்குக்கழிந்தநாளைமீட்க வலலாருளரோ; செய்யத்தக்குந்த காலத்தே தவஞ்செய்யாதே அறத்தின் மேலஅனபு செய்யின அதுவடுவுடைத்து; காறறுலேசிதறிய முகிற்கூறாம போலே, சுறறம நீவினையால அடிககபபட்டு வெவ்வேறுபப் போவதல்லது சேர்ந்து போயுறைதலிலலை; ஆதலால மகனே! நீ யும எமமிடத்து அன்பு ஒழிவாயாக என்றுரைத்தாள். என்றுரைத்துப பொதுவாயச்சில அறவுரை சொல்லுகின்றாள்.

*தமபெருமான் என்றது விசயையை. னங்காஙெ ற்றுமகவே உணாததிற்று. ஆராயநதுணர்க.

(விசயமாதேவியார்துறவு)

மகளிரைச்சேர்ந்து இளமையாகிய களையுண டொழிவதற்குமுன்பு இளமைப் பருவத்திலே தவமுந்தானமுஞ் செய்மின் உயிரைச் சோறாக உணர்வை நெய்யாகக்கூட்டி ஆற்றலைத்துவையாகக்குடித்து அவ்வுயிரை யுண்ணுங்கூற்றம், உடம்பைக் குலைப்பதற்கு முன்னே இடனொடு நற்குணத்தைப்பெறுமின். உயிராகிய அச்சையுடைய உடம்பாகிய சகடத்தைச் செலுத்துகின்ற பாகீர்! அச்சகடத்திற்குப் புதிதோர்உயிராகிய அச்சைச்செருகி அச்சகடத்தைச் செலுத்த ஒண்ணாதாதலால், அச்சகடத்திற்கு அழிவியிட்ட காலமுள்ளளவும் அதனைச் செலுத்திப் பின்னிருந்தவரோ பலர். அங்ஙனமன்றி அதற்கு அளந்திட்ட காலத்திற்கு நடுவேயும் தீவினையாலுண்டாய துன்பமாகிய புனலையுடைய ஆற்றிலே அச்சகடமழுந்தாநிற்கும்; அங்ஙனமழுந்தி உயிராகிய அச்சுமுறிவதற்கு முன்னே அச்சகடத்தாற் பெறுதற்குரிய சீலத்தைப்பெறுமின். பிறந்தமக்களெல்லாம் அவர்ப்பெரியராய புகழை வேண்டாராய் ஒருவினையும நயாராய அறம் இத்தன்மைத்தென்று சிறிதும் அறியாராயின் அந்த அவர் பயனில்பொருளாம். ஆதலால் அதனைக் கைவிடுமின். இனிய அடிசிலைநாடோறும் உண்டவர் தீவினையாலே இவ்வோட்டிலே அடகைஇடுமினென்று கூறிஇரந்துண்பாரை நாமகண்டுவைத்தும் செல்வத்தை நினையன்மின்; நமராங்காள்! தவத்தையே நினைமின். பொற்கலத்தில்பாலையுண்ணவும்மனமவிரும்பாத அரசன்தேவி, ஐயோ! தீவினையாலே வறிஞராயப பசியாலே வருந்திப் பிச்சையிடுமின் என்று கூறிநிற்பாளை யாமகண்டுவைத்

தாம செல்வத்தை நச்சனமின் நமரங்காள்! அறத்தை யே நச்சுமின்; துகிலை உடையின் வருந்துமிடையிலே சிறுகூறையை ஒருபாகத்திலுடுத்து ஒரு பாகத்தை ஒருகையாலே மறைத்து மேலே நோக்கி அடைகையுருவி அதனை இடுவதற்கு ஒருமட்கலமுமின்மையால ஐயோ! வினையே! என்செய்தாமென்று கூறி தினந்தோறும் அழுவாரை நாம கண்டுவைத்தும செல்வத்தை நணுகலமின்; நமரங்காள்! தவத்தை யே நணுகுமின். காரிகையார் மயக்கக்காமன்போலே நடந்தோர் பின்பு கபம்திரண்டு இருமுதலாலே அதனை உமிழ்ந்து தண்டையூன்றி நிற்றற்குக் காரணமாகிய இளமை நிலையாது என்று கூறினள்.

சுநந்தை, சீவகனைநோக்கி ஐயனே! இறைவி கருதியதுநன்றாயினுமாக, தீதாயினுமாக, அதனை யானுமதுணிந்தேனென்று கூறினாள். கந்துக்கடன் முன்னரே இறந்திருத்தலாற் சீவகன சுநந்தையைத் துறவிற் செல்லாமல் விலக்குதல் அறனன்றென்று கருதி வருந்தி இருந்தான. தாய்மாரிருவரும தாம முன்பு கொண்டிருந்த நோன்பிற் சிறிதாகிய துறவையுட கொண்டு சிவிகையிலேறினா. துறப்பதற்கு உடன்பட்டு ஆயிரம் மகளிர ஏறிய ஆயிரம சிவிகைகளும் சூழ, மகரார் அழுதுசெல்ல, இறைவி, பிறப்பாகிய இருளைப்போக்கி வீடாகிய ஒளியைப பரப்புகின்ற *பமமை எனபாள் இருக்கின்ற பள்ளியைச் சேர்ந்து சிவிகையினின்றிழிந்து அப்பம்மையைத் தொழுது அடிகேள்! எம்மை எல்லாம சேரப் பிறவிக்

* பம்மை—பத்மை.

(விசயமாதேவியார் துறவு.)

கடலினின்றும் கரையேற்றுவீராக என்றாள். பம்மை, தையலாய்! அருந்தவம் முளரியிலழல் போலக் கொடியதாதலால், நினக்கு மேற்கோடல் அரிது ஆகலால் அதனைவிட்டு, ஐம்பொறியும் வென்று அவா அற்ற இடத்தே தானமாகிய விதையை விதைத்துச் சீலமாகிய நீரை எப்பொழுதும் பெய்யின், அஃது உத்தரகுருவிலே முளைத்துப் புகையின்றிப் பின்பு தேவரின்பத்தை விளைத்துவிடும் என்று சொன்னாள். இறைவி அடிகள்! அம்மொழியைப் பின்பு கேட்குதும். இப்பொழுது துறவைத் தந்தருளுக என்று கூப்பப் பம்மை நன்றென்றருளினமையின், ஆங்குள்ள தவமகளிர் துறவுக்குச் செய்பவனவற்றைச் செய்தார்; நகர் அலங்கரிக்கப்பட்டது. பரமன் கூறிய ஆகமப் பொருளைச் சிந்தித்துத் துறக்கக் கருதித் தவிசிலே கிழக்கு நோக்கி யிருந்த தாயரிருவரும், ஒழிந்த மகளிரும், மயிரை உகுத்தற்கிருந்த மயிற் கூட்டத்தை யொத்தார். ஆரியாங்கனைகள் அவர் மயிரைப் பறிக்க, கன்னியராயிரவர் அம்மயிர், பள்ளியில் விழாமற் பூந்தட்டிலேந்திக் கொண்டு போயிட்டக, அநங்கைமார் மயிரையுகுத்த மயில்போலத் தோன்றினார். அங்ஙனம் இறைவனாகமத்தைப் பொருந்தினவர், பொற்குடத்தை இரத்தினங்களாலே நிரப்பினாற்போலே எற்புடம்பை நற்குணங்களாலே நிறைத்து, ஆகமத்தின் பொருளைக் கல்வி மடுத்துக் கொண்டு, மனத்தை அடக்கிப் பலரும் புகழினும் இகழினும் விருப்பும் வெறுப்புமின்றித் தமக்கு மயக்கமின்மையின் விளக்கெனத் தோன்றினார்.

வேகதன், நால்வகைப் படையும் பூவைச் சுமந்து சூழத் தான சில மலரையேந்திச் சென்று சீர் பெறுக என்று வாழ்த்தி இறைவி பாதத்தில் முடியைச் சேர்த்திப் பாலப் பருவத்தில் நும்மைக்காணப் பெறாது நல்வினை செய்யாதேன் இனிக் கண்ணாலே எப்பொழுதுங் காணும்படி அடிகள் இந்நகரிலே யுறைக என்று கூறினான். விசயை அவற்கு மறுமொழி கூறாதிருக்கப் பம்மை அத்தன்மையை நோக்கி அரசனையும் நோக்கிக் காவல! நீயும் எம்மாற் காதலிக்கப்படுவாயல்லை, யாங்களும் நினக்குச் சுற்றமல்லேம் என்றுகாண் நங்கை இருக்கின்றாள் என்று சொன்னாள். மன்னன் அது கேட்டுத் தேவிமாருந் தானும் அழுதான். அழுது அடிகாள்! யான் தேவிக்குச் சுற்றமல்லேனேனும் தேவி, இறைவறத்தைத் துணிந்து நிற்கின்ற நிலைமையைப் பார்க்க விருப்பமுடையேன் என்றுரைக்கத் தவமகளிரெல்லாம் மனமுருகி இனி மறுமொழி கொடுத்தலாற் குற்றமின்று நம்பியோடு பேசுமின் என்று தேவிக்குச் சொன்னார். தேவி, மகனைப் பார்த்து நீ விரும்பியதை யாமும் விரும்பினேம் என்று உரையை வழியனுப்பிக் கூறினாள். அரசன் அதற்கு மனமுவந்து நந்தையை நோக்கிச் சுநந்தாய்! அடிகள் என்னிடத்து ஒன்றும் வருத்தமுற்றாரல்லர் ஆதலால் அவரோ துறக்க, நீ என்னை வருந்தி வளர்த்தமையின் நீயே எனக்குத் தாய் இதற்கு முன்னர் நீ எனக்கு யாதும் துயர் செய்ததில்லையாயினும் துறந்தாயாதலின், எனக்குச் சுடுதுயர் செய்தாய். நீ மிகவும் கொடியை கொடியை என்று துன்புற

(விசயமாதேவியார் துறவு)

றன். சுநந்தை, கணவனையிழந்து புதல்வனரசை புவந்திருந்தாளென்று உலகத்திலே நிகழ்ந்தபழிநிக ழ்ந்ததேபோக; இறைவி இன்று துறப்ப யான் இன் னும் நின்னரசை உவந்திருப்பேனாயின், எனக்கு இப்பாற்பிறக்கும்பழி என்று தான போவது; போ காமையை நீயே அறிதி என்று மன்னன மனங்குளி ரக் கூறி இனிக்கோயில்புகுக உலகத்தைக் காப்பா யெனறாள். இறைவியாரும நந்தட்டனை நோக்கி நும மையாம் துறந்திலம் நீ நொந்து வெறுக்கவேண்டா என்று சொனனார். அவனும கேட்டு மகிழ்ந்தான். அரசன, துறந்த இருநங்கைமாருடைய பாதம், மாந்து சென்னியிற் சூடிய பூமிசைப்பூ வென வாழ ந்திப் பால்போல் மிகவுந் தூயகந்தியாகிய கொம்பு அவாகளைப் புரக்கும்படி சோத்திப் பள்ளியினின றும போய்க் கோயிலிலே சேர்ந்தான. தேவியர்கு லங்கட்கேற்ப இவவாறு செலலற்குரிய ரென்று முன போதற்கும் பின்போதற்கும் * அரசனால் வரையப்பட்ட சிவிகைகளிலே தேவிமாரெணமரும மாமிமார் விடுப்ப ஏறிக் குடைபின்செல்லவீரர் காப் பக கோயிலுட் சென்றார். இறைவி ஆசையை நீக்கி

* "ஏற்றற கண்ணு நிறுத்தற் கண்ணு—முரிமைகொ டுத்த கிழவோன் பாங்கிற்—பெருமையிற்றிரியா வன்பின கண்ணும" என்றார் கற்பியலின்கண். தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பியல், சு.

(நீர்விளையாட்டணி)

ாத தண்டாகச் சிதறியும பொருதார். இரண்டு
ரடையும அஙஙனம கலநத பினனாத் தத்தை, சிவி
றியை யேநதி முன்னின்ற மகளிர் மேலே ஆயிரந்
ாரையைச செல்லவிட்டாள். தையலாரெல்லாரு
அந்தாரையைத்தரிக்கமாட்டாராய நீரிலேமூழ்கி
அதனுள்ளே சிறிது பொழுதும் உறைதலாற்றாராய்
ரகத்துசசெய்த பல நிலங்களையுடைய மாடத்தி
லேறினா. பின்பு சிலமங்கையர் வந்தெதிர்க்கத்
தத்தை, சிவிறியை நீக்கிக கண்ணி கொண்டெறிந்
தும் சுண்ணததைதயும சாந்தையும தூவியும் மாலை
யை யோசசியும் அவரைத் தோற்கச செய்தாள்.
தத்தை மீண்டும சிவிறியை யேநதிக் குங்குமத்தா
ரையை வேந்தனருகே அணியாக நின்ற மகளிர் மே
லேவிட அவராற்றது கூந்தலை யொரு கையாலும்
துகிலை யொரு கையாலும ஏந்தி அரசனைச சரணெ
னறு சேர்ந்தார். அவன் அவர் வருத்தத்தைப் பார
த்துச் சிவிறியை யேந்தி மேகம்போலே நீரைப
பெய்தான். தத்தையைச் சூழ்ந்தமகளிர சந்தனத்
தளிர்கலந்த மாலையை யோச்சிப் பினபு கண்ணியா
லும் சுண்ணத்தாலும் சாநதாலும் எறிந்து அவனை
வருத்தினர். அவன பின்னர்ச் சிவிறியிற்றாரையை
வெய்தாம்படி முறுக்கினன். தததையது சேனையா
கிய *காமன் சேனை, துகிலும தோடும மாலையும சிந
தவழியல்லா வழிகளிலே போயிற்று. தத்தை பொ
ருது மனனன மார்பிலே தாரையைப் பொழிந்து
பொருது உடைந்து துகிலை யிழநது நாணத்தால்

* காமன சேனை—மகளிர.

அவனைத் தழுவினாள். அங்ஙனம் போர் முடிந்தபின்னர் மகளிர் தமது கூந்தலையுலர்த்தி அகிற்புகையாலே உடம்பை வேதுகொண்டு பட்டையுடுத்து அனிச்சமாலையை முடியிலே சூடினார்.

நீர் விளையாட்டணி,

முற்றிற்று.

## இருது நுகர்வு.

நீர் விளையாட்டிலே மகளிர்கொண்ட நீர்க்கோலம், அரசனது உள்ளத்தினின்று வருத்துதலின் அவன் அவரோடு முதுவேனில் முதலிய காலங்களில் விளையாடுவானாயினன். முதுவேனிற்காலத்தில் ஞாயிறு கொதித்தலால வேந்தன அதற்காற்றாது மேனிலத்தில் தேக்கிய சந்தனச்சேற்றிலே புலம்பிய பின்பு நிலாமுற்றத்திற் பள்ளியில மகளிரோடு சேர்ந்திருந்து பாட்டையுங் கூத்தையும் கேட்கவும் காணவும் அவ்வேனிற்காலம கழியாநின்றது. பின்பு அரசனும் மகளிரும கார்காலத்திற்குரியனவாகக் கூறிய அடையையும் பாலமுதையும உண்டு, கூதிர் காலத்தில் வெம்மைசெய்கின்ற சாந்தையும தேறலையும மாலையையும் புகையையும சுண்ணத்தையும் விரும்பிக்கொண்டு பனிக்காலத்தில் எங்குமில்லையாய * நெருப்பைத்தின்னும எலிமயிர்ப் போர்வை

* நெருப்பைத்தின்னும் எலிமயிர்ப்போர்வை—நெருப்பினளவு வெம்மையுடைய எலிமயிர்ப்போர்வை.

(புதல்வர்ப்பேறு)

ளையும் பசுசிலையாலே தொடுத்த மாலைகளையும் கொண்டு எலுமிச்சம்பழத்தின் நீரிலே ஊறிய இஞ்சியையும் கருப்புக்கட்டி முதலிய பலவற்றையுங் கூட்டி முறுகப்பொரித்த பொரியையும் வேரி யையும் நுகர்ந்து மல்லிகைமாலையைச் சூடினார். சூடினவர் வேனிற்காலத்திற்கதுப்பிலே எண்ணெயை தேய்த்து கலவியை அரைத்து அச்சாந்தைக் கொண்டு நீராடி அகிற்புகை சோத்தி மயிரை வகிர்ந்து புறகைவார்த்து ஈகிராலே நீக்கி அவ்விடத்தே குங்குமப்பொடியை அணிந்து அக்காலத்திற்குரிய பிறவற்றையும் நுகர்ந்தார்.

இருது நுகர்வு
முற்றிற்று.

# புதல்வர்ப்பேறு.

மக்கட்பெற விரும்புவோன் பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும் கடையினறி உறைந்து நன்றாகிய நாளையும் ஓரையையும் உணர்ந்து தலைவியை நோக்கி நீயும் இன்பங் கருதாது இவன் போன்ற புதல்வனை யான் அடையவேண்டும் என்று கருதுவாய் எனக் கூறிப் புணரவேண்டுமென்பது நூலின் துணிபாதலால், தேவியர் மகப்பேற்றை விரும்பி வேந்தன் உருவை உட்கொண்டு சேர்ந்து கருவுற்றுப் புதல்வரைப் பெற்றார். அப்பொழுது அரசன் உயர்ந்தோர்க்குப் பொன்மழையைப்பெய்தான். காடியை

வார்த்துப் பிரமிச்சாறும் கண்ட சருக்கரைத்தேற றும் நறுநெய்யும் தம்மிலேகூட்ட பொன்னாலே தேய்த்துப் பிள்ளைகள் கொள்ளும்படி மருந்தாக வாயுறுத்திப் பின்னர்த்தேனிலே அதிவிடயத்தையும் திப்பிலியையும் தேய்த்து நாவுற வாயுறுத்தி வாயும் கண்ணும் பெருகும்படி உகிராலகற்றி அண்ணாக்கை ஈர்ந்து மூக்கை உயர்த்தினார். அக்காலத்தே சுதஞ்சணன் வந்து உவகைகொண்டாடிக் கூத்துப்பார்த்துச் சென்றான். பின்பு அரசன் கலுழவேகனுக்கும் ஒழிந்த சுற்றத்தார்க்கும் உவகைசொல்லிப் போகவிட, அரும் வினைபெற்றார்போன்று உவந்தார். பின்னர் கணிகள் கூடிக்கோள்கள் தம்முடைய நிலங்களிலே நிற்கின்ற நிலைகளும் அவற்றுட்சில உச்சமான நிலையும் தாழ்ந்த நிலையும் தம்முள்ளே பொருந்திய நிலையும் தாம் நிற்கின்ற தசைகளும் ஆராய்ந்து சாதகமெழுதினார். சச்சந்தனன் சுதஞ்சணன் கோவிந்தன் கந்துக்கடன் என்னு நாமங்களையும், அரசனுக்கு உலோகபாலனிடத்திலுண்டான நட்பு மிகுதியாலே அவனது இயற்பெயராகிய தரணியென்ற பெயரையும் விசயன் என்ற பெயரையும் விசயமாதேவியார் தந்தை நாமமாகிய தத்தன் என்றபெயரையும் அச்சணந்தி ஆசிரியன் நாமமாகிய பரதன் என்ற பெயரையும் அப்புதல்வர் கொண்டார்.

புதல்வர்ப்பேறு

முற்றிற்று.

## சோலைநுகர்வு.

அரசனும் தேவியரும் சேர்ந்திருந்தகாலத்திலே மலர்விகைமாலை என்பாள், பூவிடுபெட்டியைத் துகிலால்மூடிக் கையிலே கொண்டு சென்று அரசனை வாழ்த்தி வேந்தே! காமன் மலராகிய * பாருடத்தையேந்திச் சோலையிலே அணுகினான். அஃது அவனைக்காணற்கிடமாதலால் நீ சென்று காண்கவென்று கூறினாள். மன்னன் தேவிமாரோடு சோலைக்குப் போய்ச் சிலமரங்களைக் காட்டி அஞ்சொல்லீர்! இம்மரங்கள், முதல் † தீர்த்தங்கரராகிய இடபதீர்த்தகரர் தோன்றிய ஆதிகாலத்தேதாமே தோன்றிப் பலித்த மரங்கள்போலப் பயன்பட்டு நின்றன. நீர் தலாலே காணவேண்டிய இடங்களெல்லாவற்றையும் சென்று காண்மின் என்றான். தேவியர், வானவர்மகளிர்போலே ஊசலாடியும் கானவர்மகளிர்போலே நல்ல மலர்கொய்தும் மலையொடு கூவியும் மகிழ்ந்து பொதும்பரிலே அரசனைக் கூடவிரும்பி அவன் தம்மிடம் வரவேண்டுமென்று மருதயாழைவாசித்துப் பாடினார். வேந்தன் சென்று அவரைப்புல்லிமீண்டு வருக்கையினிழலைச்சேர்ந்தான். அங்குக் களவொழுக்கமுடைய ஒரு ‡ கடுவன் ஒரு § மந்தியை அழைத்து ஒளித்துப்போய்ப் புணர்ந்து வந்தது. அக்கடுவனுக்குரிய காதல்மந்தி, பார்த்து

---

* பாருடம்—வடமொழிச்சிதைவு, மெய்யுறையென்பது பொருள்

† தீர்த்தங்கரர்—இருபத்துநால்வருளர்.

‡ கடுவன்—ஆண்குரங்கு.

§ மந்தி—பெண்குரங்கு.

அக்கடுவனை நோக்கிப் பரத்தையரைப் புல்லிய மா
பம, திருத்தகைத்தன்றாதலால அதனைப பத்தின
மகளிர் தீண்டார். நீர் நீராடி வமமினென்று கூற
றது. கடுவன மந்தியை நோககி நீ கூறியதை யா
என மனத்தும் நினைக்கதிலலை. அனறியும தேனை
யுண்பார், வருததருசெயயும் காருசிரதகையும பே
மையையும் தின்பாரோ நீயே கூறாய் என்றது. மந்தி
அதற்கு மறுமொழிகொடாது கோபித்துப்பாரக்க
கடுவன மந்தியை நோககி இனி நீ எனனை இங்ங
னம் நோக்கி என் செயவாய் உனது நோககாலே
எனக்குயிர்போயிற்று. சிறிது பொழுது நிற்பின்
நீயும் அதனைக் காண்டை என்று சொலலிறறு. மந்தி
* தொழுந்தையேன் செயத வருத்தத்தை யொழி
வென்று தழுவித தன்னைத் தானே பழித்தது. மந்தி
தன கணவனாகிய கடுவன் குற்றததைக் கண்ணு
மனநிலைததும அக்கடுவன ஊடலதீரபப அம்மந்தி
தன் பெண்மையால தீரந்தது.மந்தி ஊடல் தீர்ந்த
தற்குக் கடுவனமகிழ்ந்து பலாப்பழத்தைக் கீறி
பருத்து நலல சுளைகளை எடுதது அம்மந்திக்குக் கொ
டுத்தது. அச்சோலை காக்குஞ் †சிலதன் அக்குரங்கு
ளை வெருட்டியோட்டிச் சுளைகளைத் தானுண்டான

---

* தொழுத்தையேன—ஏவறறொழில்செய்தற்குரியேன
இல்லுட்டொழுத்தையா் கூறப்படும என்றார் பிறரும். ந
லடியார், புல்லறிவாண்மை. கூ

† சிலதன்—அரசனேவல் செயது அக்காவினைக் காக்
கின்றவன். பிறரும் †"பூவிலைமடந்தைய ரேவற்சிலதியா"
என்றார். †சிலப்பதிகாரம புகாரகாண்டம், இந்திரன்விழ
வூரெடுத்தகாதை.

(சோலைநுகர்வு)

மன்னன் கண்டு, தன்னைக்கூடும் அன்புடைய மனைவி பிறனைக் கூடக்கண்டு வெறுத்ததன்மையை யொத்து மூவாததையும் இது நிகழுங்காலத்து நாற்பத்தையாட்டைய பிராயத்தனாதலால் மேல்வருகின்ற மூப்பையும் வெறுத்தான். வெறுத்தவன், கைப்பழமிழந்த மந்தி அரசை யிழந்த கட்டியங்காரனைத்தது. சிலகன், கட்டியங்காரனைக் கொன்று அரசெய்திய எமனையொத்தான. இன்னும் இவனினும் வலியான் பாங்கி நுகர்தற்குரிய இப்பழத்தை இவன நுகாந்நடையும் இன்பம், இன்று யான் நுகர்கின்ற இப்போகத்தின்பத்தை யொக்கும். மெலியவருடைய செல்வத்தை வலியவா தாம பெறுதற்குரியவரலல மெரனறோராது மேலைவாமபிகருது வெளவிப பொலலாங்கு செய்யும் பிறவியது. செருக்கைக் கண்டாம. ஆதலால் இச்செல்வத்தைக கைவிட துறத்தற்குரிய காலததே துறந்து தவஞ்செய்து மெபொறியையும அடக்கி அழிவில்லாத வீட்டுலகக நதைப் பெறுதலே நன்று. நல்வினை யென்கின்ற கற்பகக கொமபு, பரிசிலராகியவண்டுகள் நுகருமபடி பரிசிலைப பூததது, மகளிர் என்கின்ற பழததை மினறு புதல்வரென்கின்ற மாலைகள் தனனிடததே தஙகநின்றது. இங்ஙனம் நின்ற அக்கொமபு, தீவினையாகிய காற்று வந்தடித்தலால் நிலைபேறின்றிச் சாய்ந்து விழுந்து போவதாயிரா நின்றது. அது விழுவதற்குமுன்னே இவ்வில்லறத்திற்பயிற்சி நமமைவிட்டு நீங்குக வென்று தன் மனத்தை வலியுறுத்தி வேட்கையெனனும நாவாலே காமம் என்

றும் கள்ளோயுண்டு வீட்டினைத் தருஞ் செய்கை சி
து மினறிப போகததே மயங்கினேறகு இவனிரு
நீயகும்படி வீட்டு நெறியிலே செலுத்தும கைவி
க்காகிய துறவுள்ளததைக்காட்டிய கடுவன் மந்
திலதன் ஆகிய இவை இநதல்வினையால் தேவராக
கூடுமென்று கூறி மனமடங்கித் தொழிலசெய்த
குரிய மகளிரிட்ட கட்டிலிலிருந்தான்.

மகளிர் தம் புருவததை மெள்ள வளைத்து
கண்பிறழப பார்த்து எயிறிலஙக முறுவலிக்குமு
வற்றாது முதலாக ஒழிந்த காமக்குறிபபுக்களை
கருவியாகக் கொண்டு மன்னன். காமவின்பத்தை
யள்ளியுண்ணும்படி பழுப்பிததுப் பார்த்தார். அ
ன் சிறிதும் நோக்காமல் துறவிலே வைரமனததள
யினன .அபபொழுது கழிந்த நாழிகையை மன்ன
குக் கணிகள் கூற, மல்லர் அரசனை யுடமபுதட
மஞ்சன மாட்டினர். வேந்தன் வெள்ளியதுகிலை
யும மாலையையும் சாந்தையும் அணியையும் அரசி
விற்கூறியவிதிப்படி சேர்த்தி, உண்டவுடனேமரு
த்துவநூல் கூறியபடி நூறடியுலாவ வேண்டுதலின்
வ்வளவடி யுலாவுதலையுடைய அமுது செய்யும்
மண்டபத்தே யேறி, அறுசுவை யடிசிலை வீமசே
னன் போனற மடையன் ஏநத உண்டு, முன்னா
உழுத்தம் பொடி முதலியவற்றையும பின்னர்ச் சா
ந்தத்தையும் நூலில விதித்தபடி பூசி முகவாசப
தினறு, தேவியுரைநோக்கி எல்லாத்தேவரினும்மிக்க
தேவராகியஉருவரை வணங்குதும் எழுக எனறான்.

சோலைநுகர்வு,
முற்றிற்று.

## அறவுரை

சாரணரிருவர் ஆகாயத்தே வந்து நாதன் கோயிலை வலங்கொண்டு பிண்டியின் கீழே பளிக்குக் கல் மேலே நின்றார். அண்ணலசேவடியை யருச்சித்த திருமகன், உரிமைச்சுற்றத்தோடு அவரை வலம் வந்து வணங்கி வாழ்த்தினன். சாரணர் சீவகனை நோக்கி அரசர்க்கு நினக்கு இன்ப மன்னுக வுயிற்றே என்று கேட்டார். மன்னன் தான துறவுதனை அவருணர்ந்ததற்கு வியந்து மிகவும் துதித்து அடிகள்! பிறப்பறுமாறறியாதேன் எப்பிறப்புகளிலும் செய்து கொண்ட தீவினையென்னும் இருள் கெடும்படி சிலநாள் தவஞ்செய்து பின்னர் வீட்டினதனை யடையும்படி எனக்கு அருளுமின்னென்றான்.

சாரணரிருவரில் மூத்தவனான இரத்தினப்பிரபை என்பான், மதி தன்னுடைய கதிரைப் பாற்கடலிலே சொரிவதொப்ப மிகவும் நனித்த அறத்தை மன்னற்குச் சொல்லத் தொடங்கிப் பெரியோய்! தவத்தாற் பெறுகின்ற மக்கள்யாக்கையையும் அத்தேகம் அதற்குரிய நாறியாண்டு நில்லாது கருப்ப முதலாக அழிகின்ற அழிவையும் நரகர் விலங்கு மக்கள் தேவர் என்கின்ற நாற்கதியின் துன்பத்தையும் துணியப்படும்பொருளையும் அப்பொருளைத் துணியுந் துணிவையும் சீலத்தினது நிலையையும் தானத்தையும் அத்தானத்தாலும் சீலத்தாலும் காட்சியாலும் பெறும் பயனையும் வீட்டிலக்கணத்தோடே கூறுவேன் அவற்றுட் பெறுதற் கருமையை முதற் கேள் என்று சொல்லுகின்றான்.

### அறவுரை.

#### முற்றிற்று.

## பெறுதற் கருமை.

அரசனே! இழிந்தவாகிய பிறயாக்கைகளைப் பெறாமல் மக்கள்யாக்கையைப் பெறுதல், தென்கடலிலே போகவிட்ட கழி, வடகடலிலேயுண்டான நுகத்துளையிலே முதற்சென்று அத்துளையினடுவிலே செறிந்ததென்னும்படி அரிதாம்; அங்ஙனம் மானிடம் பெறினும், புனலுண்டென்று வார்த்தையினுங் கூறுதற்கரிதாய வேய் வெடித்து ஒலிக்குங் கானவரிடத்தையும் மிக்கபனியைக்கொண்டு குலைக்கும் * குறும்புகளையும் நீங்கி நன்னாட்டிலே பிறத்தல் அரிது. நரபதி! மாக்களைக்கொன்று தின்கின்ற கரும்புறத்தோரும் பரதவரு முதலாக இழிந்த குலங்களிற் பிறவாமல் நற்குலத்திலே பிறத்தலுமரிது. அக்குலத்திற் பிறக்குங் காலத்தும், உயிர்க்கிழவனை விடாது தொடரும் இருவினைகளில் தீவினையின் கட்டளையால் உறுப்புக் குறையும் வடிவைத்தப்பி நல்வினையின் கட்டளையாலே அழகால் மிக்கதோர் உடம்பைப் பெறுதலுமரிது. அவ்வுடம்பைப் பெறினும் அச்சத்தைத்தரும் நாற்கதியிற் செலுத்துங் குற்றத்தைத் தரும் பரசமயங்களைக் கைவிட்டு வாமன் நூல் வழியைத்தழுவி யொழுகுதல் அரிதென்று கூறி, அவ்வியாக்கை நிலைபெறாது ஒழியுந் தன்மையைச் சொல்லுகின்றான்.

---

* குறும்பு—பாலைநிலத்தூர்.

பெறுதற்கருமை,

முற்றிற்று.

## நிலையாமை.

மக்கட்கு விதித்த ஆயுள் முழுவதும நிலை பெறுதலரிது. வெள்ளியுமபொனனும சேர்ந்தாற்போல்ச் சுக்கிலமும் குருதியும வயிற்றிலே பொருந்திப் பதிந்தபொழுதிலே மின்னும் மொக்குளும தோன்றிக் கெடுமாறுபோலக் கெடினுங்கெடும். அங்ஙனம கெடாது வெண்ணெய்போலத் திரண்ட பின்னாக் கெடினுங் கெடும. அதிற் கேடின்றேல அதுயாமையின் தன்மையான அளவிலே கெடினுங கெடும். அந்நிலையிற கெடாதேல், குறையாதவுருவுடனே பிறநது இருமுது குரவர் முதலாயினர் அழக்கெடினுங் கெடும. பினபு பெயரிடும் அளவிலே கெடினுங கெடும. மையோலை பிடித்தபொழுது கெடினுங கெடும. நூலகளை முறறக் கற்றுப பரிசிலா கொடையைத துதிக்கும்பொழுது கெடினுங் கெடும. மகளிரைக் கூடி வேறொனறு மறியாது போக நுகருங்காலத்திலே கெடினுங் கெடும. புதலவரைப பெற்று மகிழுங் காலத்திற் கெடினுங கெடும. அககாலங்களிலெலலாங் கெடாதாயினும, விளி குறைந்து ஊமாபோலே கையாலே வார்த்தை கூறி உடம்பாகிய குளம், ஒன்பது வாயிலாகிய தூமபுகளும தம வயத்தனவாகாமற் சோதிறநது பாயந்து அக்குளமாகிய யாக்கை, முடிவிலாம பொருள், இதுவென்று அறியாதார்க்கு நனகறிவிததுச் சுடுகாட்டிலேறுதல் உறுதி. ஆதலால நீ இதறகு வேறாகி நிலைபெறும பொருளை அறிவாய். அரசனே! மக்கட்குரியனவாக யாம் கூறிய இந்நிலைமையோயந்றிப பொனனுலகு சென்று இமையவரது

(நரககதித்துன்பம்)

பகையை வென்ற சக்கிரவர்த்திகளும் இவ்வுலகில் நிலைபெற்றிருந்தாரில்லை. அவர்களது ஊரும் பெய ரும் நிலை பெருமையின் யாமறிகிலேம். நிலைபெற் றிருந்தனவுளவேல் நீ யுரையென்றுரைத்து நரககதி த்துன்பத்தை யுரைக்கின்றான்.

நிலையாமை,

முற்றிற்று.

## நரககதித்துன்பம்

வேந்தே! தீவினை செய்யும் மாந்தர் தமது உயிரென்னு நிலத்திலே அத்தீவினையை விதைத் து, அவ்வினையின் பயனை நுகரும நரகததிடததி லே, நரகாபடும துன்பம இத்தன்மைய வென்று உரைபபேமென்றுநினைப்பினுமஉள்ளநடுங்கும். ஆ யினும அத்தனமையைச சிறிது கூறுவேன; எதி ர்நின்று போர் செயயாது எளியவரைக் கொன்ற வா, அத்தீவினை தமமனத்தைச் செலுத்தலாலே அதனபயனை நுகர்தற்குப பொருந்திய * ஒரு முகூ ர்த்தததிலே பனங்கனிகள பெருங்காற்றாலே வீழ வன போலத் தலைகீழாக வீழ்ந்து நரகததிலே செ னறு துன்பமுறுவர்; அவர்க்கு அந்நரகத்திலே உ ணணுமு உணவு நஞசுகாண; நஞ்சு உணவாகவும் தீ வினையை நுகாதற்காக அவாசாகா ; முன்னா ஐம்

---

* ஒன்றுமுழததம் என்று பாட்டிலிருக்கின்றது, ௱கூரு

பொறியை அடக்காது தீவினையைச் செய்தவரா
கிய நரகர், ஈட்டி வேல் குந்தம் வாள் சுரிகை என்னு
மிவைகள் நடப்பட்டு நிறைந்து நிற்கின்ற பூமியிலே
அவைதமமுள்ளே அழுந்தும்படி வீழ்ந்து கிடப்பார
வேந்தே! முற்பிறப்பிலே தசைகளைத் தின்றோர் அத்
தீவினையாலே மகளிராடும் பந்துபோலத் தீயின்
ன்றும் பொங்கியெழுந்து மீட்டும் அதனுள்ளே வீழ்
ந்து உருகியுடைந்து மயங்கிக் கிடப்பர். அரசே
ஒன்றனுயிரை வருத்திய மாந்தருடைய உயிரைவ
ருத்தும் விதத்தைக்கேள், முனைமுறியாத வயிரமா
கிய முட்களை நீண்ட இலவிலே நிரைத்து அப்பாவிக
ளை அதிலேற்றிக் கீழே நெருப்பை யெரிப்பர். அ
துவேயன்றி அவரைக் கழுவிலேற்றி அவர் கொ
ன்ற விலங்கு முதலியவற்றினது ஒருமயிருக்கு
ஒருதசையாக அவரது மெய்யை அறுத்தெறிவா.
உடம்புகளை வேட்டை யாடினவரைச் செந்நாய், வ
யிரவூசி போன்ற எயிறுகளழுந்தக் கௌவி யுதறு
தலாலே அப்பாவிகள் ஆற்றாராய் அலறித்துன்ப
முழப்பார். வேந்தே! நமமுடைய நல்லறத்தை
த தப்பிப் புலாலையுண்ண விரும்பினாரை நிரயகா
வலர், இங்ஙனே வாருங்களென்றழைத்து அவா
வாயைப் பகுத்துச் செப்புப் பாளத்தை யுருக்கிக
கொடிற்றுலே எடுத்து வாாக்க, அவா ஆற்றாராய்
உளையிட் டோடுகின்றவா, ஓடாமைக்கு ஆங்குத்
தறியைப் புதைத்துக்கட்டிய வலையிலுள்ள ஊசிகள்,
அவரது உள்ளங்காலிலே பாய்ந்து விடாமையாலே,
கால் நிலத்தோடு ஒட்டிக்கொள்ள வருந்தாநிற்பா.
வந்தே! தன்மனைவி வருந்தாநிற்கப் பிறன்மனைவியை

(நரககதித்துன்பம்)

ச் சேர்ந்தவுயிர், உருகிய செப்புப் பாவையைத்தழு வி அலறும். நாமவேலோய்! வில்லாலே விலங்கு களையும் வலையாலே மீன்களையும் வேட்டையாடிக் கொன்றபாபிகளை நரகிலுள்ள நெருப்பிலே அழுத் தி நாடோறுஞ் சுடுவர். அதுவே யன்றி நிரைய பாலர் பலரும, பரியதடிகளை யெடுத்துப் பாவிகளை அடித்து நருக்கிச சிலரைக் காரகளிலே பொரிபபர். சிலரை நெஞ்சிலே தறிகளைப் புடைத்துப் பின்னர்ப பனையைப் பிளககுமாறு பிளப்பர். அங்ஙனம் தீவி னைப் பயனை நுகருங்காலத்தில், நீரைவிரும்பி வறட் சியால் நாவை அசைத்தலாற்றாாய்ப் பொய்கைகளை நோககிச் செல்வர். அவை, சீயாலுண்டான குழ மபாகையாலே வருத்தமுற்று அந்தோ என்றழுவர் * பலகறைபோன்ற பல்லையும தீப்போன்ற கண்ணையு முடைய நரகர் புனலைவிரும்பிப் பந்தரைக்குறு கின அளவிலே அப்பந்தர் நெய்சொரிந்த நெருப் புபபோலப் பொங்கி அவரைச்சுடும். உருகிய செம்பாலான † விதலையுள்ளே நிரைய பாலரால் பாவிகளழுத்தப்பட்டும், எந்திரமானவூசலிலே ஏற் றிக் கீழே நெருபபை யெரிக்கப்பட்டும், நீரெழுந்து போகும்படி செக்கிலேயிட்டரைக்கப்பட்டும், சுண் ணமாக நுணுக்கபபட்டும், நாடோறும் வருந்துவர்.

இறைவ! யான் கூறியவாறேயன்றிப பலரும் தாம் செயத தீவினையாகிய தேரை ஏறிசசென்று

---

* பறையலகு என்று பாட்டிலிருக்கின்றது. ஈஎடு.
† விதலை—குழமபு.

நரகத்துள்ளே யழுந்துவர். அவர் யாரெனின், கொலைத்தொழிலிலே அடிபபட்டு நின்ருரும, கொ ருஞ்கொடியாரும், கடிய தொழில்செய்வாரும், இம மையேயன்றி உமமையும் உயிர்க்கிழவனும் நல்வி னையும் தீவினையும் செய்ததானத்திற்குப் பயனும இல்லையென்பாருமேயென்று சொல்லி விலங்குகதித் துன்பம் சொலலுகின்ருன்.

நரககதித்துன்பம்

முற்றிற்று.

## விலங்குகதித்துனபம்.

அரசே! நரகம் எக்காலமும் எரியினது தன் மையவே. அந்நரகவாசிகள் அடையும் துன்பமும் விலங்குசாதியுடைய துன்பமும ஒரு தன்மையவே. மலையிலே புலிமுழங்க அதைக்கேட்ட உழைமான் உறுந்துன்பம், நின்னிடத்து விருப்புஞ்செய்யாத வேந்துகளுறுந துன்பமேகாண். நண்ணார்க்கடந் தோய்! இவ்வுலகம, மறிகளு மஞ்சளைப்பூசி மல ரைச்சூட்டி அதனையறுத்துக் கையாலே யுதிரத் தைத தாவித் தேவிர்! உவந்து உண்ணீரென்று கூறுகின்ற கொடுமை, நரகத்திலும் நான்குமடங்கு கொடியது.

மணணுர மஞ்சளுரிஞ்சி மலர்சூட்டிக்
கண்ணார்மறியறுத்துக் கையாலுதிரந்தூ
யுண்ணீரே தேவீருவந் தென்பதிவவுலக
நண்ணார்க்கடநதோய நமனுலகினும் மடங்கே. ௬அ௨.

(விலங்குகதித்துன்பம்)

மங்கை, அக்குபபோன்ற மெல்லிய சூலேயு டைய உடும்பு வரால வாளே என்கின்றவற்றைப் பாரிக்கறியாகச் சமைததற்கு வேறு வேறாக அறு ப உயிர்போவதற்கு அவை, வாயங்காந்து * அழு ன்ற தீவினே, யாரிடததே செல்லும? அறுபபார் ண்ணேயன்றி யேவினார்கண்ணும உடமபட்டா ன்றுஞ் செல்லுமே.

மங்கைமனுவனைய மென்சூன்மடவுடும்பு
செங்கண்வரிவரால செங்கீரிளவாளே
வெங்கருனே புலலுதறத வேறுவேறாக்குறைபப
அங்காந்தழுகின்ற தார்கணணே நோக்குமோ. ௬அரு.

தீவினே தமமை வருத்தலாலே தாம கடலுட டபினும அது அரணமாகாமற் காடடுட்கிடபபி ம அது அரணமாகாமற் குன்றிற்கிடப்பினும து அரணமாகாமல் மேன்மேலுணடாகுந் துயரத லே பதைத்துவேம. முழுபபதகர் எருதுகளே லேபூட்டிச் சாம்படி அடித்தோட்டி அதற்கவை ாகாமையின், தாற்றுககோலாலே குத்தித் தமது பற்கியாலேயுழுது கைவிட்டால அவ்வெருது, மாட்டாவாயக கிடநதவிடததிலே கிடந்து, புழு சரியக் கொத்தித்தின்னும் காக்கைகளே யோட்டு ரிலராய்த் துன்பம பொறுக்கமாட்டாதுசாம. ப டமேற்றிய சகடம், சிறிது நீரையுடைய யாற் ) அழுந்துதலாலே அதிற்பூட்டிய எருது, மூக்கை தநிலூன்றி முழந்தாளிட்டு இழுததுத் தமது

* அழுதல—பழைய தன்மைகெட்டு வருநதுதல் ; து அசைவென்று மெப்பபாடாம.

வழியெல்லாம் கெட்டு உறுப்புக்களழுகிப் புலலு
ணுவாய்ச்சாம். யானைகள், தோட்டியாலே மத்த
தைப் பிளக்கப்பட்டும் பரிக்கோலாற் குத்துண்டு
காமநோய் சுடப்பிடிகளை நினைத்தும் வருந்தும்.
வை சிங்கம் வளைபப உயிர்விடும். சில விலங்
கள் நெருப்பு வளைபபப் புகையை யுண்கையினுலே
யுயிர்விடும். மாந்தர், சங்கை வளைக்கும் இப்பினை
முத்திற்கும் கவரிமாவை மயிர்க்கும் கொல்வர். உ
ர்வில்லாத மாக்கள், யானையின் பசுந்தோல் தம்மு
ட்பிற்பட்டால் அது கொல்லுமென்பதை யுணரா
நன்மையைத்தருமென்று போர்த்துக் கேடுற்று
போல நஞ்சமயத்தாரல்லாதாரெலலாம், தமக்கு
நன்மையைத்தருமென்று விருந்திடுதற்கு விலங்
களைக் கொன்றும் வேள்வியிடத்தே கொன்று
வலையிடத்தே கொன்றும் தமது வாழ்நாளைத் தே
த்தார். நஞ்சமயமல்லாத ஆடவரேயன்றி ம
ளிரும் பொரிக்கறிக்குக் கொன்றும் கிளியும் பூனை
யும் முதலாக ஒழிந்த உயிர்களைக் கூட்டிலடைத்து
அவற்றிற்கு வருத்தஞ்செய்வார். ஆதலால் அ
மகளிரும புறம்போந்து வேட்டமாடாத மாத்திரை
யாயிருந்து பாவஞ்செய்வார். அரசே! மாதவ
தோரைப் பழித்துரைப்பாரும பகுத்துண்ணுப்பா
களுமபரத்தையர் முதலாயினுரும் விலஙகாய்ப் பி
பபர் என்று மொழிந்து மக்கட்கதித்துன்பம் மெ
ழிகின்ருன்.

விலங்குகதித்துன்பம்.

முற்றிற்று.

## மக்கட்கதித்துன்பம்.

வேந்தே! தம்மார்பிலே பூசப்படுவனவற்றை தமமைக் கண்ணுடியிலே பார்த்துத் தமமழ கைத் தாங்கமாட்டாராய் மகிழ்ச்சி கொண்டு இள மைசெல்வியிலே இளையார் தோளைக் கூடும் மை கரது துன்பத்திலே சிலவற்றைக் கேட்பாயாக. ாம் வயிற்றுளிருக்கின்ற காலத்திற் புழுத் தாயினு டைய ஈருளைமுடித் தம்முட்மைப் போர்த்த மல ாகிய போர்வையையும் மொய்ப்பத் தாம குடரை சூடியிருந்து புறம்போதுங்காலத்து புனல்பெய்து மூவாவிடின் சேர்தற்கரியனவாய்ப் பொல்லாதன ாய்ப் புனலூறுவனவாய் அள்ளற் பொருந்தினவா ள்ள வழியாலே வந்த மாக்கள், தமது தூய்மை ய நினையாரோ நினையாமையினன்றே தம்மைவி க்கின்றார். உலகத்திலே மக்கள், தாம் கொண்ட ுவாவாலே மகளிரிடத்துப் பிறந்தமயக்கம் மிகுத ின், அவரைப்பெறுதற்கு நெஞ்சிலே வேலையேற ும், அவர்க்குப்பொருள் கொடுத்தற்குக்களவுகண கழுவிலேறியும், அவரைககளவு கண்டு * குஞ் க்களியானைக் கிடப்படும், துன்பக்கடலிலே யழு கினார். அந்தோ! இத்துனபதனை நீ நோக்காதின ்யே. பூணேய! நாவாய் கடலிலே யோடிக்காறறு ல கவிழும்பொழுது மக்கள் படுந்துன்பம், நரகத் ுன்பத்திலும் நான்மடங்குகாண். நின்பகைவர் நா டிற்குடியிருக்கும் மக்களாய செல்வரைநோக்கி ர் தேடியபொருளை அரசனுக்குத்தாருமென்றுசொ

* குஞ்சி—மத்தகத்தின் மயிர்.

பலி முனைகையைப்பிணிக்க அத்துனபத்திற்குத் த ளாந்தவர், சேற்றிலே நிறுததபபட்டும், அடிக்கப்ப ட்டும், பலவுடைக்கப்படடும், சாநதரைப்பாா போ ல முழுஙகைபுண் செய்யபபட்டும, காலகுறைக்கப் படடும, கண்சூன்றிடபபடடும், புகையுண்டும துன் பததேயழுநதுவர். மாரபனே! உடம்பென்னுஞ் சோலேயிலே சேர்ந்தபிணி யென்னுந்தீ, அழகென் னும் மலர்வாடுமபடி அச்சோலேயைச சுடடுத்தான் போம். கொட்டுப்பிடிபோலுங் கூனரும், குறள ருமம, யாமை கைவீசி நடத்தலபோல நடக்குஞ்சிந் தருமம, சீவடியு நோயையும் பிறநோயையும் உற்றவ ருமம, படுநதுன்பம் நம்மாற கூறமுடியாது. வேலோ ய! மக்கட்கு, வேட்டபொருள்களேப் பெறுமைது னபம்; விருமபினுரைப பிரிதல் துன்பம்; மூப்புவ ருதல் துன்பம; கல்வி கற்காமையாலே இகழ்தல முதலாக பிற இகழ்ச்சிகளெல்லாம் துனபமே என் று மொழிநது தேவகதிததுனபம் மொழிகின்றுன.

**மக்கட்கதித்துன்பம்.**

முற்றிற்று.

---

## தேவகதித்துன்பம்.

வேநதே! தேவர் கருவிற் சென்று பிறவார்; அவர் கால் நிலந்தீண்டா; அவர் சூடியகண்ணியும் வாடா; அவர் மனத்தாலுண்பதன்றிக் கையாலு ண்ணுர்; காமத்தால வருந்துவார்; அவர் போக நுகர்தறகு வேண்டுவனதருகின்ற கற்பகக காவைக்

(நற்காட்சி)

கண்டுவைத்தும அது நிலையா தென்றுட கொண்டு தேவியா சூழச்சென்று வாமனடியைத தொழுது பூவைத்தூவி வணங்கி இப்பிறவியை விரும்பேம வீடே எமக்கு முடிவதாக என்று இரப்பாராகாண். வேந்தே! அத்தேவர்கட்கு உயிர்போக பதினேந்து நாள்களுளவென அவர்கண்ணிமைக்கும; மாலை வாடும்; நஞ்சையுள்ளேயுடைய அமிர்தையுண்டார் போல அவர் பல நாள் நுகாந்த இன்பததை வெறுத்துப் பயனின்றிக் காலம போக்கினேமே யென்று பின்வருந்துவர்காண். மன்னு! தாமும தேவராயிருந்தும் வேறுதேவரால் கோபிக்சபபடடும் அவரை இறைஞ்சி அவர்க்கேவல் செய்தும நோவது மிககதுன்பம; அவர் மணணிடை வந்து மக்களாயும விலஙகாயும பிறததலும துன்பம். ஆதலால யாதொருயாக்கையை யெடுத்தவாகட்கு அவ்வியாக்கைகளெல்லாம துன்பத்தையே செய்யும் என்றே நறகாட்சியோதுகினறுன்.

தேவகதித்துன்பம்

முற்றிற்று.

---

நற்காட்சி.

வேந்தே! பிண்டியின்கீழே அரியணைமேல் தேவாதுதிததுச சிறபபுச்செயயப பிறதெய்வங்களை தெயவமென்று கருதும இருள், உலகமெங்கு நீங்க ஞாயிறறிஞெளிபோல இருந்த எநதையாகிய பெ

ருமானாது திருவடிகள், என்தலையிடத்தவே என் த
லையிடத்தவே. அரசே! உதயதாம் பிரீதிதாம கல
யாணதாம் என்னும் எயில் மூன்றையும், சந்திராதி
ததியம நித்தியவினோதம சகலபாசனம் என்னுங்கு
டைமூன்றையும, நாகலோகம பூலோகம் சுவர்க்க
லோகம் என்னுமுலக மூன்றையும், நற்காட்சி நல்
ஞானம நல்லொழுக்கம என்னும் படைமூன்றாகிய
இரத்தினத்திரயத்தையும், சகசாதிசயம் கர்மக்ஷய
திசயம் தெய்வீகாதிசயம என்னும் அதிசய மூன்
றையும, அங்காகமம் பூர்வாகமம் பகுசுருதியாகமம
என்னும் நூல மூன்றையும், அநந்த ஞானதிகுணங்
களையும், ஒருங்குடையாராகாண நம்மை அடிமையாக
வுடையார். இருடிகளது முடிமேலே மலிந்த கு
ளாமணிபோனும் பெருமான் அறவாழிவேந்தன
அவனது அடியை யேத்தித்தெளியும் பொருள்கள்
சீவம புற்கலம் தருமம் அதருமம் ஆகாசம் என்னு
மைந்தும், இவற்றோடு காலஞ்சேர ஆறும, சீவம
அசீவம புண்ணியம் பாவம் ஆஸ்ரவம் சம்வரை நி
ரசரை பந்தம் மோக்ஷம என்னுமஒன்பதும், என
றறவோா சொலலுவர். தமது செயலாலே தமக்கு
ரியவாகிய இருவினையின்பயனை இந்திரனும் குரங
கும் வேறுபாடின்றி நுகருமென்றேயுணர்ந்து இந்
திரனை மகிழாமலும் குரங்கையிகழாமலும் நல்வினை
தீவினையின் தன்மை இத்தன்மைத் தென்று தெளி
ந்தவரேகாண், பரமாகமமாகிய அங்காகமம் பன்
னிரண்டையும், பூர்வாகமம் பதினான்கையும், பகுசு
ருதியாகமம பதினாறினையும, தெளிந்தார். மிக்கே
ரவிருமபுதல், வெறுப்பில்லாமை, வீடெய்துா

(சீலம்)

ருக்துக்கொள்ளல், அறிவர்க்குச் செய்யும் பூசைக்
; எதிர் விருமபுதல், அழிந்தோரையாக்குதல், அ
தனைதககூறல, அறிவில்லாதமாக்களைக கூடாதிருத்
ல், சினம்போக்குதல், செருக்கைக் கெடுத்தல்,
)சசமயத்தாரக் கெல்லாம் இனியராதல், ஆகிய இ
;தன்மைகாண், பரமாகமப் பொருளைத்தெளிந்த
)தளிவு. யான் சொன்ன பொருளைத் தெளிந்தவர்
ிலங்கிறசோரர்; பெண்ணுகப் பிறவார்; எழுநரகத்
ிதயுமணுகார; கீழமையவரான பவணர் வியந்தரர்
ஜோதிஷ்கர், என்னும் மூன்று தேவரையும தீண்
-ரர. அரசே! நரகம் ஏழென்று அறியாமற் கூறி
னேன்; ஆகாத நரகம் ஆறே. அதற்குக் காரணம
ரதெனின், ஒரு சாரார நல்வினை நிறைந்த போக
பூமியில் விலங்காய்ப பிறப்பதுஞ செயவர்காண் எ
ன்று சொல்லிச சீலத்தைச் சொல்லுகின்றான்.

நற்காட்சி முற்றிற்று.

---

## சீலம்

காவல! எண்பத்துநான்குநூறுயிரமாகப் பகுக்
கப்படடனவாகிய குணவிரதங்களும், நூற்றுக்கோ
டி மகாவிரதங்களும, பதினெண்ணுயிரஞ சீலசார
மும, பண்ணவர் காக்கப்பட்டனகாண். அவற்றுட்
சீலமென்று கூறப்படுவன, வீரர் தரிக்குங் கவசத்
தை யொபபனவாய் உள்ளே நின்று நாடோறும்
மயக்கத்தைச் செய்யும் ஐம்பொறியின் செருக்கை

வாட்டிப் புறத்துச் செய்யும் தீவினையையுங்
றைபபனகாண். முடியினுய்! குருசியைத் தமதுவ
யாற்பறித்தலைப் பொறுக்கும அருமையை நோக்
ன், அது புவியை யிருகூறுக்கி யொருகூற்றைச க
க்கும தன்மைய வென்றுகருதி, அசசீலங்களு
இதனையாதியாகப் பணித்தார். ஒழுக்கத்தை வி
டுபபிறன்மனையாளைக்கூடும் மைந்தா, புறஞ்செர
லாகிய மத்திகைப்புடையைப் பெறுதலு மன்
அவளை முன்னாக் கூடினோர் அவளது வாயிலே
யுமிழ்ந்த தமபலத்தை அவள், தன்னைப்பின்னர்
கூடுவோர் வாயிலேயுமிழ அதனைத்தின்று இங்ஙன
அரிய காரியத்தையுஞ் செயவார். இத்தன்மையா
வையத்தில் ஆண்மக்களாய்ப பிறந்தாரல்லர்காண்
உலகில் அறஞ்செய்வார்க்குச் சீலம் யாதெனின்
ஒழுக்கத்தைக் கெடுத்தலேயன்றி யுணாவையுங் வெ
டுகெடுங் கள்ளையும் புழுப் பயின்ற தேனையும பிற
ற்றின புண்ணுகிய தசைகளையுமுண்ணுது தவிர்தலே
காண என்று பகர்ந்து தானத்தைப பகாகின்றுன்.

சீலமுற்றிற்று

---

## தானம்.

நல்லநிலத்திலே விதைத்த விதைபோலே விளை
ந்து செல்வத்தைப் பின்பு உலகிலே பெருக ஈனுப
தலையான தானத்தியற்கையையும், பொல்லா நில
த்திலே விதைத்த விதைபோலே பொல்லாதாக
விளைந்து போகம் நிலை நில்லாது மின் போலத் தே

(தானம்)

ாறிமாயும் இடையான தானத்தியற்கையையும், விரி
ந்துக்கூறுதும். ஒருமயிர்க்கு ஒருசெத்தாக வாசசி
ாலே தம்மைச் செத்தினும வணங்கினும் தம்
முவினை யென்று தெளிந்து செத்தினவரை அழி
ந்தலும் பணிந்தவரை யாக்கலும் செய்தலையுள்ளா
ாய் மேற்கதிக்கு எல்லையாகிய அருந்தவா, மனை
யில் வந்தால் அவரை யெதிர்கொண்டு கையாற்றொ
ழுது மணி நிலத்திலே யிருத்தி யிறைஞ்சிக் கைதொ
ழுது அவரடியிற் பொடியைத்துகிலாலேதுடைத்து
ாறகழுவிப் பின்னாச் சந்தனமுதலியவற்றாலவரை
அருச்சித்து மனோவாக்குக்காயங்களின் தூய்மை
யோடு அவாக்கு நால்வகை அமிர்தத்தையுங் கொடு
படர்காண். இங்ஙனம் * ஒன்பது வகையால உத்த
மராயினோர்க்குக் கொடுக்க வேண்டும. சோற்றை
பார்க்கும் அருளிக் கொடுத்தல் இடையாய தான
மென்பர். இங்ஙனமன்றி விலங்கைக் கொன்று
சோற்றை யூட்டினார்க்கும் அதை யுண்டபாவிகட்
கும் அபபாவிகட்குப் பொருளைக் கொடுத்தார்க்கும்
உண்டாகும் தீவினைப்பயன் நமகரு அறிந்து கூறமு
டியா என்று நிகழ்த்தித் தானப்பயனை நிகழத்து
கின்றான்.

---

* ஒன்பதாவன—"எதிர் கொளலிடநனிகாட்டல் கா
ல்கழீஇ" யதிர்பட வருச்சனையடியின் வீழ்தரன், மதுரகன
மொழியொடு மனமெய்தூயரா, யுதிர்கநம்வினையென வுண
டியேந்தினர்."

தானச்சுறற்றிற்று.

## தானப்பயன்.

இறைவ! இனி மனைவியும் தானும மனமபொருந்திப புண்ணியர்க்குக் கொடுத்த தானத்தின் பயனைக் கூறுவேம் அதனைப் போற்றிககேள், இரும்பு போலவாம பிணியுயிர், பலபிறப்பினுந் தீவினையென்னுந் தீயினுடகிடநது காய்ந்து தீவினைப்பயனாகிய நீரை உண்ணுதலைக் கெடுத்து ஈண்டுச் செய்த நற்றானத்தாலே யுண்டான புண்ணிய நீரையுண்டுபோய்ப் போகபூமியிலே ஒருவயிற்றிலே சேரும்; அவ்வுயிர் ஒன்பது திங்களாலுண்டான இருநூற்றெழுபது நாளும் வயிற்றிலே யிருந்தபின் ஆண் பெண்ணாகிய இரட்டைக் *குழவிகளாய்ப்பிறந்த அளவிலே இருமுது குரவர் தமமுடம்பை நீத்துப்போய்த் தேவராயப பிறப்ப அவ்வுடல் மேகவிநாசம்போல மாய்ந்துபோம. பிறந்த அப்பிள்ளைகள், பிறர்யாரும் போற்றுதலின்றியேவளர்ந்து நாற்பததொன்பதென்னுநாளுக்குள்ளே நீர்மையுடையவாகிய உறுப்புங் கலையுங் குணமும் நிறைந்தனரென்று ஆகமத்தே அறைந்தார. பாலையாழ்போலும் மழலைச சொல்லாள, அவனை நீங்கிப்போய்ப் பகலுமிரவு மில்லாத கற்பக மரநதினிழலிலே மணிக்கொம்பு போல நின்றாள். சிங்கம் போன்ற அந்தக்காளைக் காமன் போல அக்கற்பகத்தைச சேர்ந்து ஊழாலே அவளைக்கண்டான்.

---

*"குழவியென்னும் விரவுப்பெயரின் பின்வந்த களவீறு ஈண்டு உயர்திணையை யுணர்த்துதல், †"கடிசொலில்லை" என்பதனாறகொள்க. †தொல்காப்பியம் சொல்லதிகாரம், எச்சவியல், ௫௬.

(தானப்பயன்)

யப்பொழுது இருவருள்ளமும் காதலாற் கலந்தன;
யவ்வளவிலே விதியாலே காமன், அம்பெய்ய அவ்
ிருவரும் கூடினர். அவள், அவனை நோக்கி நுங்
ண்கள் இமைத்தன; ஆதலால் நீர் என்னை யிகழ்ந்தீர்
ன்று சீற, அவன், அதற்கஞ்சி என் கண்கள் நின்வ
-வழகையும் ஒப்பனைக் கோலத்தையும் நிறையவு
ணடு முடிக்கமாட்டாதே இமைத்தன காண் என்று
சொல்லி, இளையவளது சிலம்பிலே தன் குஞ்சியிற்
நட்டிய தாமத்தைத் தீண்டு வித்தலாலே அவளது
அகத்தில் விருந்தைப் பெற்றான். பின்பு அவ்விரு
வரும், மாடத்தைச் சேர்ந்தும் காவிலே புகுந்தும
மாழைக்கேட்டும் வாவியிலாடுதற்கு நீர்க்கோலங்
கொண்டும் செல்வத்தையுடைய தொன்னலம் பரு
கிக காமமாகிய மாலையாற் கட்டப்பட்டார். வேந்
தே! தலையாயதானத்தைச் செய்த அவளும் அவ
னும தாம் விரும்பி நினைந்த வெல்லாவற்றையுங்கற்
பகமரங்கள் கொடுக்க அவற்றை நுகர்ந்து காலங்க
ழிப்பார். இடையதாகிய தானத்தைச் செய்தவர்,
கருமபூமியிலே யிருநிதிக்கிழமைக்கண்ணே மயக்க
முற்றுக் காலங்கழிப்பார்.. மன்னரேறே! ஐம்பொறி
யை யடக்காதார்க்குக கொடுத்த தானப்பயனாலே
கடலிலிருக்கின்ற தீவுகளில் உடம்பு மக்களுடம்பும்,
முகம் விலங்கின் முகமுமாய்த் தோன்றிக கனியை
மாந்திவாழ்வர் என்றான்.

தானப்பயன்,

முற்றிறறு.

---

## சீலப்பயன், காட்சிப்பயன்.

கோவே! யான் முற்கூறிய சீலமென்னும் மணிக்கமாலையைச்சூடினோர், கற்பத்தில் அமராவதி காட்சிப்பயனை நுகர்ந்தார், இன்பத்தை யகப்படுத்துச சக்கிரவர்த்திகளாவர் என்றான்.

**சீலப்பயன், காட்சிப்பயன்.**

*முற்றின.*

## வீடுபேறு.

வீட்டினது இயற்கையை யாம் கூறின், அது முக்குடையுடைய பிண்டிமூர்த்தி ஈட்டிய நாற்பொருளிடத்தே கூறிற்று. அதனையாம் கூறக்கேட்பாயாக. பொருள்களுள் உண்மைப்பொருள் இதுவெனா உணர்தல் ஞானமாம். அங்ஙனமுணர்ந்த பொருளின் தன்மை இதுவெனத் தெளிந்துவிடுதல் காட்சியாம. அங்ஙனந்தெளிந்த இரண்டையும் நீக்கமற விளங்கும்படி தம் மனத்திலே நிலைபெறுத்துதல் ஒழுக்கமாம். தோளினாய! இங்ஙனம் கூடிய மூன்றுதன்மையும் நின்றெரிந்த நெருப்பு இருவினையாகிய மரத்தைச சுடப்போகட அவ்விருவினை நெடுங்காலம் பயின்ற உயிர்க்கிழவனைக் கைவிடுதல் வீடெனப்படும. அங்குப்பெறுகின்ற பயன், அநந்தஞானம் அநந்ததரிசனம் அநந்தவீரியம் அநந்தசுகம என்னும் அநந்தசதுட்டயங்கள்காண். அறிவும் காட்சியும் வீரியமும் இன்பமும் எனச்சொலலபபட்டனவும அலலனவும் தம்முடைய குணங்க

(பிறவிகளறவுரை)

ளாலே மிக்கு வினையுள்ளார் தொழும்படி வந்து சேருதலாலே வீட்டுலகமென்பது ஒன்றுண்டு அஃது யாவராலும் அறியப்பட்டது என்றான்.

வீடுபேறு,

முற்றிற்று.

---

## பிறவிகளறவுரை.

மாதவனென்ப பெயர்பெற்ற வரையினின்றும் வீழ்ந்த அறவுரையாகிய அருவியாலே தூயசெய்யும் மலங்கெடும்படி மன்னன் ஆடி; இரத்தினப்பிரபையைநோக்கி அடிகேள்! எம்முடைய முற்பிறப்பையும் அப்பிறப்பில் யாம் செய்தபாவத்தையும் கடுக அருளிச்செய்யுமென்றான். தான் கடுகத்துறத்தற்குக்கடுக அருளிச்செய்யுமென்று வேந்தன் கூறவே, முக்காலத்தையுமுணர்ந்த அவ்விரத்தினப்பிரபை, அரசனை நோக்கிக் கடலிலுள்ள சங்குகள் நாட்டிலுள்ள நீர்வழியாய்வந்து ஊரிலே அரிசிக்கழுநீரிலே மேய்ந்து சொரிந்த முத்துக்கள், ஒழுங்குபட்டு அணையாய்க் கழுநீரைத் தடுத்தலாலே அக்கழுநீரிலே செங்கழுநீர் மலர்கின்ற தாதகியென்று ஒரு நாடுள்ளது. தென்றற்காற்று, அந்நாட்டிலே ஊர்களிலிருப்பாரது கூந்தலிற் புகையை முதற்பொருந்திப் பின்னர்க் கமுகம் பொழிலைச்சேர்ந்து அதின் மணத்தையும் பொருந்தி அந்நாடெங்கும் அவற்றைச் செலுத்தப் புகை வெண்மேகமென நின்றுலாவும் ஆகலால் அந்நாடு காக்கத்தக்கதொரு நாடன்றாய்

நாகலோகத்தின் ஒரு கூற்றின் தன்மையையுடையது. திங்களும ஞாயிறும வழிகண்டு செல்லாதபடி அகிற்புகையும கொடியும் மறைக்கும் அந் நாட்டிற் பூமிமாதிலகம என்னும் நாமத்தையுடைய பதியுள்ளது. அது நிதியின் கிழவன் விடாம லுறையும் பொன்னகரின் தன்மையை யொத்தது. அந்நகரிலுறையும் மன்னர் மன்னன் பவணமாதேவன். அவன்தேவி சயமதி. அவள்பெறறபிள்ளை அசோதரன். அவனுக்குத் தையலாரைச சேர்த்தினா. அவன் அவரை நுகர்ந்து வாழுநாளில ஒருநாள் நீர்விளையாடுதற்கு அமமங்கையரோடு பங்கயத்தடத்தைச் சேர்ந்து பகற்போதிவிருத்தலாற் பகற் கோயிலென்கிற நீராவிமண்டபத்திலிருந்தான். ஆண்டுறைந்த பாரப்பையுடைய அன்னத்திரள், அருசிக்கட்டின வெண்டாமரைமாலை போலவிசுமபிலே பாந்தது. ஆகாயமென்னும அரிவையின் கணவன், அவள் மேகலையைப்பிடிப்ப அது உதிர்ந்தாற் போல மேலேபறந்த அன்னத்திரள், பறத்தலாற்றமற் சிதறிய பொற்றட்டிலே வெள்ளிக்கிண்ணம் இருந்தாற் போன்று பொற்றாமரையிலே புகுந்தது. தையலார் கண்டு பெரும! பார்ப்புக்களைக் கொணடுவா வென்று கஞ்சுகிக்குக்கூறென்று கூற, அவனும அவனுக்குப்பணித்து அவற்றுள் ஒன்றனைப் பிடித்து அதனைத்தையலார்க்கிந்து அவரோடு கோயில்சேர்ந்தான். அம்மாதரார், அப்பார்ப்புக் கட்டுதலும் கூடிலடைத்தலும் செய்யும்பருவத்தது அன்றாதலின், அதனைத்தமது மாரபிலேயணைத்து மகிழ்ந்து

(பிறவிகளறவுரை)

நோக்கித்தாமரைத்தடத்தில் * உறைவீர்க்கு எண்டு றைகின்ற மார்பு அத்தடமன்றே. வடக்கருறைகி ன்றமார்பன்றே என்று நன்மொழிகளை நடத்திப் பா லமுதை யூட்டிப்பாதுகாத்தார். மன்னர் மன்னனு கிய பவணமாதேவன், தையலார் அன்னபபார்ப்பை த் தம்மார்பிலேவைத்து வளர்க்கின்றதைக் கண்டு, இதனைப்பிடித்தார் யாரென்றான். உழையர் அசோ தரன் என்று கூற அக † கொலைவேலவனை யண்டு க்கொணர்க என்றான். அவ்வுழையர் சென்று கூவ அசோதரன் போந்து தாதைபாதத்தைக் கையாற் றொழுது பின்னர் முடியாற்றொழுதான்.

மன்னன், பார்ப்பைத் தாய்தந்தையினின்றும் பிரித்தற்கும் தானிதைனத வாறொழுகாமல தடுத்த தறகும பயனைககேட்டையேல் அவ்விரண்டின் பய னையும இனி விளைத்தற்கு ஓர் வித்தை யொப்பாய! இங்கேயிரு. வேலோய! பெரியதீவினையின தன் மையைககூறின், அவைமறத்தை விரும்பிய நெஞ்சு வழியாகப் புகுந்து தம்மைச்செய்த உயிரோடு கூடி அதனைச்செறும. செறும்பொழுது அவ்வுயிர பெ ரிய துன்பமுறும். ஆதலால் அத்தீவினைக்கு அடிய தாகிய உயிர்க்கொலை நுமக்குவேண்டா. கொல்லா மை அறங்களுட் பெரிய அறமாம். மெய்யுரை

* "உறைவீர்க்கென்றது—ஒன்றனைக்கூறும் பன்மைக் கிளவி."

† கொலைவேலவனென்றது இகழ்ச்சிக்குறிப்பு, அரசரை பபிடியாமற் பார்ப்பைப்பிடித்தலின்.

யை யுரைத்தால் அதற்கு இம்மையிற் புகழும், மறு மையில் மேலுலகத்து மணிக்கோபுரங்களையுடைய கோயிலும், உளவாம். பொய்மொழியை மொழிந் தால அதற்கு இம்மையிற் பழியும், மறுமையில் ந ரகத்துக் கோயிலகளுமு, உளவாம். இவ்விரண்டும் ஐயமில்லைகண்டீர். ஆதலால் அப்பொய்யுரையை யுங்கைவிடுமின். களவினாலே விளைகின்ற வினையை க்கேண்மின், களவுசெய்தாரை இவ்வுலகிலே மன் னர் யானைக்கொம்புகுத்திகொல்லக்கொல்வர். பி ன்னா் நரகத்திலே அரிய துன்பங்களை அவர் நுகர் வர். ஆதலால் களவைக்கடிதல் வேண்டும். தமம னைவியர் வருந்த மாற்றாகழுத்தில் வைத்த வாள் போல கொன்றேவிடுகின்ற பிறா மனைவியரைசசே ரின் தாங்கற்கரிய துன்பத்திலேயழுந்துவர். ஆத லால் நடுங்குதலுடைய காமத்தினைக்கைவிடுதல் ந ன்று. பொருளீட்டுங்காற் செயயுங்கொடுமையை நோக்கி * அருளெல்லாம், எம்மையாளாமையினன் றே இக்கொடுமை செய்கின்றான் என்றுசிரிக்க, வை யத்தார் சிரிக்க, பொருள்களை நுகரப்பெறாது ஐம் பொறியும் வருந்த, நுகர்தற்குரிய ஐம்பொறியும் தமமை நுகர்கின்றில என்று பொருள்களும் சிரிக்க, ஈட்டும பொருள் சிறிதும் நற்பொருளலல. அஙங னம் தீவழியிலீட்டாமல் நல்வழியிலீட்டிய பொருள் இம்மையிற் புகழைவிளைக்கும் வித்தாம. மறுமை யிற்றுறக்க மேறுதற்கு மயக்கமற்ற ஏணியாம். பொய்யோடு பொருந்திய பொருளாசையையுடைய பரத்தையர், தம்மை நுகர்வார் மனங்கடகேற்பப்

* அருள்—பலவாம்.

(பிறவிகளறவுரை)

புரளும் மாயத்தைச் செய்து இன்ப நிறையப்பெய்த கொள்கலமாதலால், அது தீவினையாகிய துகளைப் புகுத்தற்கு வழியாயிருக்கும். ஆதலின் அப்பாரத்தையறைச் சேர்தலையும் வஞ்சனை மிகுந்த கவறாடுதலையும் ஒழிக. காமத்தையுடையாரும், செற்றத்தோடு ஆசையையுடையாரும், தாமத்தையுஞ் சாந்தையும் புனைவாரும், பசியாலே யில்லிலே சென்று பலி கொள்வாருமாகிய இவர் நம்மை உய்யக்கொள்ளுமவரல்லர். ஆதலின் இத்தீக்குணங்களில்லாத வாமனடியல்லாத பிற அடிகளை வணங்கன்மின். நம்பி! விலங்கையும், பறவையையும், தங்கிளையினின்று நீங்கி வருந்தப் பிரித்துக்காவலிட்டு வைத்தவர், மறுமையில் தங்கிளையினின்று நீங்கிப்பிறராற் காவல் செய்யப்படுவார். ஆதலின் நீ பிரித்துக்காவல்செய்தது தவறுகாண். அல்லித்தண்டு, அறுந்தபொழுதும் நூலறுது தொடர்ந்து நிற்றல் போலத்தமுடம்பு உயிரை நீங்கிக் கிடக்கவும், தீவினையாகிய வெந்தீ, அவ்வுயிரைப்புல்லி நீங்காது சென்று, அவ்வுயிர் புக்கதோர் மெய்யிலேதானும்புக்கு அவ்வுயிரைச் சுட்டிடும். அறம்பொருந்திய மனத்தராய்ப் பல்லுயிர்க்கும் அருள் செய்வாராயின், அந்நல்வினை, பறவையும் நிழலும் விடாது திரியுமாறு போல அவ்வுயிரை விடாமலே திரிந்து அவராற் காதலிக்கப்பட்டன எல்லாவற்றையும் சுரபிபோலக் கொடுக்கும்

*யாகத்திற்கு நட்டதறியிலே கட்டியயானை தான் கிடந்த பொய்கையையும் துணையையும நினைக்கு மாறுபோல அறிவில்லாதார், நலவினை செய்யாதிரு ந்து காமத்தையும் பொருளையும் நினைத்து ஆவிநீப பார. தவத்தாலே விசும்பிலேறி அதனையாளும் தன் மையுடையார், பிறந்தால மகளிரையும் பொருளையும நீக்கி அறத்தைச்செய்ய நினைப்பார் என்று கூறினான்.

இங்ஙனம் பவணமாதேவன் கூறவே, அசோத ரன் கேட்டு அஞ்சி உடுத்த துகிலிலேயுற்ற நெருப் பை விரைந்து நீக்குமாறு போல விரைந்து அன்ன படாரப்பைத் தையலாரிடத்தினின்றும விடுவித்து அன்று பிடித்த தடத்திலே போகவிட்டான். அங் ஙனஞ் செயதலாலே அவன் முன்னர்க் கிளைப்பிரி வைச செய்ததேயன்றிப் பின்னர்க் கிளையிடத்துக் கூட்டத்தையுஞ் செய்தான். மகளிர் வாய்க்கொண ட அமுதுபோல அவர் நினைத்த தன்மையனாயிரு ந்த அசோதரன், உடமபிலுண்டாகிய புண்ணைத்தீர் த்தற்கு முயலும முயற்சிபோலக் காமத்தை வெறு த்துப் பாவத்தையஞ்சி யிவறறை யெல்லாமுடைய பிறவி நோயை வெருவினான். அங்ஙனம வெருவி னவன், காமமாகிய நஞ்சினை நாடோறும் நுகர்ந்தே னே என்று யானைபோலப் புலம்பித்தாதையை நோக்கி அடிகள்! மகளிரைத்துறந்து தவத்தைச்

---

* "அழலெழுதித்திய மடுத்தயானை—நிழலுடைநெரு ங்கயம் புகல்வேட்டாஅங்கு" என்குரகத்திலும் அகநா னூறு, நித்திலக்கோவை கூடு நித்தியமென்பது வேள்விக் குண்டம்.

(பிறவிகளறவுரை)

செய்வேன் என்று சொன்னான். அரசன் கேட்டு மகனே! தாயத்தையடைந்து புவியைக் காத்துப் புதல்வர்க்கீந்து பின்னை நீ துறத்தியென்று சொல்ல அசோதரன், சிறையினின்றுந் தப்பிப்போமொரு வனை அச்சிறையிலே அழுத்துகின்றார் சுற்றத்தாரோ? பகைவரோ? என்றான். அரசன், பெருவிலை மணியை நடுக்கடலிலே வீழ்த்ததன்மையையொத்து வருந்தி முன்புபோன பிறவிகளில் யாம் இவற்குச் சுற்றமல்லேம; இனிப்பிறக்கும் பிறவிக்கண்ணும் யாம் இவற்குச சுற்றமாகேம். ஆதலாற் சுற்றமெனப தொன்றில்லை; இவற்குப்பட்டவாறும் இங்ஙனமே என்று கருதி அன்பாகிய தளைபோம்படியறுததான். நடததுதற்குரித்தாகிய நல்ல எந்திரத்தையுள்ளேவகுத்து வல்லவன் செய்த பாவை, ஒருநற்பொறி குலைய எல்லாப்பொறியும் குலைதல் போல அரசனது பற்றுவிட்ட சொலலாகிய எந்திரமொன்றுங்குலைய அசோதரன் இல்லறத்தை நீக்கி இரணடாயிரவரசாகள் சூழ்ந்துசெல்லத் துறவறத்தைச்சார்ந்தான். வாலைப்பிடிததுப பறித்தகாலததும் தான் அதனை விடாதவுடுமபுபோல்வாரை, யாதொருகாரணத்தாலும் இல்வாழ்க்கையினின்று நீக்கலாகாது. இஙஙனம அரிதாயிருக்கவும் அசோதரன் முற்பிறப்பிற் றவஞ்செய்து வருதலாலே தந்தை கூறியசொல்லே துறவிற்குக் காரணமாகக் கருதி மகளிரைத்துறந்து போய்க் கடவுளாயினான். அவ்வசோதரன், கடவுளான பின்னர்ப்பவணமாதேவனும், சயமதியும், அவ்வசோதரன் பெண்டிரும்,

நாற்கதியிலுஞ் சேறற்கஞ்சி நற்றவத்தின் முடிவை க்கைக்கொண்டார். சீவக! பவணமாதேவனுக்குஉ சயமதிக்கும் அசோதரனென்னும் புத்திரனுய்த் தோன்றித்துறந்து கடவுளாகிய நீ தவத்திற் கூறிய ஒழுக்கம் நாணத் தவஞ்செய்து அதனாலே சாசாரன் என்னும் இந்திரனாகி, முற்பிறப்பிற் றேவியரானவ ரே இப்பிறப்பிலும் உனக்குத் தேவியராக நீ பிறந் தாய்; மன்னா! நீ முற்பிறப்பில அசோதரனாய் அ ன்னப்பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்தாய்; அத தீவினையாலே இப்பிறப்பில் நீயும் கிளையினின்றும பிரிந்தாய்; அதனைக காவல்செய்துவைத்த தீவி னையாலே நீயும் சிறைப்படடாற் * போற்பிறர்க்குத் தோன்றினாய் என்று கூறினான். அரசன் கேட்டு த்தேவியர் சூழ மாதவர் பாதத்தை இறைஞ்சித்துதி க்க, அவர் விசும்பிற் போனார்.

பிறவிகளறவுரை முற்றிற்று.

---

## தாயத்தீர்வு.

அரசன் துறத்தலைக்கருதித் தேவியர் வருந்த அவன் கோயில் சேர்ந்து நந்தட்டனைக் கொணர்க என்றான். அவன் வந்து தொழுது அரசனே! நி னைத்தகாரியத்தை யருளிச்செய்க, என, மன்னன்

---

* போலுமென்பது † "வேறுபடவந்தவுவமத்தோற றம்" என்னுஞ் சூத்திரத்தடங்கும்; ஒப்பில் போலியன்று. இதனைத்தற்குறிப்பேற்றமென்ப. † தொல்காப்பியம், பொ ருளதிகாரம், உவமவியல், ௩௨.

(தாயத்தீர்வு)
நாட்டை நீ ஆளக என்றான். நந்தன், நாடும் துற க்கமும் வீடும் எய்திவாழும் வாழ்க்கையை யான் வே ண்டேன். யான் வேண்டுவது நின்பாதத்தை வழிப ட்டு வாழ்வதன்றோ என்று கூறி அரசன் விரும்பிய துறவையே தானும் விரும்பினான்.. யானை தன்கை யை நிலத்துவிழாமல தாங்கும் தன்மருப்பினன்றி வேறோரிடத்தும் வையாது. அதுபோல யாமும் தாங்குதற்குரிய சசசந்தன் மேலே அரசைவைத்து மென்று கருதி அவனைக்கொணர்மினென்றான். மக் களில் மூத்தநம்பியாகிய அவன் வருதலுமகாவலன் அவனை வீற்றிருத்தி * வேந்த! நீ இவ்வுலகையா ண்டு அறத்தைப் பாதுகாப்பாய். யானைக்கு நெற் கவளத்தை முறையாலரிந்து நாளும் ஊட்டினால அதற்குணவுமாம்; அழிவுமின்றாம்; அங்ஙனம் ஊட் டாக்களிறு கழனியிலே தானேமேயின் உணவுமின் றி அழிந்துவிடும. ஆதலால் மன்னன் முறையா லே இறைகொள்ளின் உலகு அவன் வழிநின்று பயன் படும. நம்பி! உலகத்து மக்கட்கெல்லாம நெல்லு முயிர்; நீருமுயிர்; யான் கூறுமளவில், இரண்டுஞ்சிற ந்தவுயிரல்ல ; அவர்க்குச்சிறந்தவுயிர் மன்னாகாண. ஊரவல்லவன் தேரை ஒத்தநிலத்திலே யூருமாயின் மிகப்பலகால் நடக்கும்; அதனையூரும் நிலம் இது வென்று அறியாது ஊருமாயின், அதுவும் முறிந்து தானும் வீழும்; வேந்தர்தன்மையும் அத்தன்மைத் தாம். நாந்தகவுழவரேறே! † யானை ஒருவனைக்

* வேந்தவெனறான், மேல்முடிசூட்ட கருதுதலின.
† "களிறுகவுளடுத்த வெறிகற்போல — லொளித்த துப்பினை" என்றார் பிறரும். புறநானூறு, ௬௰.

காய்ந்தெறியுங் கல்லேக் காலம் வருமளவுங் கவணிலே மறைத்துவைத்தல்போல வேந்தர், பகைவர் மேற் சென்ற கோபந் தோன்றாராய்ப் பொறுத்தாரென்று அவருட்கொள்ளும்படி அக்கோபத்தைப்பொறுத்து அவர் விரும்புவனவற்றை யெல்லாம் ஆராய்ந்து கொடுத்து அவரை யழிக்கின்ற எண்ணத்தை மறைத்தல்காண் அவ்வேந்தர்க்கு நன்பொருளாவது. குமரனே! புகழ்கெடுதலையஞ்சிப் பொய்ம்மொழியோரெழுத்தையுங் கூறாதேகொள்; கலைகளாகிய கடல்களைநீந்தி வெற்றிக்கொடியை யெடுத்த அமைச்சர்கரு எப்பொழுதுமருள். இவையேயன்றிக் குடிமக்கள் பழியாமற் பாதுகாப்பாயாயின், பின்னை மன்னர் நின்னடியிடத்தே வீழ்வார்காண் என்று கூறிச் சச்சந்தனுக்கு முடி சூட்டி அவனுக்குப்பின்பு இலக்கணைபெற்ற கோவிந்தன் அரசாளும்படி யுரிமைகொடுத்துக் குணமாலை முற்பயந்த மைந்தனை * பட்டங்கட்டி இளவரசாக்கி † நந்தட்டனை

* பட்டங்கட்டி இளவரசாக்கி என்றது—தன் குலத்திற்கேற்ற நுகர்ச்சியை யெய்தும் அரசவுரிமையை.

† "படையுங் கொடியும்" எனனுஞ் சூத்திரத்தான் அரசர்க்கே முடிகூறினமையானும், ‡ "அந்தணாளர்க் கரசுவரைவின்றே" என்னுஞ் சூத்திரத்தான் அரசில்வழி அந்தணரே அரசியல் பூண்பரென்றமையானும், $ "வில்லும் வேலும்" என்னுஞ்சூத்திரத்தான் மன்பெறுமரபினோர்க்கு முடிகூறாமையானும், நந்தட்டன் புதல்வனை முடிசூட்டினானென்றல் பொருந்தாமை யுணர்க."

† தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், எக.

‡ ,, ௸ , ௸ , ௸ , அஉ

$ ௸ , ௸ , ௸ , அரு.

(துறவுணர்த்தல்)

புதல்வனுக்கு முடிசூட்டினன். சூட்டி, ஒழிந்த தன் மக்களுக்குத் தேர்களையும் யானைகளையும் நிதியையும் நாடுகளையும் கொடுத்துத் தன் தோழர் தனக்குச்செய்த தொழில்களை அவர் மக்களும் தன்மகனுக்குச் செய்யும்படி அவரை அசசச்சந்தனுக்குக் கண்களாக காட்டித் தேவியரை இல்லறத்திற் பற்றை விடுதற்குக் கோயில்சேர்ந்தான்.

தாயத்தீர்வு முற்றிற்று.

## துறவுணர்த்தல்.

அரசன், தேவியரைத் தம்பினென ஏவலர் சென்று வேந்தன் திருவுள்ளம் நீங்கள் தன்னிடத்தே வருவதாயிருந்ததென்று கூறினர். நன்றமயில் போலும் தேவியர், தின்னப்படுகின்ற கருப்பூர வொழுங் கால் திரண்டதாமம், தீம்பூ மிகவும் ஒளி செய்ததாமம், பூந்தாமம், பொன்தெளித்ததாமம், முத்தத்தாமம் மின்னென்று தெளிவித்த மணியினது ஒளிதங்கியதாமம, ஆகிய இத்தாமங்களிடையே கிடந்தமணிககால மளியிற் புகைமல்குகையினாலே மணமெங்குமயங்கி நுரைபோற்றோன்றும் அணையினின்றுமிழிந்து சென்று மன்னனடியை வணங்கிநின்றார். வேந்தன் அவரைப்பார்த்து நும்முடைய மனம் பரந்தமன

மாயிருக்கும் அதனை யொருப்படுத்திவைத்து உறுதியாகிய காரியத்தைக் கேட்பீர். பிறை நுதற்பிணையனீரே! ஆராயுமிடத்து வலம்புரி கடலிற்பிறப்பினல்லது குளத்தினுள் எந்நாளும் பிறவா. அதுபோல உத்தமதானமும் அருந்தவமும் மண்மேற் செல்வமுடையார்க் கல்லது மிடியர்க்குண்டாதலில்லை. குன்றத்தல்லது வைரந்தோன்றா. குளத்திலல்லது குவளைபூவா. அங்ஙனம் தகுதிப் பாட்டையுடையர்களன்றி இவ்வுலகிற் பகுத்துண்பாரில்லை. அரசன் கோயிலிலே தேவியா பரவித் தெய்வங்கட்குக் கொடுக்கும் பெரும்பலியாகிய சோறுபோல மிகக் கொடுத்தல், மிடியர்க்கு அரிதாயிருக்குமாயினும் மகளிர் தத்தம நிலைக்குத் தகும்படி தம்மனையிற் றூண்களிலுறையும் தெய்வங்கட்குத்தூவும பலியளவும் ஈவாராயின், அத்தானம் பின்பு அவர்க்கு மேருவாயிருக்கும். பற்றற்றவாக்குச சோறு கொடுத்தல், துறக்கத்திற்கு வழியாம. கொலைகடிந்து தேனையும் ஊனையும் துறப்பாராயின் அவர் சிலர்க்கு மண்ணும் விண்ணும் வந்து வணங்குதற்கு வேறு சில அறம் கூறவேண்டுவதில்லை. நுமக்கு அவ்விரதங்கள் முன்னரே உளவாதலால் மேல் அவ்விரண்டும் நும்மடியிடத்தவன்றே. முன்னர்க் கள்ளுண்ணாமையாகிய சீலத்தைக்காக்குஞ் சிறியவுதவியை யுடையார், சோலையில மகளிர் தோளிலே விளையாடி ஞாலங்காக்கும் வேந்தராய் ஈண்டிருப்

(துறவுணர்த்தல்

பார். முற்பிறப்பிற் பிறர்க்கிட்டுண்ணுதார், பின்பு அழுக்கினையுடையனவாகிய சிறிய சீலைகளை முள்ளாகிய ஊசியாலே தைதத தையல் மொய்த்த ஆடையைக் குளிர்மிக்க காலத்திற்கு உடையாகக்கொண்டு ஓட்டையேந்திப் பாவாய! பிச்சையிடுக என்று கூறிச்செல்வா மனையுட்புகக் கூசிக் கூசி நிற்பர். வல்லாளொருவன் பிடித்தற்கு ஓடுங் கலை ஓடவல்லதாயின் அவனைத்தப்பியும போம. அங்ஙனம் தப்பாதபடி கூற்றுவன், நம்மை யோடியுயிரைவாங்கி மதுப்போலேயுண்ணும். கோதையீர்! யான் முற்கூறியவாறேயன்றி வேடர்கையிலேயகப்பட்டு நல்வினையாற் பிழைத்துப்போம்புட்களுமுள. அதுபோல யாமும நல்வினை செய்யின் அக்கூற்றத்தைத் தப்பிப்போதலுங் கூடுமென்று காண்மின். திங்கள், சாதலும் பிறத்தலும தேய்தலும் பெருகலும் யாக்கைக் குண்டென்பதை அறியாதார்க்கு அறியக்காட்டிச் செப்பாநிற்கும். அதனைக் கண்டும் நல்லறத்தைச் செவிக்குள்ளே சொரியினும் அதனைக் கேட்டும மனங்கொள்ளாதே கைவிடுதல் தீவினையின் கூறும். சுககிலம் பைக்குள்ளே வீழ்ந்தது, பெருந்துப் புற்கென்ற தசைபாக்து தான் புக்கவழியாலே புறப்பட்டு, அறிவுண்டாய் அறத்தை நன்றென்று கொள்ளுமாயின், அது பிறவியைத் தப்பிப்போமபடியாகக் கடல்போலப் பெரிய வீட்டின்பத்தை விளைவிக்கும. சுக்கிலமும, குருதியும், பெருந்துத் தசைதிரண்டு உய்ந்து இடையறுது ஊறு நீரையுடைய சிறு வாயிலாலே போந்த

பின் அறிவையுடைத்தாய், அறத்தை நன்றென்று கொள்ளாதாயின், செல்கதிக்கு நல்வினையாகிய பொதிசோற்றைப் பெறாதேபோய் நரகத்தே கிடந்து அழுதலறி மீட்டும் அக * குறும்புழைக்குள்ளே அழுந்திவீழும். வேற்கணீர! யான் கூறிய நல்லறமாகிய கற்பகம், வீடேயன்றிப்பொருளையும போகத்தையும் பூத்தலால் அறத்தை மறத்தலைப் பாதுகாப்பீர். உலகத்தில் மந்திரமும் மருந்தும் இல்லையாயிற் பாம்பைத் திணடித்தம வயத்ததாக்குவாரிலலை. அதுபோல நன்றாகிய நறுநாற்றம் தமக்கில்லையாயின் மைந்தர், மகளிரருகே சென்று அவரைத் தம் வயத்தராக்குதலிலர். பொனனனீர்! நீ ரெல்லீரும முன்னர்ப் பாகுதின்று விழுத்தக்கீராயினீர். இன்று பாகுதின்னமல் எம்மருங்கிருந்து சிறுவரையானும் சில சொற்பேசுதலரிது. அங்ஙனம் பேசினுல ஒரு துலாம் பொன்தருவேம். பொன்னனீர்! ஐயோடுகூடிய பித்தையும குருதியையும் புன்றோலையுமுடைய அழுகலசும்பு சோருமெய்யிலே, முன்னேயணிந்த சாந்தும் பூவும் கமழுமாயினும் பின்னுமசாந்தும் பூவும் கொண்டல்லது கூடலாகா. நாம்பிறந்தபொழுதே யிஙஙிச செத்தேமலலேமோ என்றும் தீவினையுற்றபொழுது நடுங்குவேம் என்றும் எண்ணிப் பழுதிலா அறிவினுலுண்டாந் தனித்தசித்தத்தை நிலைபெறவைக்கலைத தெளியேம். ஆதலால யாமுய்யுமாறு எங்ஙனே. தையலீர்! மணியினது நீலநிறத்தைக் கொண்டமயிர், அவ்வுருவநீங்கி வெளுத்துத் தனமும் பைபோல நான்று கண்களும் இ

* குறும்புழை—இடச்கர்.

(அந்தப்புரவிலாவணை)

மையழுகிக் குறைந்து மேனியொளிகெடுமூப்பு மேல நம்மிடத்தே வருமன்றே; அதற்குமுன்னே துறப்பீராக. யானையுயிர்த்தாற்போன்ற ஓசையை யுடைய தாளிப்புக்கமழும் அடிசிலையுண்டவா, பின்னர்ப் பிச்சையென்று கேட்டலாற் செல்வத்தில் ஆசையென்க்கில்லை அரசாட்சியை யஞ்சினேன இனி யான் துறப்பேன என்று சொன்னான்.

துறவுணர்த்தல்.

முற்றிற்று.

## அந்தப்புரவிலாவணை.

ஒருவர் மேலே இருவர் உடன்றுபொங்கி யெழுந்திருப்பின் அவவொருவர் வலிகெடுமென்று சொலலிககாட்டுவன போலே நசுப்பு வருந்தவீங்கிய தனஙகளையுடைய கொம்பனீர்! இதற்குமுனபு கழிந்த நாளிலெலலாம இல்லறத்திற காதலையுடையேம். அறஙகேட்டதற்கிப்பால் அதனைக்கைவிட்டதன்மையை யுடையேம் என்றான். என்றதைத் தேவியர் கேட்டுக்குழல் ஏங்கியழுமாறு போல அழுது அவனடிமுதலாக முடியளவு நோக்கிக கூறுகின்றார்.

குவிகச் சேற்றிலே முளைத்துக் குங்குமங்கலந்தபனி நீரிலே வளர்ந்து வண்டாகிய பாணர்பரிசில பெறுதற்குப் பொலிகெனப் பாடப்பூத்ததாமரைப் பூக்கள் போலுந் திருவடிகளே! யாங்கள் நம்மிடத்

துப் பிழைத்ததுயாது ? அதனையுரைமின். முன்னர் எமக்குத தவிசாகி யெமமைச்சுமந்து ஆளுந்தன்மை யையுடைய குறங்குகாள்! நீங்கள் அளிக்கத்தக்க பெண்ணுயிராதாம, அளியாக்கால் வருந்துமென்று நினையிராய் விருந்தினர்போல நின்றீர் இனிவெற்றுடலைக் காண்பீர். எமக்குக் கோதையும் துகிலும் ஏந்திக் குங்குமமெழுதித் தாதுவை அளகத்திலேயப் பித்தனங்களைத் தைவந்து சேர்ந்து காதல் கொண்டிருந்த விரல்களே! எமமையருளத்தக்கநீரும் ஏதிலராகிக் கோமான் எணணியதனையே எணணினீர் இதுஅறமோ? தோள்காள்! அரசன்இனி நுகரேமென்று கைவிட்ட எம்மை நீர் அணைத்துத்தழுவிக் கொள்ளீர். இனிநீரும் நெஞ்சம் வலியீராகி நிற்பீரோ? எங்கட்கு அணையாயமார்பே! எம்மோடு கொண்ட நட்புக் கைவிட்டு நீங்கின், நற்குணம் யாரிடத்துள்ளது கூறுய். கழுநீர்த்தாரே! நீ யெமமார்பைத்தாக்கி நெருக்கினுய் அங்ஙனம் நெருக்கிய நீயும தாணிமன்னவன் போலே எம்மை நீக்கிப் பாதுகாவாயாய்க் கைவிடுகின்றுயோ. செவ்விய நாவே! மன்னன் போல நீயும அருளின்றி யெம்மை அழித்துக் கூறத்துணிந்தனே. இங்ஙனம் கூறுதற்கு எமமிடத்துக் கண்டகுற்றமயாது அதனைக்கூறு; கூருயேல், நீ இரண்டு நாவாயேவிட்டாய். கண்களே! நீர் எமமைப் பார்த்துப் பேரின்பத்தைக் கொண்டு எமக்குப் பேரின்பத்தைத்தந்தீர்; இங்ஙனம் இன்பம் தந்தநீா துன்பமாகக்கருதி அருளிலீராயினீர்; எமது வண்ணம கெட்டபடியை இனிக்காண்பீர். முடியே! அரசன் எம்மைவணங்கவும் நீ அவன்சென்னிமேலே

(அந்தப்புரவிலாவணை)

யிருந்து எம்முகிழ்நகை தோன்றுமோ வென்று மு
ன்புபார்த்தாய்; இன்று எம்மாவி வருந்துதலையும்
பார்த்தாய்; நின் வழிபாடு பொய்யாயிருந்தது எ

அரசன் தன்மை இங்ஙனம் தீர்ந்தமையால்
இனிப் பாற்கடலும் நஞ்சாய் விளைந்தது. வெ
ய்யோன் தன்னிடத்தில்லாத இருளை ஈன அது
பாரை மறைத்துவிட்டது. திங்கள் திசைகளெல்
லாம் தீயைச் சொரிந்தது. ஆதலால் ம்தவிர்காள்!
யாம் எமமாவியைத் தரிக்கமாட்டுகிலேம் அதனைத்
தரிக்குமாறு எங்ஙனம் என்று கூறி அரசனை நோ
க்கி யாழ்வென்று தத்தையைக்கொண்ட நீ இங்ங
னம் கைவிட்ட நிலையில் என்னவுறவு கொண்டீரா
விர். யானையால் வருத்தமுற்ற குணமாலை பொரு
ட்டு அவ்யானையை வருத்தி அவளை மணந்து உறை
ந்தாய். அங்ஙனம் உறைந்த உனக்கு இன்று அவ
ளும் இன்னளாயினளோ. பாம்பின் நஞ்சுடையும்
படி நோக்கிப் பதுமை வாய் அமுதாகக்கொண்டு
கூடின நினக்கு அந்நஞ்சு தீராமனின்று ஊறிற்று
காதோ. சுரர் கொண்டுபோகின்ற † அமுதம் தக்க
நாட்டிலே வீழ்ந்ததென்று கருதி விரும்பினையே. அ

---

* இதுதுணையும் அவயவங்களை நோக்கிக் கூறிற்றாக
த்தொடர்நிலைச் செய்யுளிற் றேவர் கூறியவாறு ஈண்டுக்
கூறப்பட்டது. †"சொல்லாமரபினவற்றொடு கெழீஇச்செ
ய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கியும்" என்னும் பொருளி
யற் சூத்திரத்தாலென்றுணர்க. † தொல்காப்பியம், பொரு
ளதிகாரம், பொருளியல், உ.

† அமுதமென்றது—கேமசரியை.

வ்விருப்பத்தை இன்று விடடாயோ * இவள்பெ ருட்டு அரசனுக்குச் சிலைத்தொழிலைக் காட்டி இவ ளைபெற்று இன்புற்ற நீர் இக்காலத்துத் துறத்தல் அறமாமோ. இராசமாபுரத்து வீதியிலே புகுந்த நீர் விமலை கண்வலையிலே யகப்பட்டீர். அவ்வலை பட்டவுமக்கு அக்கண் இன்றுவாய் ஒளிகெடடுக் குறைந்தனவோ. கோவே! இளையரும் முதியரு மாகிய மங்கையர் காப்ப அக்காவலை † மகிழந்தாளை நீ மகிழந்து பார்ப்பானுய்ச்சென்று பாட்டாலே சே ரத்துக் கூடினுய இனி இங்ஙனம் துறத்தல நினக்கு த்தகுமிப்பாடோ. தோளாய்! எமமுடைய மதுவை மடுதது-கொடுத்து இலக்கணையோடுசோநதாய் அங ஙனம் சோநத நீ அவள் நடுங்க அகல்வாயோ என ரூா.

அந்தப்புரவிலாவணை.

முற்றிற்று.

---

## கோயில்விலாவணை.

தேவியர் கலங்கி நெஞ்சுருகிக் கல்லும் மரமும இரங்க அங்ஙனம் கூறிப் பூப்பரிவார்; கலம்பரிவார்; வளை புடைப்பார்; தாமம் சிந்துவார்; ஏங்குவாராயி ஞர். அதுகண்டு எல்லாத் திசைகளிலுநின்ற மக ளிரும் சேர்ந்து அழுதலாலே கோயிலிலே கட

---

* இவளென்றது— கனகமாலையை.

(நகரவிலாவணை)

லொலிபோலே ஒலியுண்டாயிற்று. அவர் அழுங் தால் மயங்குதலாலே, பெரியமுழவமும யாழும ஒலிகெட்டுக் குழலுமூதாவாய்க் கஞ்சதாளமும் கிண் ணி முதலியவும ஒலியாவாய் வலம்புரியுமூதாவா யொழிந்து அரசன் கோயில் ஆரவாரமற்றது. அண் ணலுடைய யானைகளும் குதிரைகளும தாமுண்ணு பாய் அழுது வருந்தின. மேற்றேவா வணங்கும் ழலானது நகரம் கடல்போற்கலங்கிற்று.

கோயில்விலாவணை.

முற்றிற்று.

## நகரவிலாவணை.

அரசன் துறத்தலாலே அடுக்களைகளிலும் கோ ல்களிலும சோறிடுஞ் சாலைகளிலும் நெய்யாற் பாரிதத பொரியலும் பல காயங்கள் நிறைந்த பாறிக்கறியும் தாளிக்குங்கறியும துவட்டினகறியும ளாந்த் வாசம், ஊர் நிறையத் தோன்றுதலின்றாய் வ்விடங்கள் உயிர் சென்றாற்போன்றன. ஒரோ வாரவிழ் கொக்குகிர்போலு நீட்சியையுடைய மு லைமுனையாற் செய்த பந்துபோலத் திரட்டுதல் காண்ட சோற்றையும புலிக்கணபோன்ற நிறத் தயுடைய கருணைக் கிழங்கையும் மாங்கனியையும் யிரோடேந்தி விரும்பினார்க்குக் கொடுக்கின்றவீதி, ரசன் துறவினால் வருந்தி விரும்புவாரின்மையால்

அவவரைபமெபருமல் வெறுநிலமாய்க் கிடந்தன். மை
நதா மகளிர்க்கு எடுத்த தேறலை அன்று எடுத்தலை
செய்யார். மகளிரும் இழை முதலியவற்றை யண
யாா. நகரிலுள்ளாரும நாட்டிலுள்ளாரும அரசெ
முன்னாகத துறத்தற்குச செல்வத்தைத் தமது பு
ல்வர்க் களித்து அறிவுடையோன் தாளைசசார்ந்தா

நகரவிலாவணை.

முற்றிற்று.

## துறவுவலியுறுத்தல்.

அங்ஙனம் சார்ந்த அளவிலே அரசன், அழு
ன்ற தேவிமாரை நோக்கி நாம் தவததையும் ஞால
த்தையும சேரநிறுப்பின், ஞாலம, தவத்திற்கு வெ
சிறு கடுகளவு நிறையாற்றாது. அதனை யுணாந்
அத்தவததே நிற்பின் திருமகள் என்றும நம்மை
நீஙகாள். நாம பறறோடு நிறபின திருமகள நட
மைப்பற்றுதல செய்யாள். ஆதலாற் பற்றுவிட
டுத் தவஞசெய்மின். யாணும சுடுகாட்டிலே ப
டைமேலே கிடந்து *புலைமகன் ஒருகையாலே ட
முககலாகிய பலியையிட்டு நீரையுகுபப அவறறை

*புலைமகன எனறது— புரோகிதனை. அவன தன
குலத்திறகுரியன செய்யாது அரசன குலத்திறகுரிய தொ
ழில்களை மேற்கொண்டு நிற்றலால். புலையனேவப் புன்ே
லமர்ந்துண்டு என்றும் †இழிபிறப்பினோனீயப் பெற்ற
... நிறைந்த நினர். †புறநானூறு ௩௬௩.

(தேவிமார்துறவு)

புண்டுகவிழ, நீரும் கண்ணீரால் மெழுகிவாழ இப் பயனில் பொருளை விரும்பாநின்றீர். அதனை விட்டு இப்பயனுடைய பொருளைக் கேட்பீர். யானையை உணவாகப் பார்க்கும் யாளி, எலியை யுணவாகப் பார்த்திருத்தலில்லை. அதுபோல அறிவுடையோர் வீட்டின்பமாகிய அமுதைப் பருகுதலன்றிச் செல்வமாகிய நஞ்சினைப் பருகி அதனுள்ளேயழுந்துதலில்லை. அத்தன்மையை நோக்கி நீரும் நோற்பீர். பலபிறப்பிலும் தனக்கு மனைவியராய் வந்தவர், இப் பிறப்பில் தவஞ்செய்து வீடுபெற வேண்டுமெனவும் காதலுடையான், தேவியரை நோக்கி இருவினைக் கடலை நீந்தித் துறக்கத்துக்கு மேலான வீட்டின்பத்தை விரும்புவீராயின், இன்று என்னுடனே துறத்தற்கு வருவீராக என்றான். தேவியர் கோவே! நீ செல்லும் வீட்டுலகின் கண்ணே அடியேமும் வந்து இன்றுபோல நின்னை வழிபடுவோம் முனிந்தருளாதொழிக என்றார்.

துறவுவலியுறுத்தல்

முற்றிற்று

---

## தேவிமார்துறவு

வேந்தன், தேவியரை விசயையிடத்தே வைத்தலும் தேவியர் தம்மெய்யணிகளைத் தாமேநீக்குகின்றவர், கொம்பும் வல்லியும் தம்மிடத்துள்ள மல

ைத்தாமேசிந்துகின்றதன்மையை யொத்தார். பி
னர்க் கற்பகக்கொம்புகள், நீலக்கதிர்த் திரளைக்கழி
பனபோலக் கூந்தலை மனோவாக்குக் காயங்களா
அடங்கியிருந்து உகுத்து நற்குணத்தையுடைய பெ
ம்பொற் கொடியாயினர்.

தேவிமார்துறவு

முற்றிற்று

## பெரியயாத்திரை

வறுவியோமென்று இரந்தவர்க்குக் கலஞ்செ
ரியும் அரசனது கையிணைகள் இரண்டுசெங்கதிபே
ன்றன. இரப்போர் மேலன்பற்று அவர்க்கிடம
ட்டாத உலகங்களிலுள்ளோர் கொள்க என்று கொ
டுத்த வேந்தனதுகைகள் பதுமநிதியை யொத்தன
துகில் முதலியவற்றை உலகநுகரும்படி கொடுத்
இறைவன் கற்பகமாயினன். வேந்தன் அங்ஙனம்
கொடுத்தபின்னர் விசயையைத் தொழுது வாழ்
திச் சிவிகையிலேறினன் அப்போழுது தேவர்கொ
ண்டுபோயினர்.

பெரியயாத்திரை

முற்றிற்று

---

## சமவசரணவருணனை

வேந்தனைத்தேவர் கொண்டுபோகின்ற பொழு
துவீணையினரம்பு மிக்கிரங்கின. குழல்உயிர்த்தன
முழவம்இயம்பின. கஞ்சதாளம் ஓசையைக் கொ

(சமவசரணவருணனை)

பித்தன. பூமிக்கு ஐயாயிரம் வில்லுயரத்திற்கு மே லே பன்னிரண்டு யோசனை அளவுள்ளதாய்ப் பூமி யிலிருந்து இருபதினாயிரம் படிகளைக்கொண்டதாயச் சைத்தியப்பிராசாதபூமி, காதிகாபூமி, வலலிபூமி, உத்தியானபூமி, துவசபூமி, கற்பகவிருட்சபூமி, நவஸ் தூபாபூமி, துவாதசகோஷ்டபூமி, பிரதமபீடம, து விதீயபீடம், திருதீயபீடம், என்னும் பதினொருபூமி களையுடையதாய், சௌதருமேந்திராதி தேவாகளால் நிருமிக்கப்பட்ட சமவசரணம என்னும' சினாலயம தோன்றுதலும் பலருமேத்திப்பாடியாடினர். கிட ங்குசூழ்ந்து புள்ளொலிகைப்பட்டோங்கிய கோயில், இவ்வுலகிலில்லையாயின் துறக்கநன்று. இஃது உள தாதலால் துறக்கம் தீதாயிற்று. சீவகன், கோயிலை நோக்கித்தொழுது சேர்தலும் மணிவரைத்தலையி னின்றும் பரிதியையொத்து *இறைவன்தோனறி னான். அவ்வாமன்முகம அருக்கனாகத் தேவர்முக ங்களலர்ந்தவை, பூத்ததாமரை போன்றன. அப பொழுது மன்னனுக்கு இறைவன் மேற்சென்ற கா தலாலே யிருவினை கெட்டன. மெய்மமயிர்கள் சி லிர்த்தன. கண்கள் உவகைநீரைச சொரிந்தன. ம ன்னன், இறைவனை வலம்வந்தான. அப்பொழுது முத்துத்தாமமும் மாணிக்கத்தாமமும் பொற்றாமமு ம் பவளத்தாமமும் மலர்த்தாமமும் அவவிடத்தே நிறைந்தன. அப்பொழுது அமரா கவரியையேந் தி இறைவனைச் சூழ்ந்துவீச, முக்குடைசொரிந்த

* இறைவன்—சீவவர்த்தமான சுவாமிகள். அவா இ ருபத்து நான்காந்தீர்த்தங்கரர்.

கதிர், * இந்திரநீலமணியினிருளைப் பருகாநின்றது. அப்பொழுது † வீரன் பிண்டி, மூழாப்போலத் திரண்டதாமம நான்று வாடாத்திருமலர்பூத்து வண்டினாநதங்குதலாலே வளைந்து குயில்கள் கூவும்படியாகப் பரந்தது. அப்பிண்டியின் நிழலிலே இறைவனை தோன்றினான். இனி இவ்விடத்தே அறமாகிய அமிர்தமுண்டு அதனையுண்மின் என்று கோயில் திருமுற்றங்கள் ஆரவாரத்தைக கொணடன. தேவர், பூமழை சொரியாநிற்க அரசன் பிறவியைக் கெடுக்கும உத்தமனுடைய அடியை யேததுதற்கு அணுகலும உழையர், அடிகள்! இவன்குலம குருகுலம; இவன்பெயர் சீவகன்; இவன்கோத்திரம் காசிபகோததிரம் என்று சொல்லுவர் என்று கூற, அரசன வணங்கித்துதித்து யான்துறப்பேன் என்று கூறினான். அதுகேட்ட புங்கவன், நினமனம துறவில் விழைநத மையால் நீதுறத்தலே மாட்சிமை யென்று சொனனான்.

சமவசரணவருணனை

முற்றிற்று

---

## சீவகன்றுறவு.

அறிந்தாருடைய கோவே! இப்பிறவியை யஞ்சினேன்; இப்பிறவியால வருந்தாதவர், நின் திருவ

---

* இநதிர நீலமணி என்றது சமவசரணத்தை—அது இந்திரநீலமணி மயத்ததென்று நூல் கூறலின்.

† வீரன்—சிவவர்த்தமான சுவாமிகள்.

(சீவகன்றுறவு)

டிகளை வலம்வந்தார் *போலும். உலகைக்காக்கும பிண்டியின்கீழிருந்தவாமனே! நின் குணத்தை நா ஞூமபாடாதாரை இறைவனென்று உலகம்பாடாது; நின்னடிப பூசசூடாதாரடிகளைத் தேவா தமமுடிகளி ற்சூடார்; ஆதலால் யான நின்னைபபாடி நின்னடியை சசூடுவேன்; என்று துதித்துப், பல்லுயிரையும் பா துகாத்து மேனேக்கி விளங்கி யுலகம் பசியும் பகை யும் நோயும் இருளும் நீங்க விழிக்கும் அறவாழி யையுடைய எண்ணிறந்த குணக்கடலை, ஞானத்து க்கு வரம்பானவனை இறைஞ்சிச்சென்று கௌதமா, வாயுபூதி, அக்கினிபூதி, சுதன்மா, மௌரியா, மந்த ரா, புத்திரா, மைத்திரேயா, அகமபனா, அசேலகா, பிரபாஸா, என்னும் கணதரா பதினொருவரிலொரு வரான சுதன்மா கோயிலை வலங்கொண்டு தலைமயிா போலபபேணி வளாத்த கைவினைச் சித்திரக்கா வைச் சேர்ந்து அணிகலஙகளையும் துகிலையும் குஞ்சி யையும் நீக்கினன். சுரும்பினமம வருந்த அரசன் களைந்த மயிரைச் சுதஞ்சணன கொண்டுபோய நாலு கடலைக்கடந்து பாற்கடலிலே நமோ என்று போகட்டு வந்து, துறந்த மகிழ்ச்சியாலே இறைவ னைத் துதித்திருநத இவ்வடிகளுடைய வாய்சசொற் களைப்பயனின்றிச் † சாவாகிடந்தார் கேட்பாராயி

---

*"போலுமென்றது †"ஒப்பில் போலியுமப பொரு ட்டாகும்" என்றதனுற பொருடந்தே நின்றது." † தொல காப்பியம், சொல்லதிகாரம், இடையியல். ௩௦

† சாவாகிடந்தார். உண்ணுகிடந்தான் போல நிகழ் வுணாத்திற்று.

ன், அப்பொழுதே தேவராய்த் தோன்றுவர் என்று தன்னருகு நின்றாக்குக் கூறித் தன் கோயில்புக்கான். பின்பு சீவகசாமிக்குச் * சுருதஞானங்கள் நிறைந்தன. நந்தட்டனும் தோழன்மாரும் துறந்து இருடிகளாய் அஞ்ஞானஞ் சேராத சுருதஞானத்தைக் கொண்டார். சீவகசாமியும், திரளும் சீவர்த்தமான சுவாமிகளடியைச் சேர்ந்து ஏத்தி முனிக்குழாத்தினடுவே சேர்ந்தார்.

சீவகன்றுறவு
முற்றிற்று.

---

## சேணிகன் வரவு.

மகதநாட்டிலே இராசமாகிருகமென்னும நகரிலே அரசனுன சேணிகன், அரசர் சூழ இருநது பிண்டிவேந்தன் திருவடிக்குப பூசனைசெய்யப்போகற்கு முரசறைவித்தான். அறைவித்தவன் கோலத்தின்று நாவழியால் நா வழித்து வெந்நீரையுமிழ்ந்து முகவாசத்தை வாய்க்கொண்டு வெண்படையுடுத்துச் சந்தனத்தை மெழுகிக் கலன்கள் மாலைகள் பலதாங்கி ஐராவணத்திலேறி நகரார் சூழச் சென்று பூப்பலிகொண்டு இறைவனடியை இறைஞ்சியேத்தித், தவத்தையுடைய சீவகனை நோக்கி இறைவனெனி ஒள்ளிய நெறியைத் தப்பிப்போயிருந்ததோ? அன்றி இவன்தான் விண்ணவனே? எ

* சுருதஞானம் அக்ஷராத்மகம், அநக்ஷராத்மகமென இருவகைப்படும்.

(சேணிகன் வினு, கேவலோற்பத்தி)

ன்றெண்ணிச் சுதன்மரென்னுங்கணதரரை நோக்கி விண்ணவன் இழிந்து துறந்திருப்பக கண்டேம்; இறைவன் கூறியஆகமம் தப்பிறுனென்று கூறினு ன். கணதரர், மன்னவ! தேவரும் போகபூமியோரு ம்சிறிதும் துறவார்; இறைவனுகமம் கூறியவாறன் றி எப்பொருளும் தோன்று என்றூர். சேணிகன, கணதரரை நோக்கி இவனவடிவமே தேவனெனறு வாயவிட்டுக் கூறுநிற்கும; ஆதலால் யான் இஙஙு னம் கூறினேன் என்றுன்.

சேணிகன் வரவு.

முற்றிற்று.

---

## சேணிகன்வினு.

கணதரர் சேணிகனை நோககி உலகில் இவனுக்கு ஒப்பிலலை; அழகும் ஒளியும் நீ கூறிய தெய்வததன் மையாயே யிருக்கும் என்றூா. சேணிகன், சீவக சாமி முற்பவங்களிற் செய்த தவங்களையும, ஈண் டுபபறறற்றுத் துறந்தசெயதிகளையும், அடிகள்! இய மபுமின் என்று இறைஞ்சி யேத்தினன். சீவகன் சரிதம் கணநாதராலே சொல்லப்படடது.

சேணிகன்வினு,

முற்றிற்று.

---

## கேவலோற்பத்தி.

சீவகசாமி முந்திரிகைப் பழத்தையுடைய சோ லை சூழ்ந்த குன்றிலே சென்று தவஞ்செய்தான்.

அவ்வளவிலே தேவிமாரும் நந்தட்டனும் தோழன்மாரும் அவ்வரையிலேறி அவன் * சரியை கோடற்கு அடிமலர்களைப் பரவ, அவன் வேண்டாவென்று கையினை மறித்துச் சிறிது கைக்கொண்டு ஓர்யாண்டாக உணவொழிந்து உயிரைப் பாதுகாத்து வீடு பெறுதற்குக் காரணமான தவத்தை யிங்ஙன முடித்தான். எங்ஙன முடித்தானெனின்; மெய்ஞ்ஞானமே தேராக, உயிரைப் பாதுகாத்தலே மாவாக அறிவேகளிறாகச் சீலமேதனககாம் உடமபுக்கிடாக மெயப்பொருள்களே வாளும் கேடகமுமாகக் கொண்டு இருவினையாகிய பகைவரது மதிலை வளைத்தான. அபபொழுது, அககருமப் பகைவருடைய தானை, உறக்கமென்னும் யானையையும, உணவென்னும் தேரையும், மறவியெனனும் புரவியையும, பிணியாகிய காலாளையும, கூறுபட அணிந்து அசுப்பரிணாமமென்கின்ற வாயிலை விட்டுப போநது போாசெய்தது. அப்போர்க்களத்திலே அககருமத தெவ்வர் படையிலே எழுவா கலங்கிப் பட்டார்; பதினறுவர் பொருது வீழ்ந்தார்; சன்மார்க்க மதி என்னும் களிறு காலாலுதைபப எண்மர்கவிழ்ந்தா; அப்பொழுது கூப்பிட்டு வீழகின்ற நபுஞ்சக வேதமும் திரிவேதமும் அறுவகைத்துவர்ப்பும் தண்ணளியையுடைய சிந்தனையென்னும் சககிரத்தின் வாயிலே பட்டன. மயக்கப் போர்மன்னனுடைய மக்களும் மந்திரியரும் பட்டு வீழ்கையினாலே பின்பு அம்மன்னன், புருடவேதமென்கின்ற விலலின் வாயிலே தாகமோக மென்கின்ற அம்புகளைத் தொடுத்

* சரியை—பிக்ஷை.

ன் உதிரத்தைத் தோய்த்து நரம்பாலே என்பைக் கட்டித் தசையைஅப்பித் தோலைப்போர்த்து மயிராலே வேய்ந்து ஒன்பது வாயிலுண்டாக்கி நன்றென்று மயங்கினோமயங்குமபடி உடம்பென்னும் குடிலையைச் செய்தான். அவன் மிகவும் நல்லன் என்று தன் நெஞ்சினைத் தேற்றி இருந்தான். இருந்த அளவிலே, அமராது, யானை வந்தபடியைக் கூறேயுமின் அவனை அருளான் என்று நினைந்து அவன் கேட்கக்கூறுகின்றாள் வேய்போன்ற தோளுடையார்க்குத் துணையாகிய கேள்வ ! யான் அநங்கமாவினையென்று பெயர்கூறப்படுவேன். வனத்திலே என் தோழிமாரோடு யான் விளையாடும்பொழுது மேருவினின்மேலே செல்வானாகிய விஞ்சையனொருவன், என்னை எடுத்துக்கொண்டுபோனான் ; கற்புடைய அவன் மனைவி என்னைப்போகவிடுத்தாள் ; யான் இக்கொடிய காட்டிலே வீழ்ந்தேன் ; என்னை நீ அருளாமலேவிட்டால இறந்துபடுவேன் என்றாள். வணசரிதன், கேட்டுக் காமத்தாலே வருந்துகின்ற பேதாய்! காமம நுகரும உடமபின் தன்மையைச் கேள், இவ்வுடல், வளியையும பித்தையும் ஐயையும மலங்களையும குருதியையும் தசையையும் எலுபையும ஈரலையும மூளையையும் குடர்களையும் தோலையும் நரம்புகளையும வழும்பையும் உடைத்தாயிருக்கும. கொடியே! நிணத்தையும உகிரையும மயிரையும பிளையையும் உடைய புழுப்பொருந்திய இவ்வுடம்பு வேறுபடுக்கிடந்தபொழுது அதனை விரித்துப்பார்ப்பார் ஒருவருமில்லை. இஃது அங்ஙனம் வேறுபடாமையின் விளைகின்ற காமத்தாலே கரிய

குருவியார்கண்ணுக்குக் காக்கை பொன்போல,
தோன்றும்கொள்கையை யுடைத்தாயிற்றுககாண
உட்பக்கம் ஒழிய வெளிபபக்கம நன்றென்று சொ
வையேல் மேலே சொனனவெலலாம நிறைந
தோற்றுருததியைப் புருவமும கணணும மூக்கு
தோனறுமபடி எழுதிவைததால அதை நன்றெனறு
கருதலாமோ ஆகாதுகாண. காப்பியஞ் செய்யு
கவிகள், மக்கட்குக் காமததீயுண்டாகுமபடி இவை
ச்சித்திரளாகிய உடமபை வேறுபடுததிக கூறிற
என்றான்.

இவவிருவா செயகை இஙஙனமாக, பவநததங
நன்மனேவியை நினேதது வருநதி என்மாமன்மகளே
பந்தாடுகின்ற நின்னேபபாாத்து யான் மயஙகிக் கிட
ததை நீ கேட்டு, இருவேமும போவோ மென்று
சொலலிவாவிட்டாய். அதனலே யான வநதேன
வந்த யான் வருந்தும்படி யாண்டுற்றாய். மததிய
தேசத்திற் பதுமபுரத்தில் என் தந்தை கிாததிதத
னுக்கும என் தாய் சினதத்தைககும என் மாமன
மானுககும் என் மாமி சிததிரமாலேக்கும ஒழிந
சுற்றத்தாாககும் வருத்தஞ்செய்தேன்; யான அ
விடததே சென்றால என் சொலவேன, இவ்விட
து என் செய்வேன, என்று நையாநினறான.

அவ்வளவிலே சீவகன், ஆங்கு நின்றும் செல்
க்கருதினன். தமமிடத்திலே வந்தாாககுத தாம நுக
ாவனவற்றைக்கொடுததுப பேணிவிடுத்தல் வண
தாாககு இயல்பாதலால, அவ்வனசரிதன், சீவகனே
நோக்கி யான் நுகர்வனவற்றை நீயும நுகாந்து வழி
நடந்த வருத்தம தீர்ந்துபோவாய் என்றான். சீவக

ன், தனக்கு வருத்தமின்மையைச் சொல்லி எப்பொழுதும் இவ்வாறே மனம் சென்றவிடத்துச்செல்லவிடாதேஇரு என்று கூறிச்சென்று பவதத்தனைக்கண்டான். கண்டு நீர் என்ன வருத்தமுற்றீர்? அதற்குக் காரணமென்னை எவ்வன பெயரையுடையீர்? என்று கேட்க, பவதத்தன, நம்பி! இவ்விடத்தே என பார்வைதாலே மனைவியைக் கெடுத்தேன்; பனனூற் கேள்வியுடையேன்; பவதத்தனென்று பெயர்கூறப்படுவேன என்றான்; சீவகன, தனக்குத துனபம வந்தாலுதவும கைப்பொருளைக் கொடுத்தும கற்க; கற்றால் ஞானக்கண்ணுண்டாகும; அது தத்துவத்தை விளக்கும; மனமருளாந்தபொழுது துணையாகும; ஆதலால் கலவியொழிந்த பொருளா பொருளலல. அக்கல்வியால பொருளுண்டாம்; கீர்த்தியுமுண்டாம. அதனைப பெறாநின்ற நீர் வருந்துதற்குக்காரணமென் அன்பாகிய நாரிலே இனசொல்லாகிய பூவைததொடுத்துககாதலாகிய சாநதைபபூசி இன்பமசெய்கின்ற அம்மாலையை நங்கைமார்க்குப் பகற்பொழுதும சூடடிநீங்காதிருப்பினும அவருடைய கணணும மனமும பிறாபின்னே செல்லும. இது இக்காலத்தில உண்டானதன்று ஆதிகாலததே முடிந்துள்ளது. பெண்ணெனறு சொல்லப்படுவன பற்றின இயலவைக்கேள் அவை, மனவலியுடையன அல்ல, குடிபபிறப்புக கெடுமென்று பாரா, நிறையுடையவலல, ஆயிரமுகமாக எழும மனதத பாம, பத்துபபொருளைக் கையிலே கொடுததால் இந்திரனமகளேயாயினும் கொடுத்தவா பின்னே செல்லும. கணவன் செத்தால் பூச்சூடிக்கொள்

ளாய்க் காமனென்று பெயரும் சொல்லலாய்க் கணவனையே வணங்கி * வாழ்வார், அவனுக்குத்திருவோடொப்பார்; அவனுக்குண்டான துன்பத்தைத் தீர்ப்பாரென்றான். பவதத்தன், ஐயா! நின்தோழி, கணவனைத் தொழுது வாழ்வாரோடு ஒப்பவள். அவள் என்னைப்பார்த்த கண்ணாற் பிறரைப் பாராதமாது அவளை இறந்து நான் உயிர்வாழ்தல் எங்ஙனமென்று வருந்தினான். சீவகன், அவள் செய்கையை உணர்ந்தவனாதலால் அன்னளோ என்று சிரித்து நீ வருந்தவேண்டா இம்மந்திரத்தையோதி, ஒரு வில்லினது அம்பு சென்ற அளவையொத்த எல்லையைப்போனால் அவளை இயக்கி கொண்டுவந்துதரும் நீ காண்பை என்று கூறிப்போனான்.

அநங்கமாவீணை வனசரிதனைக் காதலித்து நிற்கின்றமையைக் கூறினை, பவதத்தன் தனக்குத் தீங்கு கருதுவன் என்று சீவகன் கூறாது செல்லவே பவதத்தன் சென்று வனசரிதனைக் காதலித்துப்பின்னின்ற மாதைப்பார்த்து அவளடியை வணங்கித் தானுற்ற வருத்தத்தைக் கூறினான். அநங்கமாவீணை அவனைத் துறந்து போந்தவளாயினும் அவளைப்பெறும் வேண்டுமென்று அவன் சீவகனோதிய மந்திரத்தைப் பலகால் ஓதினபடியாலே அவள், வனசரிதன்பேரிற் சென்ற வேட்கையை விட்டுப் பவதத்தன்மேல் அன்புகொண்டாள்.

* வாழ்வாரென்னு மெழுவாய்க்கு ஒப்பார், தீர்ப்பாரென்னுமிரண்டு பெயரும், † "பெயர்கொளவருதல்" என்பதனாற் பயனிலையாயின. † தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல் ரு.

ஐயனே! நீ இத்திசைக்குப் புதியைபோலும், நாடு மத்திமதேசமென்னும் பெயருடைத்து, நகரம் ஏமமாபுரமென்னும் பெயருடைத்து நீ என்னுடனே வாராததைக் கூறினையாதலால் நட்பிற்குக் குறைவில்லை. அடிசிறுகாலமுமாயிருக்கின்றது. இங்கிருந்துபோ என்றான். சீவகன், நகரிலே சென்றபின்பு பார்க்கின்றேனென இப்பொழுது போகின்றேன். என்று மொழிந்து சென்று ஒரு பொய்கையைச்சார்ந்தான். ஆங்குப் பெடைஅன்னம், நீரிலே தனது நிழலைப்பார்த்து வேறோர் பெடை என்று கருதித் தனது சேவலை நோக்கிக் கள்வ! நின் காதலியை நீரின் கீழேகண்டேம் இனி நீ ஊடல்தீர்க்க யாம் முன்பு போலத்தீரேம் என்று கூற, சேவல் பெடையை நோக்கி யான் நின்னையன்றி வேறொன்றறியேன் நீ யூடாதேகொள் என்று சொல்லி அதனைப் புல்லிப் பல்கால் வணங்கிற்று. சீவகன், பெடை ஊடியதையும் சேவல் நீக்கியதையும் கண்டு, தத்தையை நினைந்து பலவாறு புலம்பி வருந்திக் கூறுகின்றான். மகளிரது தன்மையைப் பவதத்தனுக்குக் கூறிய இவனே, மனைவியை நினைந்து இங்ஙனம் வருந்துகின்றானாதலால் மாந்தர்க்குக் காதலாலே வருங்குற்றம் இவ்வாறு இருக்கின்றது என்று அறிவுடையோர் என்னை இகழுமடி எனது நெஞ்சம் நினையாநின்றது. துன்பத்திற்குத் துணையாகுமென்று கற்ற கல்வியும், பிறர் குற்றம் நீக்குதற்கு உதவுதலேயன்றி என்குற்றம் நீக்குதற்கு உதவுதலில்லை. அஞ்சனம், கண்ணுட் கிடந்தும் அதற்குப் பயன்கொடாதது போலக் கல்வி நெஞ்சினுட் கிடந்தும் காதல் மிக

மையால் உதவுதலில்லை என்று அப்பொய்மைக்கண்ணேயிலே இருந்தான்.

காதலன் மிக்குழிக்கற்றவுங் கைகொடா
வாதல் கண்ணகந் தஞ்சனம் போலுமாற்
றூர்ந்து துற்றுபு தங்கிய * வண்டனூர்க்
கேதமிற்றெனவெண்ணு மென்மொழிந்தரோ. ௭௬

அரசனாகிய தடமித்தனுக்குந் தேவிநளினைக்கும் தலைமையோடே பிறந்து, செல்வத்தோடே கல்வி முதலியனவெல்லாம் அடைந்து, விசயன் என்று பெயர்கூறப்பட்டு, உலகமெல்லாம் நாதிக நின்றவன், பகைவர் தருகின்ற திறை இருக்கும் மிகாயிற சோலையிலே அப்பொழுது எழுந்து சென்று சீவகனைப் பார்த்து இவ்வுலகில் இந்நாட்டில் இந்நகரில் வாழ்வார், இவ்விடத்தைச் சேரார் ஆதலால் இவன் இவ்விடத்தானல்லன் என்று கருதி, நீ எந்நாட்டில் எவ்வூரில் எப்பெயரை உடையாய் என்று வினவினான். சீவகன், சொல்லாற் பொய்யாகக் கொண்டாக்கிக்கொள்ளப்பட்டதாயினும் பொருளாற் பொய்யல்லாததோர் வழியாலே ஏமாங்கதநாட்டில் இராசமாபுரத்தில் சீவகன் என்னும் பெயரைக் கூறும்ற் பொருளால் அப்பெயரேயாகக் கூறினான். விசயன், இவனை இந்திரனும் ஒவ்வான் யாங்கள் கொள்ளத்தக்க பயனை இவன் மிகவும் உடையன். ஆதலால் இவனை எங்கோமானிடத்தே கொண்டுபோதற்கு இவன் மனத்தை அறிவேன் என்று கருதி இந்நாடு நின்னுடைய நாடு. இவ்வூர் நின்னுடையவூர் இவை, நின்னுடைய இல்லங்களெல்லாம் நின்னுடைய

* வண்டனூர்—உரத்யர்.

சுற்றம என்று உறவு கூறினான். சீவகனை, அவ கூறியவற்றையெல்லாம உட்கொண்டு உடனபட் இனி இவைமொழியறக என்றான். விசயன் அவ்விடத்தே ஒரு மாங்கனியையப பார்த்து வில்லைவளைத்து அம்பால எய்தான. அது தைக்காதது கண்டனன, அம்போடு அவவில்லை வாங்கி வளைத்து அக்கனியை யெய்தான. அம்புமகனியும தானெய்தவிலினது உயரத்திலே வருதலும், சீவகன் தான எய்த அவ்விடத்தே நின்று வாங்கிக் கொண்டான். விசயன முட்டி விசேடமான படியையும் நிலைவிசேடமாக நின்று கணையைத்தொடுத்த படியையும அது இலக்கைச்சாரந்தபடியையும் தோளபிறழாமற் கிடந்தபடியையும அம்பு விட்டநொய்மையையும அது காமபை அறுத்துக்கனியோடு வந்தபடியையும கண்டு அதிசயித்துச சீவகனைபபார்த்து நீ வில்லைப்படைத்த கடவுள் என்றான. தேவிபொருட்டு வில்லை வளைத்த இராமனை மராமரம் ஏழுமஉருவுமபடி எய்த வலலவில இராமன என்று சொல்வது வார்த்தையன்றிக் கண்ணாற் கண்டதில்லை. இன்று இது கண்டேன் என்று உட்கொண்டு சீவகனைக்கொண்டு கோயிலுட் சென்று அவன் வழி நடந்த வருத்தத்தை உணவு முதலிய வற்றால் தீர்த்துத் * தடமித்தனுக்குச் சீவகன் கூறுபாடெல்லாம கூறினான். அவன், விரும்பிச சீவகனுக்கு உபசாரம கூறிக்காளாய! நின்மேற் காதலுடையேம என்று அவன் கையைபபார்த்து இவன் விறலெழுலுகக்கு அரசனென்

* தரு — மித்ரனென்னும் வடமொழிப்பெயர் தடமித்தனென்றாயிற்று.

றன. பின்பு அரசன் சீவகனை நோக்கி இவ்விசயனை விற்றிறலை அறியான் அதற்கு புதியன இவனன்றி இன்னுமொரு நாலவருளர் அவரும கல்விமாட்டு யோடு வளர்ந்ததில்லை. இவருக்கு நீ கல்வி கொடுக்கவேண்டும என்று சொல்லச் சீவகன, உடன்பட்டு அறுநாள முதலாக அவருக்குக் கல்விகற்பித்தான. அவரும சீவகனது அடிகளைச் செருப்புப் போலே பொருந்திக காதலாலே நிழல்போல நீங்காராய்த் தீபம்போலே அறாகாது அகலாது ஒழுகாநிற்க, * சிங்கக்குழவியன்ன வயிற்றை யொக்கு மெயிறுடையுடைய சீவகன், ஒருநாளிலே பலமணத்தால் மணமகளிர் போன்ற ஒரு சோலைக்குட் போனான. போய் ஆங்குப் பறித்த † தளவமுதலிய மலரையும் ஒழிந்தவற்றையும் பலாச்சுளையையும் கொண்டு மணியையும முத்தையும பவளத்தையும பொன்னையும் கோத்தாறபோன்ற ஒருவகை மாலையை மாலைகட்டு மாறுகூறிய நூலினது மேன்மை தோன்றும்படி விரல்நுதியாற்கட்டி, அவ்வகை மாலை யொழிய மறைமே ஒருமாலையையும பந்தையும் பிறா அயிராப்படி மூலப்பாசுரமான மாலையையும கட்டிப்பன்னிரையும புறணையும தெளித்தான.

அப்பொழுது ஒருகுறளி வந்து தன கண்கள் வாயாக இமைப்பு என்னும் சொல்லாலே இம்மாலைகளும்பந்துமகனகமாலைக்குத் தகுந்தன என்றுள. சீவ

---

* "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயாககொடை" என்றதனுட்கொடை யென்றதனுற சிங்கங் குழவியுங் கொண்டவாறுகாண்க.

† சளவம்—செம்முல்லை.

ன், கொள்க என்று கொடுக்க, அவள் பெற்று அ
ளை வணங்கிப்போய்க் கனகமாலைக்குக் கொடுத்தாள்
கனகமாலை அவற்றை வாங்கி மாலையை விரல்மேலே
தாங்கி மலராகிய எழுத்தை வாசிக்கின்றவள், ம
ளிர் தாமப்பெரும் ஆடும் நாடகங்களைக்கண்டு வாழா,
வர்வாழும்வாழ்வு, மக்கட்பிறப்பிற்பிறந்தும் நன்
நுகராத வேடாது வாழ்வாயிருக்கும் என்று அ
னெழுதிய பிறவற்றையும் படித்துக்காமம் கொண்
கூறுகின்றாள். ஓரெயிற்றையுடைய தொரு பெரி
பேய், உலகை விழுங்குமாறு வாயைத்திறந்து நி
றாற்போல இம்மாலைப்பொழுது பிறையாகிய எயி
றுவிளங்கச் செக்கர்வானாகிய வாயைத்திறந்து என
னை இன்றே விழுங்குதற்கு வந்ததன்றே. இனியெ
னுயிர் இதன் கண்ணதோ எனக்கண்ணதோ என்
சீவகனை நினைந்து பலவாறு புலம்பினாள். புலம்
என்மனத்தை இறுகப்பிணித்த அவனை யானும் அ
ஙனம் பிணிப்பேன் என்று மற்றைநாள் தன்னுடை
ய செப்பில் ஒருமாலையை அநங்கவிலாசினிகையிலே
கொடுத்துக்கொண்டுபோய் அவனுக்குக்கொடு என
றாள். அவள், தொழுது வாங்கிக்கொண்டு செ
றுசீவகனை வணங்கி மாலையைக் கொடுக்க, அவன்
அதைவாங்காமலே அவளைப் பார்த்தான். அநங்க
விலாசினி அவனைப்பார்த்து என் நங்கைக்கு மாலை
தொடுப்பாயும் நீயே அவள்தோள் மெலிவுக்கு மரு
ந்தும் நீயே அவளுயிரும் நீயே, ஆதலால் இதைவா
ங்கிக் கொள்ளென்றாள். சீவகன், அரசர்கோயிலிரு
ப்பார், ஐம்பொறியையும் அவித்தவரே. இது தகா
துகாண் என்றான். அநங்கவிலாசினி, நீ அஞ்சினாய

என்று கூறச் சீவகன் அஞ்சினேனல்லேன் ஆசிரிய
னுடைய நிறுகின்றதன்மையேனுக்கு இது பொருந்தா
துகாணென்றான். அநங்கவிலாசினி இம்மாலையை
நீ வாங்காவிடின் கனகமாலை இறந்துபடுமெனச் சீவ
கன் வாங்கிக்கொண்டான். அநங்கவிலாசினி போய்க்
கனகமாலை பிழைக்கு முபாயங்களைச் செய்தாள்.
நீலப்பூ முதலியன போர் கூறிவந்து ஒரோசனை தூர
ம்செல்லுடைந்தோடு நெடுங்கண்ணையுடைய கனகமா
லை தனக்கு அநங்கவிலாசினி தூதாக மாலைதொடர
மாக நடக்கின்ற நாளிலே, விசயன் முதலாயினோர்,
வெய்யசரத்தையும் இருப்பு நாராசத்தையும் எய்யும்
வித்தையுந் தம்மேலவரும் அம்பை அம்பாலே விலக்
கும் வித்தையும் அம்பிலே கொள்ளு நிலமறிந்து
கொள்ளும்வித்தையும் எப்பேர்ப்பட்ட கருவியாலே மறைந்
து சேமஞ் செய்யும் வித்தையுஞ்சேர்ந்தாற் பகை
வர் கணையைப் புறமாகவிட்டுத் தங்கணையைச் செலுத்
தும்வித்தையுந் தம்மேலே யானைபோந்தபொழுது
அதன் காலிடையிலே புகுந்து மறையும் படியையும்
அது கையாலே வளைத்தபொழுது அதன் கைக்குநடு
வே நடம்பு பிறழும்படியையும் அது தாலவட்டத்
தாலே வீசினால் அதுபடாதபடிபோய் அதன் காலி
டையிற் புகுதும் படியையும் அது கோடிறங்கினு
ம் கொம்பிரண்டிற்கு நடுவேயாம்படியையுங் கற்றுத
ம் தனியேநின்ற இடத்தைக்கிட்டிப் பகைவர்படை
மேற்சென்ற காலத்தும் வெற்றியிலே தளருந்தன்
மையின்றி அப்படையை அழிக்க வல்லாராயினா
ரென்று தடமித்தன் கேட்டு யாம் காணும்படி அவ
ரைக் கொணர்க என்றான். விசயனும் கதம்பனும்

சனகனும் அசலனும சேனனும போந்து சரகூட
கட்டி விலலைவளைத்துப் பகழியாலே நூல பிளப
எய்து வாளாலே நூலபிளகக வெட்டி. வேலாலே
நூலபிளக்க எறிந்து புயமுட்டியும சிரோமுட்டியு
கந்தரமுடடியும் செய்துகாட்டினார். எல்லாருமப
ார்த்து விற்போருக்கு இவ்விசயன், அவவிசயனே
வேறபோருக்கு இக்கநமபன் அமமுருகனே. வா
போருககு இககணகண அபபாசுராமனே. யானை
போருக்கும தோடபோருக்கும இவவசலன் அவ
ரலகிரத்திமயே. குதிரைககு இசசேனன அநதகு
மனா. எனறு புகழநதாா. அரசன் தன மகக
வலியைக் கண்குளிரக் கண்டுமகிழ்ந்து அவவேளை
ஒனறு அரசனுதல, ஒனறு அநதணனுதல், இவவி
ரணடு மொழிநத சாதியிலுள்ளாாககு இக்கலவியு
டாகாது. ஆதலால் அவனை நீங்காததோாதலோ
ட்டு அவனைச் சிறை செயவேன. இபபொழுதே
அவனைக் கொணாமினென்றான. அபபொாது அ
ஙிருந்தாா பலருமா, அரசன நினைததனதை அறியாரா
இககலவியும் கொடுததுபோல இருககினறது இககல
யுடைய காளையை வேநதன பொருளுயசசிறைசெ
யய எண்ணினன் என்று எணணி வருநதினா. அ
வளவிலே, ஆஙகுப்போநத சீவகனை மன்னன் க
யேகொணடிருநது தோன்றல! நீ கொறறமசொட்
கலின் மண்முழுதும வநதுகைகூடுதலன்றி மறுமை
யில வானுமவநது கைகூடுமபடி ஞான நெறியை
யுந் தநதாய். தந்தோய்ககுக் கைமமாறுகாணே
ன்பாவையை நினக்குக கொடுபபதே கைமமாறு
என்றான். சீவகன், நெஞ்சிலே உவபபுடையனு

றும் அதைத் தெளிவியானும் மறுக்க, வேந்தன் தன்கையாலே அவன் கையைப்பிடித்து, நங்கைபிற ந்த அன்றிலே, கலையுமவடிவும் உடையானொருவன் இவளை கணவன என்று கணிசளாகூடி உதயாருடைக பியுக்களிலே தபபின்றுகச சாதகததைச செய்தார் அவ்விரண்டும நீயே உடையை ஆதலால நினக்கே உரியவளென்றான். சீவகன உடன்பாட்டுக் கனக மாலையை மணந்து கூடி இருந்தான.

சீவகற்கு இளையனை நந்தட்டனை மதியை யிழ ந்த உரோகிணிபோல மயங்கிச சீவகனை நாடெங் கும நாடிக் குணமாலையில்லம சோந்து ஆங்குக் கா ணாமல தததையது இலலம சோந்தான. அப்பொ ழுது அவளதானே புணர்த்ததோர் புணர்ப்பு விசே டத்தை வீணையைக்கைகொண்டு வாசித்துபபாடிக கணவனை நினைந்துருகி அவனைசசேருநாள் என்றுதா னென்று தனது ஞானத்தாலே நினைந்திருநதகாலத்தி லேநந்தட்டன்சென்றுஐநதுவிலலளவுதூரத்தேநின் று வணங்கினான். தத்தை அவனை மருண்டுபார்த் து கைவிலலும கணையுமிலலாக்காமனை இங்ஙனே போந்திருக்கவென மொய்வெல்லும் குருதிவேலான என்று மூன்றுவில் தூரததேவணங்கித தத்தையது அடியிற் சிலம்பையேபார்தது நிற்றலாலே அவளது வாடிய முகத்தையும் மெலிநத தோளையும அழுக் காடையையும பாராமலே அவட்குத துயரமில்லை யென்று நினைத்து அவட்கு அடுக்காதமொழி கூறு கினறான. புண்ணியன் இறநதுவிட்டானாயின நீ தவஞ்செய்தல ஒரு காரியம அஃதன்றி எரியிலே புகுதல் ஒரு காரியம இவ்விரணடுமன்றிக் கணவன்

இறந்தால் மனைவி அணிசுமந்திருப்பதை யான் கேட்டறியேன். அடிகள் எங்குளாளார் என்றான். தத்தை, அவன் கூறி வாடிநின்றதைப்பார்த்துச் சீவகனை மறைந்து வேற்றுருக்கொண்டிருக்கிறபடியை முறறபடக்கூறினாள். கூறினவள் குரிசில் நம்மை நினையானாய் ஊழாலே உளவாய கல்யாணங்களைச் செய்து இன்பத்தை நடத்த மகிழ்முகம் என்னும் விருத்தையை அறிந்திருக்கின்ற * நாமே அவற்கு ஏதமுண்டாமென்று வாடுவது என்னை; வில்லாய்! யாம வேண்டிய அடிமைத்தொழிலை நீ எமக்குச் செய்யின் நுமையனுரைக் காண்பையென்று அசதியாடிக்கூறினாள். நந்தட்டன் இம்மையேயன்றி எழுமையும் அடிமையாகக் கடவேன் என்றுகூற, தத்தை ஒரு விருத்தையையோதித் தன்முகத்தைத் தடவினாள். அவ்விருத்தை சீவகன் இருந்த இடத்தை நந்தட்டனுக்கு விளக்கிற்று. சீவகன் அமளிமேலிருந்து கனகமாலைக்குக் † கற்பகமாலையை வேய்ந்து அழகு செய்வானை நந்தட்டன்கண்டு மகிழ்ந்து தொழுதான். தத்தை, தான் செய்த விருத்தையை மாறறின அளவிலே நந்தட்டன் யான் சென்று சீவகனடியைச் சார்வேன் அதற்கு அருள் என்று இறைஞ்சினான். தத்தை, மாலையும் சாந்தமும் நானமும்ப

* நாமே—என்று தன்னையுயர்த்துக்கூறினாள்.

† கற்பகமாலை—அரசர் தமதாணையாலே இவ்வுலகிலே கொணர்ந்த கற்பகம் தேவரிட்ட சாபத்தாலே தன்னிலையின்றிப் பூவளவே உண்டாயிற்று. மந்தாரமும் கவிரமும் அவ்வாறாம். இனி உத்தரகுருவிலுள்ள கற்பகத்தை யீண்டுக் கொணர்ந்தாரென்றுமாம்.

கலங்களும வாளும சுரிகையும தாருமென்று ஏவல் செய்வார்க்குக் கூறித்தருவித்து நந்தட்டனை நோக்கி நீ அணி என்றாள்.

சீவகனை சுதஞ்சணனை நீங்கியபின்பு வடிவும் பெயரும் வேறாகக்கொண்டிருக்கின்றானாதலால அவ்வடிவையும் பெயரையும அறிந்து சீவகனைக்காணல் நந்தட்டனுக்கு அரிதாகலானும, நந்தட்டன் அவனுருவுடனே அரசன கோயிலிலே அந்தப்புரத்திற் சென்றால் அவனுக்குத் தீங்குண்டாகுமாதலானும நந்தட்டன் சீவகனைக் காணுமளவும, அச்சீவகன் இப்பொழுது கொண்டிராநின்ற வடிவுபோன்ற வடிவை அந்நந்தட்டனுக்கு நிற்க என்று நிருமித்தாள்.

நந்தட்டன்தத்தையதுபணியாலேதன்னுடைய பழையவடிவிற்குப புறத்தே இருடுணிய வீசும ஒளி மேனியையுடையவனாய் அவள்கொடுத்த சாந்தையும் கலங்களையும படைக்கலங்களையும தாங்கினான். அவளவிலே காந்தருவதத்தை ஆகாசகாமினியை அவனுக்கோதிநிலத்தைசசாந்தினால் மெழுகிமலர்மாலைகளைநாற்றிஅகிற்புகையையேற்றி நந்தட்டனை ஆங்குப் பள்ளியிற்கிடத்தி ஆயத்தோடே சென்றாள். நந்தட்டன் சாமன்போலே பள்ளியிலே துயிலலும ஒரு தெய்வம அவனைக்கொண்டுபோய் ஏமமாபுரத்தே அரசன் கோயிலுக்குள்ளே இட்டுவைத்தது. பூணையும் ஆரத்தையும பொன்னையும பூத்தாகிய கற்பக மரத்தையொத்த நந்தட்டன் துயிலநீங்க ஞாயிறும் உதயகிரியிலே எழுந்தது. விசயனை நந்தட்டனைக் கண்டு சீவகன் வடிவும் நந்தட்டன் வடிவும ஒன்

றேயாயிருக்கவும் தெய்வத்தன்மையைத்தனதுணர்வுமிகுதியாலே யுணர்ந்து சிறிது வேறுபாடு உண்டென்று அறிந்து நீ யாரென்றான். என்றாற்கு நந்தட்டன் மறுமொழிகொடாதேயிருந்தான். அந்நந்தட்டன் மேலேதங்கிய தெய்வம் அங்ஙனம் மறுமொழி கொடாமலிருந்து விசயன் முனியாமலும் காத்தமையால் அவன் சென்று மைத்துனனைக்கண்டு கூறுகின்றான். அடிகள்! வசுந்தரி விற்பயிற்றும் தானத்தை வழிபடுதற்குச் சந்தனக்களியும் பூவும் புனைவும் அகிலும் முத்தும் விளக்கும் ஏந்திச்சென்றவள் அடிகள் சேக்கையை நீங்கி வெறுநிலத்தே கிடக்கக்கண்டு காரணம் என்னென்று நினைத்து கனகமாலையைக் கோபித்தற்குச் சென்றாளாம். ஆங்கு அவளோடு அடிகளைக்கண்டு என்னிடம் வந்து அவர்செய்தி மாயம்போலிருந்தது பாதுகாத்துக்கொள்கென்று கூறினாள். யான்சென்று அவனைப்பார்த்தேன். அவன் நின்னுடைய உத்தம இலக்கணத்தையொற்றிக்கொண்டிருக்கின்றான். அவன் யார் அவனை யான் அறிகின்றிலேன் என்றான்.

சீவகன் கேட்டு வசுந்தரியும் இவனும் தாமகனைட மைந்தனை நாம் என்கின்றனர் ஆதலால் தத்தையது மொழியாலே நந்தட்டனே யான் கொண்டிரா நின்ற வடிவைப்பெற்று வந்திருக்கின்றானென்று மனத்திடை மகிழ்ந்து சென்றான். தருமனை அரிதாகக்கண்ட விசயன்போலே தம்பி தமையனைக்கண்டு தொழுது வீழ்ந்தான். கைகூப்பித்தொழுதுகிடந்த தம்பி தாமரைத்தடத்தை யொத்தான். தமையன் தம்பியது முகம் முதலியவற்றை அலர்த்தலாலே

ஐயனே! ஞாயிறு படுதலாலே குருதிநிறைந்த போர்க்களம்போலே தோன்றிய செக்கர்வான்கொண்ட அந்திப்பொழுதிலே மழையின் மிகுதியாலே எல்லாரும் துனுக்கென்ற அளவிலே நின்னைக்காணாமையாலே வருந்தி ஆங்கு நின்று நகரிடத்தே சேர்ந்தோம். சேர்தலும் பதுமுகன் யாமமேற்செய்யும் காரியத்தை எண்ணுமினென்றான். புத்திசேனன் வெகுண்டு சீவகனைக் காணேமாயின், இப்பொழுதே கட்டியங்காரனைக் கொன்று ஊரையும் அழித்துப் போய்ச் சீவகனைச் சேர்வேம் என்றான். தேவதத்தன் சிறிப் பகைவனுயிரை உண்டல் உமக்கெளிதாகலால் நம்குரிசில் இருப்பதும் இல்லாததும் தெரிந்துகொண்டு பின் பகையைக் கோறலைத் துணிமின் என்றான். ஸ்ரீதத்தன், புத்திசேனன் கூறியவாறே பகைவரைக்கொன்று துன்பத்தைத் தீர்ப்பேம் என்றான். என்ற அளவிலே பதுமுகன் என்னைப்பார்த்து நந்தட்ட! நீ இவ்வருத்தம் நீங்கி நமது குரவர் து வருத்தத்தையும் நீக்கி அவர்இருக்குமளவும் அவரைப்பேணி அவர்இறந்தால் நீர்க்கடனைச் செய்க என்று சொன்னான். நான் அவனைப்பார்த்துக் குரவரைப் பாதுகாத்துக்கொள்ளென்று உயிருடனே இருப்பார்க்கன்றோ நீ சொலலற்பாலை. உயிர்வாழ்தல் என்னிடமில்லை. ஆகலால் இது கூறவேண்டா. என்கண்கள் கையாக அவற்றின் நீராலே செல்வனுக்கும் * நமக்கும் நீர்க்கடனசெய்துவிட்டேன் இனிக் காடுத்திப்போலே சேர எழுகஎன்று சொ

* நமக்கெனவே சுற்றமெல்லாமடங்கும.

ன்னேன். * முன்பு சிங்கத்தைச் சூழ்ந்திருந்த புலிக்கூட்டம், அச்சிங்கத்தின் ஏதம் நீர்த்தற்கு எழுந்தாற்போலே நமது வாட்படை எழுந்து சீவகன் வாழ்க என்ற அளவிலே, எங்கள் வருத்தந்தீர ஒருவன் இவ்வாறு பாட்டினைப் பாடினான். யானைமதங்கொண்டு பிளிற, முல்லை மேகமென்று பூத்தன. அவ்வளவேயன்றி இது பருவமன்று; உருகி நைந்து மெலியவேண்டா யான அவரிடத்தே சென்றுலது றிந்த பருவத்தே அவர் நீட்டித்தாராயின் நீ மெலிய அமையும்; யான் சென்றபொழுதே நங்கேளவர் வருவர்; என்று அவன் பாடியபாட்டின் பொருளைக்கருதி இவ்வாறு எண்ணினோம். யாம் தேடிச் சீவகனைக்கண்டாற் பின்பு சிலநாள்கழிந்தும் கட்டியங்காரனைக் கோறுமன்றே பழம்பகை நடப்பாதலுண்டோ இனி யாம் சென்று நாட்டிடமெல்லாம் நாடுதும் என்று எண்ணித் தனித்தும் சேர்ந்தும் எவ்விடமும் தேடினோம். யான்சென்று வரைகளைநாடி நகரைச்சார்ந்து குணமாலையைப்பார்த்தேன். மெலிந்து நைகின்றவள், என்னைக்கண்டு எனதுவாட்டம் நீங்குமபடி ஐயர்க்கு அடிசில ஆக்குக என, மகளிர் ஆக்கிப் படைத்தார். நோயுற்ற மயில்போன்ற நங்கை புனலொழுகியகண்ணளாய்வந்து ஐயரே! அடிகளின்றி நீரே யுண்ணவும் வல்லீராயினீர்; நீர் கொடியீர்என்று கசிந்துருகி நிலத்தே வீழ்ந்தாள். யான் அவளது வருத்தங்கண்டு அவ்விடத்தினின்றும் மீண்

* இதனானே நீயும் யாங்களுஞ் சிங்கமும் புலியும்போலிருப்போமென்றான்.

டு செலவனைக்கணடு வணங்குதல ஒரு காரியம அது கூடாதாயின், இறத்தல ஒரு காரியம். இவ்விரண டிலொன்றை இன்றைபபகற பொழுதிலே முடிப பேன என்று கருதித் தந்தை மனையைசசோநதேன. அபபொழுது அமமாதர், யாழை எடுத்து மார்பிலே சோத்தி அதனை வெபபததாலே நரம்பின் குளிாசசி யை மாற்றிபபாடினள். யான பித்தேறி அவட்குப பொருநதாத மொழியைக்கூறினேன. அவள் என னை நோக்கி வருநதாதேகொள் நின்னடிகள்பாதங கை நீ சேருமபடி யான் கூட்டுவேன என்று கூறி ஞாயிறுபட்டபினபு விருந்தையயோதி விடியற்கால த்திருளிலே இவ்விடத்திலே என்னை இடுவித்தாள். அடிகள்! நீர் போநதவாறும கூறுமினென்றான. சீவ கன், தான் போநதவாற்றையும், பதுமையாரையும சேமசரியாரையும கனகமாலையாரையும மணந்தவா ற்றையும, ஒழிந்தவற்றையுங் கூறினன். நநதட் டன, குரவரைக காணபபெறறிலமே என்று வருந தி அழுதான். சீவகன் ஐயனே! பொருளெய் தலாம; பகைவரைச செருககலாம; நண்பொடு பெண்டிர்மக்கள் யாவையு நண்ணலாம; ஆக்கலா காவொண்பொருள் உடன்பிறபபு; ஈங்கு * எம பியைபபெறறேன் இனி எனககு அரியதில்லையெ னறான்.

* எம்பி—முனனிலைபபடாககை.

வளாந்தனவாய்ப்புகரையும சுழியையும உடையன வாயக்காலகளை காலைக்கால்வன போலவனவாய்க்குறு குபபாய்வனவாய், தமமேலிருநதெய்த அமபை ப பின்னிடுவனவாயக் குழைநத சேற்றிலும ம ணலிலும புனலிலும் மலையிலும செல்லினும மன மபோல வேகமாய்ச செலவனவாய், ஊன் கெடா தனவாய்க் கொளளிவடடமபோல இடையறுமல திரிவனவாய்ப பக்கரை அமையபபட்டனவாயத்கா ருமம கெசசையும அரறறபபட்டனவாய்ச சாமரை அணியபபட்டனவாய விரா ஏறபபட்டனவாய வநதன. ஒரு நொடி யளவிலே நூறு வில்லளவு தூரம செலவனவாகிய எருதும் கோவேறுகழுதை யும ஒட்டகமும பிறவும பண்டங்களைச சுமநது வந தன. புவியை விற்றுககொளளத்தக்கனவாய்ப பல ளம போலும குளமபுடையனவாயக்காலின நொய யனவாயப்பார்பபோரது கணணைக்கவரும காட்சிய னவாய்க் கிளிநிறமபோனற நிறமுடையனவாய்பபு விகள் நானகு வநதன. நபுலவிபுலர் குரவரை போணநிறகவேணடுதலின அவவிருவரு மொழிநத சீதததன் தேவதததன் புததிசேனன பதுமுகன் என னும நாலவரும அந்நானகிலும ஏறினா. ஏறிநாட் டுகேட்டா, போககின்விரைவாலே குதிரை யேறிட புறபபட்டு நின்று நாட்கேட்டுப் பறை யொலிககச சஙகாரத்தொழ வாளும்யமவேலுமின்னச சென்றா.

எருது முதலியன * சாத்துடனே செலலச சென்றவா, வண்டு துயில்கொணடு குயிலாவி

* சாதது—வாணிசஞ செய்வோாதிரள

ளுசசெறிதலாலே மழையென்று மயில் அகவி
ளிா மேவாநது சினைதாழநது நனைநிறைந்து தேவ
ருலனை யொப்பாகாயுள்ள பொழிலிலே தாபதப
ள்ளியைச் சாாநது இருடிகள் உறையும இடத்தைக
ாணடற்குத் திரிநதாா. திரிநதவா, பூம்பொதும்பரி
பாறைப்பலகையிமேல இருந்தவிசயையைக கண்டாா.
அப்பொழுது அவள, என்பிளளை இறதநதைச சிறுப
பனஎன்றுசிநதிததுக கண்ணீரொழுக இருநதாள.
நாழர் அவளைப்பாாதது மஙகலங கெட்ட திருவை
யாபபீா ! இஙகுவநதவாவு எங்ஙனே அடிகளுககுக்
நிலயாதெனறு கேடபதமதேவி எங்குலததையுமஎம
ரவையும இவவிடதத்தோடு கூறலாகாது. நுங்குல
ததையும நுமமாரவையும கூறுமின் னெனறாள. தோ
நுள்ளே தேவதததன, அடிகள் ! மோட்டு நீரில
லங்குமவாளையும இருலோடுபொருது துயிலும
பாருளுடையாருறையும இராசமா புரமென்னும
அழகிய நகா எமது பதியாகும் இவன், அந்நகரில்
சநதிரியாகிய சாகரனுககுததக்க மனைவியாகிய குரு
ததைத மகன் சீதததன். இவன், சசசநதனுடைய
புநதணனாகிய அசலன மனைவி திலோததமையு
டைய சிறுவன புததிசேனன. இவன அரசற்குரிய
செட்டியாகிய தனபாலன் மனையாளாகிய பவிததிரை
யைபுதலவன் பதுமுகன. அநநகரிலே அரசன
பெயராறபட்டம பெறறவன ; அரசனது உயிர்க்
குக கவசமபோன்றவன் ; விசயதததனென்னும
இயற்பெயரையுமுடையவன் ; அவன் மனைவியாகி
பிரீதிமதியின புதலவன் யான் எனபெயர் தேவத
தன் என்றான. பெண்டிரால குலம் தூய்மையெ

றுதலானும் மகடூஉவிற்குக்கூறுதலானும் இன்னா
மகன் இன்னான் என்று கூறினவன் விசயையைப்பா
ர்த்துப் பின்னும் மொழிகின்றான். அடிகளே! இ
றைவன் இறந்த அன்றே யாங்கள் முற்பவத்திற்செ
ய்த நல்வினையாலே எங்களது உயிர்போலும் நம்பி
யோடு பிறந்தோம். எம்மை ஈன்றோர், நம்பிக்கு
இவர் தோழர் என்று ஈந்தார். யாங்கள் ஞாயிறு
போலவளர்ந்தேம். யாம் பிறந்து ஓராண்டு கழிந்த
பின்பு பிறந்த நந்தட்டன் நபுலன் விபுலன் என்பா
ரோடு யாங்கள் ஐவேமும் திக்கயங்கள் என்னும்படி
பகைவர் தீண்டற்கரிய வெம்மையோடு வளர்ந்தேம்.
யாமெல்லாம் நூல்களையும் படைத்தொழில்களையும்
வினைத்தொழிலையும் கற்றேம். எங்களிலே நம்பி
யைமீட்டுக் கலுழவேகன்மகளை யாழாலேவென்று
மணந்து பின்பு யானையை வென்று குணமாலையை
ப்பெற்றான்; அவன் என்தோழனும்; அவனதுநா
மம் யாதெனிற் சிந்திப்பவர் அவலம் போக்குதற்
குக் காரணமான சீவகன் என்னும் பிதுவாம். அச்சீ
வகனை முற்படப்பெற்ற கந்துக்கடன் என்ற நாய்க
ன், அந்நகரிடத்தே ஒரு நாளிலே கட்டியங்காரன்
செய்த தவற்றைக்கண்டும் தன் மகனுடைய தோள்,
தொழில் செய்யாதபடி அவனது மனத்தைப்பிணி
க்க, அக்கட்டியங்காரன் அச்சீவகனை நகரிலேகொல்
ல என்று சொல்லுதலும், விசயை புவியிலே வீழ்ந்
தாள். அப்பொழுது தோழர், இத்தேவியார், நக
ரிலே நம்பிக்குற்ற ஏதத்தைக்கேட்ட அளவிலேதம்ம
கனுக்குற்ற நவை என்று சொல்லும்படி இருகண்
ணும் மேலே சொருகி அறிவழிந்து கலங்கி வீழ்ந்தா

. ஆதலாலே அவர்தாமே பெரிதும அருளுடையா
ாயிருந்தார். இங்ஙனம் அருளைப்பிறப்பித்த தவப்
பெருமையின்வண்ணம இருந்தபடி என்னே! என்று
வியந்து முத்துவடத்தைஅறுத்துக்கூட அரைத்
சந்தனக்குழமபோடு பனிநீரைத்தெளித்துத் தேற
றினர். தேவி, எம்மானே! அரசன் படுதலாலே
யான் எந்திரமயிலையூர்ந்துபோய்ப புறங்காட்டிலே
வீழ்ந்தேன். வீழ்ந்த எனக்குத் துணையாய்த் தோன்
றிய நீ இபபொழுது என்னை யொளிக்கின்றாயோ,
கையிலே எங்களுடைய * கந்துக்கடன் செறிவு நி
றைந்த உவகையனாய் நின்னை எடுத்துககொண்டுபோ
ச † சுநநதை கையிற் கொடுப்ப வளாததை அவளு
வருந்துமபடி ‡ எனனையா! என்னையா! என்னை
ா! போயினையே. எனனரசே' வேந்தன் நீ உயிர்
கொண்டிருந்து நின் புதல்வனாலே பகையை வெலசெ
ன்று என்னைப்போக விடுததான். யான் கண்ட கனவு
மூன்றில் ஒனறு பயனைப்பயததலாலே ஒழிந்த இர
ணடும நமககினிய பயனைப்பயக்கு மென்றே இற
வாதிருந்தேன் இருந்ததற்குத் துணையாகாதே இறா
நனையே நீ இறைவனும திருவுமாய் நின்று, நின்கு
டைக கீழ்குடியை யோமப, அதனைக்கண்டு யான

* கடநதககடன † சுநநதை யென்றது வருவாா
க றக்கேட்டு.

‡ எனனையா—விளியன்று இரக்கக்குறிபபு. வினா
சொல்லைகாடேசவின் சமனாயிறறு.

மகிழ்ந்த பின்பு இனி நீ துறந்து * போவம்மாவென்று நீ எனக்குச் சொல்ல நான் போவேன அதற்கு முன்னே நீ போனாய் அங்ஙனம் போன நீ ஆ! ஐயோ! ஐயோ! ஐயோ! இனி அகன்றே விட்டாயோ. இதற்குக் காரணமென், கோமான்மகனே! குருகுலத்தார்போரேறே! எமாங்கதத்தார் இறைவா! என் னின்னுயிரே! காமா! புனைதாராய்! நீ பகைவென்றுலயான நின்தந்தையை நோக்கி அழுகின்ற கண்ணீரை நோக்காதே போயினையோ இராசமாபுரத்தே காவலனார் பிள்ளைக்குத் தீங்கில்லை என்று இங்குவந்தார் சொல்லக்கேட்டு மகிழ்ந்துநோன்பாற்றி நொந்திருந்தேனை, அந்தோ இனி ஆற்றே

---

* "போவம்மா, அம்மை—அம்மாவென விளியேற்றது; "முறைப்பெயர் மருங்கினையெனிறுதி—யாவொடு வருதற்குரியவு முளவே" என்றதனால அம்மாவென அடுக்கிய திசைச்சொல்லாகிய விளாவணை, † "கடிசொலில்லை" என்பதனாற் கொள்க. அன்றி அம்மவென்ற அசைவிற்றரிச்சொற்கேட்பித்து உரையசையாயவிட்டது ‡ "உரைப்பொருட்கிளவி நீட்டமும் வரையார்" என்பதனானீண்டு அது பின்பு || அம்மவென்னு மசைச்சொனீட்டம் § விளியொடு கொள்ப தெளியுமோரே." என்பதனால், அம்மா கொற்றவென்ற வழிக் கொற்றனென்றது எதிர்முகமாக்கத்தான் கேளாயெனனும் பொருட்டாந்து நின்றதாகலிற் பிரிந்து நின்று விளியலாவென்றுணர்க." ஆராய்ந்து பொருந்துமாறுணர்க.

தொல்காப்பியம், சொல்லதிகாரம், விளிமரபு ௩௩
† ,, ,, எச்சவியல். ௫௬.
‡ ,, எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல் ௩௩.
|| ,, சொல்லதிகாரம், விளிமரபு ௩௮.

ன ஆற்றேனை ஆதலின் அறனே! இநநோயுடனே இறவா நினைறேன்; தேவிகாள்! என் மகனை முன் னொருகாறு கணடயான் என கண்குளிரப் பின்னொரு காற காண்டறகுத தபபின தீவினையாது? அதனைக் கூறுவீா; இனி எனபோலப் பாவிகளான மகளிா தோன்றற்க என்று அாறறி வீழ்ந்தாள்.

தோழர், அாசன் பட்டதற்கு வருந்தித் தேவி உயிா வாழ்ந்திருந்ததறகு மகிழ்நது காரியம முடிநத படி கண்டீரே என்று வெளியாககககூறிக கட்டியங்கா ரன ஒருபொருளோ யாமேகூறறமாய் அவனுயிரை யுணடோம் உலகையுங கொண்டோம் என்று உவ கையிக்கு ஆடினார். ஆடிந தேவியைத தேற்றிச சீ வகனுக்கு இறததலில்லை அவன் கொலைக் களத்தைக் கறுகின அளவிலே ஒரு தெய்வம அதது ன்பததைக் கெக நீஙகினான். யாஙகள் நின்னைததொழுது போ ந்றகுச சேவடியைச் சோநதோம், சோநத யாங கள், சீவகன வணிகனலலனா அரசனுநிலைக் கண் டேம எனறு கூறினார். தேவி, மகிழநது பரணி நாளிலே பிறந்த சசசாநதன அநநாளின் விசேடத தால பகைவெல்லாவறறிறகும ஒரு காவலிலலாத தான் எனனிடங்கொணட அன்பாலே தரணியைக் காவானாய இரணியன பட்டதனைத் தானும பட்டான் என்றாள்.

இன்னநாளிலே பிறந்த இவனொன்று கூறு மல அரசாககு மாபாதலானும, பரணி, யானை பிற நதநாளாதலாமல அவயானைபோற பகையை மதியா ததலானும பரணிநாளிலே பிறந்த சசசாநதனென

னென்றும் தேவிகூறினாள். கூறினவள் இரணியனை தன்னை இடிக்குந்துணையாரது சொற்கொள்ளாதே தன்னையன்றி வேறொருதத்துவம் இல்லையென்றமையாலே கேடுவிளைந்து உதவியின்றி மாய்ந்தாற்போல, சச்சந்தனை அமைச்சர் நிலமுந்திருவும் நீங்குமென்று கூறவும் அவர்மொழியைக் கொள்ளாதே கட்டியங்காரனைத் தனக்கு உற்றவனென்று கொண்டுபின் வேறு உதவியின்றி மாய்ந்தானாதலால் இரணியனைப் பட்டதனைத் தானும் பட்டான் என்றாள்.

தேவி பின்பு தோழரைநோக்கி அரசன், விசயை என்ற நல்வினை இல்லாதேன்மேல் வைத்தானாதலாலே இறத்தலின், யான் அடைந்த தீங்கெல்லாவற்றையும் நம்பிக்குச்சொல்லி இதனாலன் வருந்தாதபடி அவனையென்னிடம் அழைத்துவருக; இக்காரியத்திலே சிறிதும் சீவகர் கலக்கு பிறர்க்குக் கூறன்மின் யாவரையும் தேறன்மின் அறியாதாரோடும் மாற்றாரோடும் பேசன்மின், வேலினீர்! பகைவர் மனம் பாம்பின்போக்கும் மகளிர் நெஞ்சும் மின்னும் செவ்விதாக நில்லாவாதலால் உமது உள்ளத்தைப் பேணியொழுகுமின் என்று கூறினாள். தோழர், ஒருமாதத்திற்குள்ளே சீவகனை அடிகள் திருவடியைச் சேரும்படி கொணர்கின்றோம் பின்பு பகையை வெல்லுகின்றோம் என்று கூறி அவள்பாதத்தை வணங்கிச் சேனையோடு தோழர் நாலவரும் சென்று, மாந்தர் இயங்காத மலைகளையும் யாறுகளையும் கடந்து மாந்தரேமவிந்தநாட்டிலே ஏமமாபுரத்திற்கு நாற்காதத்தெல்லையில் நதிக்கரையிற் சேர்ந்தார். தோழர், அழகுடைய கான்யாற்று நீரடைகரையிற் பொழிலிலே உய

நகமணையிலே இருந்து சீவகனை யாம் சேரும் திறம யாது என்று எண்ணினா. எண்ணுங்கால பதுமுகன், துரியோதனன விராடபுரத்தே நிரை அடித்து தருமன் முதலாயினுர் இருத்தலை அறிந்தவாறுபோல யாமும சீவகன் இருத்தலை அறிதறகு மன்னனது நிரையைக கொள்வோம், சீவகன் மீடக வந்தால அவனைபபோாநகனைதிற காணபதறகு ஐயமிலலை என்று தன்னையொழிந்த மூவர்க்கும் கூறினன். புததிசேனன, யாம நிரைகொள்ளின் நகரில வேன் இலலையாயின் பெருமபடைவரும; யாம் அதுகணடு மீண்டால் அஞ்சினேம என்று நமககுப பழி வரும, மீளாமல்நினறால யானை குளிககுமபடியான குருதிப பெருக்குணடாகும இதனையும எண்ணுமின என்றன். என்றபினனும பதுமுகன கூறியதுவே காரியமென்று நால்வரும் இருந்தஅளவிலே, அறிந்துவாருமென்று காம முனபோவிடுதத ஒறறர்கள மூவரும வந்தார; வந்து அஞ்சனமலையொத்த வசாயசுநதரம என்னும யானை, மதங்கொணடு முழங்கிப பாகர்கரு அடங்காதாயிறறு; அதைச சீவகன், அடக்கிப புரோசைக்கயிற்றைப பிடித்து ஏறி அப்புது அப்புது அது அது ஐஐ என்று கூறிக் கையாலே பொயக்கத்தட்டி அப்புரோசைக கயிறறை இரண்டு வடங்கொணடு சேரக்கட்டி நெடுந்தோட்டியையும் குறுந்தோட்டியையும பிணைததுஅதின் கழுததிலே இடடு பட்டததை கட்டி நகிடு வயிற்றிற் கட்டுஞ்கசசைகட்டி இரணடுபககத்திலும மணி அணிந்து தொடரைக் கட்டவிழ்தது அடியிர ... சோசைக்கயிறு ... செலுத்தி

அரசனாகிய நரதேவனும் புகழும்படிவந்து தோன்றினான். தோன்றி, திகிரியும் சக்கிரமும்போலே வட்டமும் வீதியும் பத்தியும் ஆகிய இவற்றைத் தப்பாத்படி ஒருகணத்திலே நடத்தினான். அரசன் முதலாயினார் பார்த்துக் குஞ்சரம் ஏறுதற்கு இவ்வுலகில் இவனல்லது மற்றொருவன் இல்லை என்று புகழ்ந்தார். சீவகன், பட்டத்திற்குரிய அவ்யானையைக் கம்பத்தோடே சேர்த்துக்கட்டி நகர்தொழத் தம்பியும் தானும் மதமகிழ்ந்து கைக்கொண்ட கோயிலிலேபுகுந்தார் யாங்கள் கண்டோம் என்று கூறினார். ஒற்றர், சீவகன் கொண்டிரா நின்ற உருவை அறியாராயினும் நந்தட்டனைக் கண்டு யானையை அடக்கினவன், சீவகன் என்றுணர்ந்து சென்று கூறலும், பதுமுகன் மறைந்தவேடங்கொண்ட ஒற்றரொருவர் சொல்லிய சொல்லுக்கு மற்ற இருவர் சொல்லும் ஒத்ததென்று கருதி அம்மூவர்க்கும் நிதிகொடுத்தான் பின்பு இளையர் நிரைகொள்ளக் கவசமணிந்து துடியும் பறையும் வளையும் ஒலிக்கச்சென்று அம்பெய்து நிரையை வளைத்தார். ஆயரும் போரைவிளைத்து அதனைக் கைவிட்டு அரசனுக்கு அறிவிக்கப் போயினார்.

அப்பொழுது, நரதேவன் நந்தட்டனை நோக்கி நும்முடைய நாட்டையும் நகரையும் குலத்தையும் கூறுக என, நந்தட்டன் அடிகள்! எமது நாடு ஏமாங்கதம்; மூதூர் இராசமாபுரம் இனி எங்குலத்தைக்கேட்க என்றலும், புறவிவெள்ளம்கோவின் நிரையைக் கவர்ந்தது என்று ஆயர் செய்தபூசல் அரசன் செவியிற்பட்டது; அவன், சீறித்தீப்பிறப்பத்

கரு இத்தன்மையர் என்று நோக்கினான். கனகமாலை, இவரோ நிரை அடித்த கள்வர் என்று கூறி இனி இவர் தண்டிக்கப்படத்தக்கவர் என்று நகையாடி விருந்து செய்தாள். புத்திசேனன், தத்தை கொடுத்த ஓலையை நந்தனிடம் இருந்த சீவகன் கையிற்கொடுத்தான். சீவகன் வாங்கித் திருவடிகட்கு அடிசிலும் மஞ்சனமும் உள்ளிட்டனவும் அமைக்கும் பொழுதே உற்றுங்காக்கப்பட்டு அமைவனவாக வேண்டும் என்று சிற்றடிச்சி தத்தையாகிய நான் மலரடிக்கீழ் விழுந்தேன்; எம்மன்னனாகிய கலுழவேகன், எலிமயிர்ப்போர்வையோடுகலனும் * மதுத்தண்டோடு உடையாடையும் சாந்தும் சிலையும் அம்பும் அயிலும் வாளும் வரவிட்டான். அவற்றைக்கொண்டு வந்தாரைத் தனியேவைத்து அவன் மாத்திரம் கேட்கும்படி, † ஓராண்டிற்கு ஐந்து மாதமளவு குறையாக வுடையனுய்த்த தமரோடே ஏமமாபுரத்தே அகன்றன இக்காரியம் சாமிதானே அருளிச்செய்தான் என்றுகூறினேன். கட்டியங்காரன் சிறை செய்தான் என்றபழி, வெள்ளிமலைமேல் பரவுதலை அஞ்சிவேறே சிலகாரியங்களைக் கூறிப்போக விட்டேன். இனி இப்பழியைப் போக்கி அரசுரிமையைக் கொள்வதொழிய மகளிரைக்கொள்வதனால் ஒரு புகழில்லை. எங்கையாகிய குணமாலை அப்பழியேயன்றிப் பின்னும் ஓர் பழியை நினக்கு உண்டாக்குவாள் போன்று நின்னைப்பிரிந்து ஆற்றுளாய்! இது இரவு இது

* மதுத்தண்டு—வீரபானமிருக்குங் குழாய.

† ஓராண்டிற்கு ஐந்துமாதங் குறையெனவே சீவகன் சென்று ஏழுமாதமாயின.

கல் என்று அறியாளாய் மதியை நோக்கி வெம
மையாலே ஞாயிறே! நீ சிறியை என்கின்ருள். ஞா
ற்றை நோக்கித் தண்மையாலே மதியே! நீ பெ
யை எனகின்ருள். அவளது முகமும் தோளும
டுதலாலே நினைடிச்சி பிழைப்பாளோ இப்பா
ர கிளி, சீவகன் நாளைவரும நீ வாடாதே என்
கூறக், குணமாலே நீ கூறியநாளெனனும நாள
ணித்தோ? சேயத்தோ? எனறு அக்கிளிசிரிக
படி அதனை வினவுவாள் இவள துயா இத்தனைம
து, * புது மணவாளா நீங்கா துஎனது நெஞ்சிட
ாராதலால யான வருந்தேனுயப்பொழுது போக
வேண. இனித்தாம தமமைப பாதுகாப்பாரா க
று வாசித்தான்.

காந்தருவதத்தைப புதுமணவாளா எனறு புல
சொலலெழுதிய ஓலேயைச சீவகன வாசித்து
டி துளக்கி முடிவில எழுதிய தனக்குக்காவலாகிய
ருசையை உட்கொண்டு தன பிறபடைத்தோழா
தரிந்தனா என்று தெரிந்து அவரைசசோந்து நீா
ன திறமகேட்டது எங்கேயோ எனறு வினவினன.
தாழா, ஐயனே! சசசந்தலதேவி விசையை நீ
ழவேண்டுமென்று தண்டகவனததிலே தவஞ்செ
திருந்தவளாக கண்டு நின திறம அறிந்தோம என
. சீவகன், என்னே எனனே நீா மொழிந்தது
னனே என்று கேட்பத தோழா, தேவியே சீவக
து முனனே நினறு சொனனுற் போலச செயதி
லலாம சொனனா. சீவகன, எனனைபபெறுதற
ரிய தீவினையையுடையவாக்குச சேராதிருக்கும

* புதுமணவாளா எனறது சீவகனே.

சில தீவினையும் இனி இல்லை. அத்தீவினையுற்ற அடி
களும், என்பொருட்டு இன்னும் நீங்கின்றி இருக்
கின்றாரோ என்று வினவினான். தோழர், இருக்கின்
றார் என்றுகூறவே, சீவகன், அவர் இருக்கின்ற
திசை எத்திசை எத்திசை என்று வினவியுணர்ந்து
அத்திசைநோக்கி வணங்கி அரசன் கோயிலுக்குப்
போனான். அவன் சென்ற அளவிலே, வேந்தன்
சீவகன் குலத்தைக் கேட்கவேண்டி அவன் தோ
ழரை நோக்கிக் குமரன் எக்குலத்தான் என்று வின
வுற்றுக் குமரன் என்று கூறிய அளவிலே, தோ
ழர் அவனைக் குறிப்பறிந்து இவன் குருகுலத்தான
என்றார். அரசன் இவன் குருகுலத்தான் என்
றால் இது யான் முன்கருதிய குலமே இவனை
எனது எண்ணத்திலே வெளியானான் என்று கூறி
ச் சீவகனைத் தழுவினான்; தழுவி அமைச்சருட
னே காரியத்தை எண்ணிச் சீவகனைப்போக்கிய
நெறியாலே போகவிட்டான். அச்சீவகன், போகத்
தறிவித்தற்குக் கனகமாலை கோயிலிலே சென்று அவ
ளைக்கண்டு கோதாய்! நீ எனது மனத்துள்ளே உ
றைகின்ற உயிராயுள்ளாய் ஆதலால் நீ என்னைப்பிரி
க்காயல்லை என்று பிரிவு உணர்த்தக் கனகமாலை அத
னையுணர்ந்து கையிலிருந்த செங்குவளையை நெ
டுயிர்ப்பாலே கருங்குவளையாக்கினாள். சீவகன்
அது கண்டு அவளை மனமகிழப்புல்லி அங்கு நின்று
ம்போய் நரதேவன் புதல்வராகிய மைத்துனன்மா
ரைத் தழுவிக்கொண்டு குதிரையில் ஏறினான். அப்
பொழுது நன்னிமித்தமாகச் சங்குமுழங்கின.

கனகமாலையாரிலம்பகம்.

முற்றிற்று.

ண்ணிய கோலாலே அடிக்கற்குப பற்றுத நாகம, ன்னதுபல்லாலே, அருவியையுடைய மலை வீழுவ போல யானை புலமபி வீழகெகால்லும. ஆதலா ற்பஞ்சியினும மெல்லியதாயினும பகையைச சிறி தென்று கருதவேணடா; அதனை அஞ்சித்தனனைக காக்கவேணடும்; விடாது இருததலிற் பலவியொத் தும, வேண்டுவன செயது போற்றவிறுய்போன றும, சிலமுதலியவற்றை யிவற்குக காததலால அரு நதவர்போனறும, ஐமபொறியும தனக்கு அடங்கலா ல் ஆமைபோனறும், தீதுண்டாயின அது நீரும்படி பகைவர்போல இடிததும அடிசில்முதலிய வற்றில வேண்டுவனவற்றை நுகர்விததலில மனைவியொத தும, நமக்குப பற்றுனவனைக காப்பீராக எனறான். சீவகனை, இஙஙனம் பதுமுகன் காபபாறுக பனறு வை, அவனும உடனபட்டான.

சீவகன் முதலியோர் சென்று, மக்கள்வழிவா காபபமுக்கும இலுத்தம் என்னும மாத்தின் பககததிற குழியிலே பனைமரம்போலப பாந்தள்கிடந்து துயில தலையும துயிலெழுமபடி யாளி இடிபபதையும சந்தனமாமும் திப்பூமாமும தக்கோலமாமும் இல வங்கமாமும கருப்பூரமாமும புழுகோடு நாற்காதம நாறுவதையும கண்டு தண்டகவனம் சோந்து படா முதலியவற்றையும் சிற்றுலவட்டத்தையும் போால வட்டத்தையும் காநதத்தையும் குங்குமம வைக்கும் குகையையும பரணிக்கூடடையும் பவளககாக கதையும் தூக்கித் தாபதரிடததைத் தேவருல காககினா. ஆங்கு மாங்கள் மகளிர் கண்ணுலே நோக்கப்பெற்றும கையாலே தீண்டப்பெற்றும கனி

தன கனிந்தன. மலராதன மலர்ந்தன. அம் ...ரி கையாலேதீண்டி அலர்கொய்ய மாங்கள் தா ...துகொடுப்பன. ஆகலால் மரத்திற்கு உயிர் இல் லையென்பார் பிறரா அலலராயின பேயகள் என்றல் து வேறே பேசலாமோ. என்று தமமுட்கூறி ர. மயிலினின்றிழியும முருகன்போலே சீவ ர, மாவினின்றிழிந்து, பதுமுகனைநோக்கி அறி லலாரைச் செவவி அறியவிடுத்தால் தேவி இருப து வெளியாகும அஃது ஆகாமையாலே நீயே சென்று அடிகளது செவ்வியை அறிஎன்றான். தே , விடியறகாலததிருவிலே கனவிலே * நமபி வரக் லடேன். இடக்கண் ஆடாநின்றது. பல்லியும லஇடத்தே இட்டன. ஆதலால நமபி இன்னே நமோ என்று கூறிநின்ற அளவிலே, பதுமுகன சென்று தொழுது நமபிவந்தான் என்றான். தேவி, பன் எவவிடத்தான் என்று வினவினாள். பது கன், இவன என்று கூறுமுனனம, அன்பு மிகுதி ல பின்னே சென்ற சீவகன், அடிகள்! அடி யன யான என்று தொழுது அடியைப்பிடித்து ழுதான். தேவி ஐய! இங்குவருக என்றேத ததழுவிச † சீவகசாமியிரே! அரசனை அமரி ல கைவிட்டு நுமமைச் சுடுகாட்டிலே கைவிட்ட

---

* நம்பி-நம முதனிலையாக நமக்கு இன்னானென்னும் பாருளபட வருவதோர் உயர்சசிசொல்.

† "பண்புகொள் பெயருமதனோரற்றே" என்ற சூத் ரத்திறதன்னின முடிததலைனடததால் சீவகசாமியீரே ன ஈரேடு ஏகாரம பெற்றது. மேலேகண்ட சூத்திரம தொலகாப்பியம, சொல்லதிகாரம், விளிமரபு உ௬.

கொடியேனைக்காணவந்தீர் அன்பு மிகுதி இருந்
வாறு என்னே அரசனபட, நட்புடையவர் வரு
ந்த அடிகள் வருத்தம் அடைய யான் பிறந்ததல
னறி இப்பொழுதும இடையனகொன்ற மரத்தின்
தனமையுடையேனாகிய யான்றந்த துன்பககடலில
அழுந்தவேண்டா. இத்துனபத்தைக களைக எ
றன. தேவி, சீவகனைநோககி நினககுத தாயாவா
சுநந்தையே யானல்லேன தந்தையாவான் க
துசகடனே கோனலலன் என்றுகூறிச சீவகன் ம
ழும்படி எனக்குச் சிறுவனாவான் நந்தட்டனே
லலை ஆதலாற குமர! இஙகுவருக என்று கூ
அந்நந்தட்டனுககுத் தலைமையாகிய விருந்தை
செய்தாள். மயில தனனுடைய பார்ப்புகளை இ
ண்டுசிறகாலும் புலவிய்தன்மைபோலத்தேவி த
னுடைய சிறுவரை இரண்டு கையினாலும புல
முகமனாகிய மொழிகளைத தோழாக்கெல்லாம கூ
அடிசிலை யூட்டினாள். ஊட்டி ஆறுநாளகழிந
பினபு தேவி சீவகன்முதலியோரை வேறேகொண
டிருந்து மலையிலும காட்டிலும உறைகினற குறுநி
மன்னாபெண்களைக கொள்ளுதலும வலிய அரச
பெண்களைக்கொள்ளுதலும மன்னாமுறைமையெ
று மதிவலலோா சொலலுவர். ஆதலொனறை
பெறுதல, பழம்பகைமையை நெருஙகிலே நிலைபெறு
துதல், முள்ளைக்கொண்டு முளளைக்களைதல்போல
தமக்குப் பகைவராய உறவாயிருப்பவரிருவரை
பேதுசெய்து ஒருவரைக்கொண்டு ஒருவரைக்கொ
ல்லல், சோந்துவந்து வினைசெயவாரை பிரித்து
சேர்த்துக்கொள்ளுதல், இவைகளெல்லாம அரச

றுமப்பட்டகாரியம். ஒற்றரைக்கொண்டு ஒற்
றரை ஆராய்தலும, நீதிநூல் கற்ற அமைச்சரைக
லந்தொன்றுகொள்ளுதலும, இவனை இதற்கு உரிய
னென்று விசாரித்து மந்திர ஏற்றத்தையும தன
னிற சுற்றத்தையும பெருக்கலும வெற்றிகொள
றும கருத்துடைய அரசற்கு உபாயம். பொருள்
வெற்றியையும மதிப்பையும கல்வியையும அழகை
யும் கொடாக்கும். குறைந்தவரை உயரச்செய
யும அறிவும் அப்பொருளாலே படையாம்; அ
தனாலே காணியாம்; அதனாலே மிகுந்த பொரு
ளாம்; அது ஆறுமளவில விடுகிடைக்கும். காலை
யாம நாடனை நீங்கிப்பொருளுமின்றி இருப
னேபெரும. இந்நிலையை நீக்கற்குரிய அமைச்சரும
மந்திரிகளிலே நீ துணிந்தகாரியம யாது என்று கேட்
டான். சீவகன, பொருளளவிலே கட்டியங்கா
ன் பாம்பாகும நந்தட்டனை கருடனாகும ஆதலால
பொருந்தவேண்டா என்று சொன்னான். தேவி நந
தன கருடனே என்று காதலாலே களித்துநோக்கிச
சனைமையாலே அவனைத்தீண்டி இந்தோள்கள், சீவக
னுக்கு நிலத்தைத் தந்து அதனைக்காவாதே இருப
தோ காட்டிலே ஒரு காக்கை பகலிலேசென்று
பொணிருந்த கூகையை கொன்றதன்றோ சிங்கம
இடமறியாதே நரிமேலே பாய்ந்து அந்நரிகளாகிய
வலையிலே அகப்பட்டதன்றோ ஆதலால யாம்
இடமுடையேம என்று மகளிரபோலே தாம நினை
ந்தே துணிந்துசெய்யாமல் காலத்தையும இட
த்தையும நாடிச் சூழுமவினைவல்லார்க்கு அரிய வி
னையுமுண்டோ என்று சொன்னாள். பதுமுகன

யமது வலியாலே பகைவரைவென்று நிலத்தைப் பெறுவேம். அடிகள் அருளிச்செய்யுமதே தாபதம் என்றான். தேவி செம்மால்! மேகமும் கதிரவன்தேரும் தோன்றின அளவிலே முல்லையும் தாமரையும் மலருமாறுபோல உனது சீர்தோன்றின அளவிலே நின்மாமனது அகமலர்மலரும் ஆதலால் அவனிடத்தேசென்று அவன் ஏவலோடு பகையைக் கொல்வாயென்றாள். சீவகன் அடிகள்! கூறியது நன்று தோழர் அறிவித்தபொழுதே அந்தக்காரியமே யானும் துணிந்தேன் இனி நாளை இராசமாபுரத்தே சென்று சுற்றத்திற்கு யான் இருக்கின்றபடியை அறிவித்து ஒருநாளிருந்து மற்றைநாளே போந்து அடியேன் சேர்வேன் நீர் என்மாமனிடத்தே செல்லும் என்று சொன்னான். தவமொழுவார் தனியேபோதல் மரபன்றென்று தேவியின்போலே நோன்புகொண்டமகளிராய அப்பள்ளியில் உறைவார் நூற்றுவரோடே போனாள்.

சீவகன் குன்றையும் ஆற்றையும் கடந்து ஏமாங்கத நாட்டைச்சார்ந்து கரும்பில் வைத்ததேன் சுரும்பின் வாய்த்துளிக்கும் பொழிலிலே தங்கினான் குதிரை முதலியன சுமைக்கலைவிட்டு இளைப்பாறின இளையரும் வருத்தம் நீங்கினார். கோதையார் அறுசுவையுடைய நால்வகை அமுதை ஆக்கினார். கருப்புக்கட்டியோடு கலந்த அரிசியையும் கொள்ளையும் வருத்தந்தீர நீரிலேநீந்தின குதிரைக்கு இட்டார் எருது முதலியன மேய்ந்து நிழலிலே கிடந்தன சீவகன் முதலியோர் உண்டபின்பு கழியின்மலர்கள் கண்விழித்தன கமலம் துயின்றன அவ்வந்திக்கால

ந்திலே மணிவிளங்கின அகிற்புகை எழுந்தன நரம்பு ஒலித்தன. குழலொடாடலைக்கூடின முழவமும் பஞ்சதாளமும் குதிரை மணியோடு ஒலித்தன. சீவகன் மகளிர்பாடிய கீதத்தைக்கொண்டாடிய பின்பு படுக்கையைச் சார்ந்து நரதேவனை வரவிட்ட நாகந்தகுரிய மகளிரை நுகர்ந்து பொழுது விடிந்த பொழுது கையாலே முகங்கழுவி மலர்தூவி முனிவனை வணங்கி கடனைகளை முடித்து இராசமாபுரத்தின் வளமையைக் காண்டற்குச் சென்று பார்த்து மகிழ்ந்து வீதியிற் போனான். ஆங்கு விமலை பந்தாடினாள். மாலையிலேமறைந்த பந்து கையிடத்தவாம், குழற் புறத்தவாகிய பந்து முகத்திடத்தவாம்; உச்சியிற்போன பந்து மீண்டும மாலைக்குள்ளேயாம்; மாலைமேலேபோய் உயர்ந்தபந்து மீண்டு விரலிடத்தனவாய்க் கையிடத்தனவாம். இங்ஙனம்பந்தடிக்கையில் ஒருபந்து எழுந்துபோந்து வீதியிற் சீவகன் முன்னேவிழ்ந்தது. அப்பந்தை எடுக்கவந்தவள் சீவகனைப்பார்த்துக்காமநோய்கொண்டு இக்கள்வன், வடிவுகொண்டு உலகிலேவந்த காமனென்று கருதினாள். சீவகன் அவளைக்காதலித்து அவள்தந்தையாகிய சாகரதத்தனுடையகடையிலே வருந்தி இருந்தான், இருந்தவன் அவளுடைய மதிபோலு முகத்திலே இருக்கின்றவை, ஒருகால் அருளோடுகருமம செய்தலாலே கண்ணோ, கயலோ, வடுப்பிளவோ, கழுநீரோ நீலமோ, தாமரையோ, என்று சொல்லுதற்கும், ஒருகால் பொதுநோக்கருமம செய்து கொல்லுதற்குத்தொடங்குதலாலே கூற்றமோ, வாளோ, வேலோ, அம்போ, என்றுசொல்லுதற்கும தக்கனவாயிருந்

(கேவலோற்பத்தி)

தெய்ய அந்த அப்புமாரிலை கலக்கமில்லாத * அசுபமென்னும் குந்தத்தாலே விலக்கி, உடம்பு வெறுத்தலாகிய வாளாலே விரைந்து அவனது உயிரை உண்டான். பின்னர்ச் சீவகன், ஐம்பொறியாகிய பகைவரைக் கொன்று, ஐயும் பித்தும் வளியுமாகிய மூவரையும வென்றான். † குரோதன் முதலிய நால்வரும் போர்செய்யச் சீவகன் நிரோதனை என்னும அம்பாலே கொன்று நித்திரையும் பிரசலையும என்னும் பெயருடையோரை, விராகமென்னும் வேலாலே கொன்றான். பின்னர் உணர்வோடு காட்சிபேறென்று சொல்லப்பட்டு மறுபடையாகவருமரசர் புகைத்து பொங்கிப் படையோடு பொருதார். சுக்கிலத்தியானமென்னும் அம்புபட்டு அவர் பட்டார். பின்னர்ச் சீவகன் ஆகமததிலோதிய கூற்றிலே பொருந்தி, வெய்யோன், உலகுச்சியிலே முளைதத தன்மைபோலப் பரக்கப்போய உலக மூன்றையும விழுங்கி அலோகத்தையும விழுங்கிப்பின்னா ஆதியு

---

* அசுபமாவது—தோல, இரததம், இறைச்சி மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீராயிருக்கும் இவ்வுடம்பெனறு கருதின கருத்து.

† குரோதன் முதலிய நால்வரென்றது—சஞ்சுவலனகுரோதம், சஞ்சுவலனமானம், சஞ்சுவலனமாயை, சஞ்சுவலனலோபம், என்பனவறறை † அவைமுறையே நீர்க்கீறுப் போல்வதூஉம் செங்கொழுந்து போல்வதூஉம், கடநீர்போல்வதூஉம், துகிலினீா போல்வதூஉமென்று கொள்ளப்படும்.

ம, அந்தமும், அகன்ற * நான்கு கூறுகிய வெற்
கொடியை யெடுத்து இறைவனும தன்மை
கொண்டான். தேவர் களிறு தேர் புரவி தே
கை விசும்பியங்குகரி ஆளி விடை மயில அ
ணம் நாகம் என்னும் இவற்றையும் பிறவற்
மேறி வளையும் முரசும் முழங்கவந்து நாதனுடை
தாளைக்கோயிலாகக் கொண்டார். விஞ்சைவேந்
கற்பகமாலையையேந்தி அன்னம்பறப்பனபோல
றந்து வந்து தாளைச்சேர்ந்தார். பின்னர் நிலத்து
னர் மாலையை யேந்திக்கடல்போல் வந்து தா
சேர்ந்தார். மண்ணவர்சேர்ந்து மலர்மழை சொ
தார். இந்திரர் பொன்மாரி சொரிந்து வாழ்த்தி
சுதஞ்சணன்பார்த்து ஆடிக்களிப்புற்றான். அப்
ழுது கவரிவிச ஆசனம சேர்ந்தது உலகைக்காக்
குடைவந்து கவித்தது.

**கேவலோற்பத்தி,**

*முற்றிற்று.*

## மணியரும்பதம்.

வானோரேந்துகின்றமலர், சாந்தம், சுண்
புகை, பிண்டித்தாமம், ஆகிய இவையெல்லாங்
ட இயல்பாகிய மணநாறுஞ் சீவகனது திருவடித்
மரையைத் தேவர் முடிமேலே யணிந்தார்.
சையர், வேறோர் சிந்தையிலராய் நறுஞ்சாந்த
நிலமெழுகி மலர்வேய்ந்து காலனொடு காமனைக்

---

* நான்காவன—அநந்தஞானம், அநந்ததரிசனம்,
நந்தவீரியம், அநந்தசுகம், எனவிவை.

(மணியரும்பதம்.)

டுத்தோய்! எமப்பிறவி யறுவதாக என்று கூறி அந் துறவு நெறிக்கடவு ளடியைத் தொழுதார். அம ரர், சுகநிலத்தியானத்தை யுடைய சிந்தை விளங் குகையினாலே சக்குதரிசனாவரணீயம், அசக்குதரி சனாவரணீயம், அவதிதரிசனாவரணீயம், கேவலதரிச னாவரணீயம், என்னு நான்கையும் அரிந்து, அநந்த ஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், என்னுநான்குசகுமவரமபாகிக்காலமூன்றையுமுண ர்ந்த கடவுளே! நின்னடிகளை யாமுந்தொழுவேம்; சுடர்போலிருந்தோய! நினனடிகளை யாமுந்தொழு வேம் என்று கூறிச்சீவகனாகிய முனீந்திரனைத் தொ ழுது துதித்தனர். தேவியராய்த் துறந்தவரும வந்து துதித்து மாசுதுணியா நின்றார். பரமாகமஙகள் கே ள்வியால் நிறைந்த அங்ஙனமாசு துணிக்கின்றதேவி யர், மெய்ப்பொருளை புலகிற்கு விளம்பிய வேந்தே! சுகதா! வினையைச செய்தவன சிறிதும் ஐயமின்றா ய் எண்வினையையுமடைவன. நலலபொருள்களை என்றாராயந்து ஒருகூற்றிலே தீயனவாகிய பொருள களையே சாற்றுகின்ற புலலறிவினையுடைய பரசம யிகள், பல்வினைகளையும் வளாத்தற்குச் செவிலித் தாயை யுண்டாக்கி விடடார். அது கேடடற்கு யாங்கள் நின்னடியை வணஙகுகின்றேம; அவர்கூறு வனவற்றை நீயுரையாயென்று தொழுதார். அவற றுள் அவன் தீவினையின் தன்மை கூறக் கேடட தே வியர், தீவினையாகிய குழவி, செற்றமென்னுஞ் செ விலி கையிலேயிருந்து காமமாகிய முலையையுண்டு வளர்ந்து வீங்கி யொழிதலின்றி நோய்க்கதிகளிலே

தவமுமென்று கூறிய இக்கோவையன்றிய பயனி
பொருளைக் கூறியவரை எமது நாக்கொண்டாடு
கின்று. பின்னர், அவன் நல்வினையின் தன்ன
கூறக் கேட்ட தேவியர், கோவே! நல்வினையாகி
குழவி, அருளென்னுஞ் செவிலி தழுவிக்கொ
டெடுப்ப, அவள் முலையையுண்டு வீங்கி யிந்
ஞயச் செல்லாநிற்குமென்று கூறிய சொலலாடு
அச்ச நீங்கினேமே; செல்வனே! நின் சேவடி
*மணிக்கு ஒளியைக் கொடுத்தன; எம்முடை
இருதயகமலங்கட்கு வாசத்தைக் கொடுத்தன;
னறியும் தருமத்திற்கு இருப்பிடத்தைக் கொடுத்
என்று புகழாநிற்பா.

### மணியரும்பதம்

முற்றிற்று.

## பரிநிர்வாணம்.

தேவியா, வாமன் குணத்தைப்பாட அ
ரினைகள், நிலாவாயக் காட்டின்கண்ணே (
டின. அத்தேவியர் அவன வார்த்தையைக் கேட்
களித்துத் துதித்துத் தொழுதார். பின்பு எ
ரும அவனடிகளை யேத்தி நெடுங்காலமாயச் செ
ந்த இருளையறுக்கும சுடரையெமக்கு அருளிச் (
வாய் என்றார். எனவும, அவன், இன்பம
பெரியபசு நான்கு கதியாகிய பெரியதொழுவி
தோன்றி மனவெழுச்சியாகிய புற்கற்றை ஊட்

---

*மணிக்கு—மணியுயிர்க்கு. மணியுயிர்—வீடுபெற்ற

(பரிநிர்வாணம்.)

பட்டுத்துன்பமாகிய பாலைச்சுரக்கும்; அதனிடத்து நின்ற பற்றையும் ஆர்வத்தையும் நீக்கி மலமற்றவன் திருவடிகளை அறிவுடையோர் சேர்வாராயின் அன்பைக் கொடுத்து அத்திருவடிகளைத்தியானித்துப் போய்ச *சிவகதியை அடையலாம்; நீர் ஆசையை மிகுத்து விதைத்து வாளைக் கையிலே உடைய மைந்தராயும் மகளிராயும் வரும் பிறவிநோயை விளைத்து இறந்து போகாமல, தேளைக் கைக்குள்ளே கொண்டதொக்கும் உடலை வெறுப்பீராயின், வாமனடியைக்கைதொழுமின்; ஒருவன் தனதுயிரைக் காக்குமாறுபோலப் பல உயிரையும் காப்பானாயின், இன்னுயிர்க்கிறைவனாய் இன்பமூர்த்தியாய்ப் † பொன்னுயிராய்ப் பிறந்து வீடுபெறுவான். அங்ஙனம் செய்யாது உயிர்க்கு நோய் செய்யின் ‡ இருப்புயிராகி நரகத்திலழுந்துவான்; அங்ஙனமழுந்தாதபடி நீவிர் ஈண்டு அறம்பெற்ற தன்மை, கடலின்கண்ணே வீழ்ந்த மணியைப் பெற்ற தொக்கும்; அவ்வறம்கேட்டோர் சிந்தை அவாச்செய்யாது; இனி அவ்வறத்தைத் துணிவீராக என்று கூறினான். அவருங் கேட்டு இறைஞ்சித் தொழுது

* சிவகதி—

† பொன்னுயிர்—தேவருயிர். வெள்ளியுயிர்—மக்களுயிர். செம்புயிர்—மக்களிற் கீழாயினருயிரும் விலங்கினுயிரும்.

‡ இருப்புயிர்—இரும்புயிர்—நரகருயிர்.

† ‡ இங்ஙனம்கூறல் இம்மதக்கொள்கை.

ஏத்தினர். சீவகசாமி அங்ஙனம் பருகலாம் த
மையவாய் அறியும் அமிர்தத்தைக் கூறி ஊட்டி
பிறவியை நித்துப்போதலைத் தான் விரும்பிச் சம
சரணத்தில் அறத்தை யுண்டாக்கிவைத்து வைகா
பபிறைபோன்ற பல்லியங்காசனத்தையுடையனு
விளங்கி விழவுக்குக் காரணமாய் சேதநீயம், ஆ
ஷயம், நாமம், கோத்திரம், என்னும்நான்குவினை
யுமவென்று வீடு பெற்றான். அப்பொழுது தேவ
இயமியமபி கொடியை யேந்தி பொன்மாரி சிந்
மலர் மாரிசொரிந்து சாந்தையும் அகிற்புகை
யும சோத்தி பரிநிர்வாண மென்னும் கல்யாணத்
விதியினற் செய்து வலங்கொண்டு போனர். கா
லன், கேவல ஞானமென்னும பொன் ஒருபாகமாக,
தாளொருபாகமாகப புல்லி உசசியிலே இருந்து இ
பக் கடலிலே அழுந்தினன். விண்ணோர், மாலை, ச
ந்தம், குங்குமம், சுண்ணம, புகை, விளக்கு என
மிவற்றை மாடங்களிலே ஏந்தப் பிரிதலும், பிண
யும, மூப்பும், சாதலும், பிறப்பும் இல்லாத அரிவை
யைப புல்லிச்சீவகன் உறைவானயினன்.

பரிநிர்வாணம்,

முற்றிறறு.

# தேவிமார் நோற்றுயர்வு.

சீவகன் அங்ஙனம் உறைகின்றகாலத்தே தே
வியர் எரும்பிற்கும் ஓரேதம் வாராமலே தம் கை
ளைப் பாதுகாத்துநடந்தும் இருந்தும் நின்றும் மீ

(தேவிமார் நோற்றுயர்வு.)

யெடுத்தாற்போன்ற மாதவத்தைச் செய்து தமது பெண்பிறப்புக் கெடும்படி தியானித்துப் பொல்லாதென்று கூறும் அப்பெண் பிறப்பைக் கைவிட்டு இந்திரராய்த் துறக்கத்தைச சார்ந்து தெய்வமகளிர் நடுங்கிநைய்யும்படி அவரைப்புல்லினர். கலவியாலுண்டாகியகாமத்தின்பயன் புலவியாதலால்அப்புலவியை மேல்விளைத்தற்கு அவர்தேவியர் ஊடிப்பார்த்த நோக்கு அவர்நெஞ்சினைவருத்தியது. அன்றியும் அந்தேவியர், அவரைநோக்கி நும்முள்ளத்தே திருமகளிருந்தாள்; நாமகளையும் வாக்காற் கூறினீரென்று புலவி விளைத்துக்கண்ணருகி நோக்குதலாலே அவ்விந்திரரது குஞ்சியிலே அத்தேவியரது சிலம்பார்த்தன. அங்ஙனம் ஆர்த்தலைப்பெற்றவர், அவர்புலவியைத்தீர்த்துக் கிண்கிணியையும் தாமத்தையுஞ்சோத்திக்கோலத்தைவாழ்த்தி மார்பிலேபொன்னையுரு சுண்ணத்தையுமணிந்து * இவளைக் கண்டகண்கள் இமைக்குமோவென்று கூறித்தைவர † மடந்தைஅதனைக் கண்டு இவ்விந்திரர், முற்பிறப்பில்தேவிமாராய்ச்சீவகன் முடியை மிதித்த வினைப்பயத்தாலே தாமும்

---

* இவளை யென்றும், † மடந்தை யென்றும் கூறியது ‡ "ஒருபாற்கிளவி யேனைப் பாற்கண்ணும்—வருவகைதானேவழக்கென மொழிப." என்னும் பொருளியல் வழுவமைதியாற் பன்மை கூறிற்றென்றுணர்க. ‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், உஅ.

